# இயற்கைக் காட்சியும் இறைமைக் காட்சியும்

# IYARKAI KATCHIYUM IRAIMAI KATCHIYUM

(திருமுறை அணிநல நெறியில்)



The Book is
Published with The Financial Assistance of
Tirumala Tirupati Devasthanams
Under Their Scheme
'Aid to Publish Religious Books'

"வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்
நந்தாத கொழுஞ்சுடரே! எங்கள் நம்பீ!
சிந்தா மணியே! திருவேங் கடம்மேய
எந்தாய் இனியா னுன்னையென் றும்விடேனே"

(திருமங்கையாழ்வார்)

—டாக்டர் இரா. இலட்சாராமன்
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
Dr. R. LAKSHARAMAN
M.A., M.Phil., Ph.D.,

பேரா. பொன். சௌரிராசனார் நூலக வெளியீடு : எண் 2.

## நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | இயற்கைக் காட்சியும் இறைமைக் காட்சியும் |
| ஆசிரியர் | : | டாக்டர். இரா. இலட்சாராமன் |
| பொருள் | : | சமய இலக்கிய ஆய்வு |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 1996 |
| வெளியீடு | : | பேரா. பொன். சௌரிராசனார் நூலகம், மனை எண்-8, திருநகர்-விரிவு, கிழக்குப் பாண்டி சாலை, விழுப்புரம்-605 602. |
| உரிமை | : | பேரா. பொன். சௌரிராசனார் நூலகத்திற்கே |
| தாள் | : | சேசாயி |
| அளவு | : | கிரவுன் 1.8 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 216 |
| விலை | : | ரூ. 40-00 |
| படிகள் | : | 1000 |
| அச்சிட்டோர் | : | கவிக்குயில் அச்சகம், 47, நல்லதம்பி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி : 836107 |

திருமலை திருப்பதி தேவத்தான நிதியுதவி பெற்றது.

# இயற்கைக் காட்சியும்
# இறைமைக் காட்சியும்

டாக்டர். இரா. இலட்சாராமன்,
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
விரிவுரையாளர்—முதுநிலை,
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி,
மயிலம்—604394.

பேரா. பொன். சௌரிராசனார்
நூலகம்,
மனை எண். 8, திருநகர்-விரிவு,
கிழக்குப் பாண்டி சாலை,
விழுப்புரம்-605602.

# நூல் காணிக்கை

இந்நூலை

எழுமையும் ஏமாப்புடையகல்வியில் உயர்நிலையில் நிறுத்தி

என் வளர்ச்சியைத் தன் வளர்ச்சியாகக் கருதும்

**உலகறிந்த ஆய்வறிஞர்**

டாக்டர். மு. வ. அவர்களின் தலைமை மாணவர்

படைப்புலகு போற்றும் இலக்கியச் சிற்பி

**என் ஆசான் ஞானத்தந்தை**

**பேரா. டாக்டர். சௌரிராசனார்** அவர்கட்கும்

என்னைத்

தன் குடும்பத்துப் பிள்ளையாகவே வளர்த்துவரும்

அன்னை **திருமதி. சந்திரா சௌரிராசனார்**

அவர்கட்கும்

காணிக்கையாக்கி

வணங்கி மகிழ்கிறேன்.

# பொருளடக்கம்

# நினைந்து நினைந்து நெஞ்சம் நிறைகிறேன்...

உலகமெலாம் உணர்ந்து ஓதற்கரிய சிவ ஞானியாகிய மயிலம்-பொம்மபுர ஆதீன குருமகா சந்நிதானங்களைப் பிள்ளைப் பருவ முதலே கண்டு வணங்கி மகிழும்பேறு பெற்றவன் யான். திருக்கோயில், திருமடத் தொடர்பு களிலும் தமிழ்க் கல்லூரியில் பயிலுங்காலும் என்னை ஆளாக்கி நெறிப்படுத்தியவர்கள் சுவாமிகள். தங்கள் தமிழ்க் கல்லூரியின் ஆசிரியப் பணியை அருளி வாழ்வைச் செம்மைப்படுத்தி, ஆசியுரையும் வழங்கிய குருமகா சந்நிதானங்களின் திருவடித் தாமரைகளை...

சமய, சமுதாயப் பணிகளில் தம்மை முழுமையும் ஈடுபடுத்தி, அவற்றின் முன்னேற்றத்திற்குப் பாடுபடும் சட்ட ஆலோசகர் சிவத்திரு. குமாரசிவ. இராசேந்திரன் பிகாம். பி.எல். அவர்களை...

ஆய்வியல் நெறிகளை மட்டுமல்லாமல் வாழ்வியல் நெறிகளையும் தெளியக் காட்டிய என் ஞானத்தந்தை பேரா. பொன். சௌரிராசனரர் அவர்களை...

என்னை வளர்ப்பு மகனாக்கி வாழ்விக்கும் அன்னை திருமதி சந்திரா சௌரிராசனரர் அவர்களை...

தந்தை மகற்காற்றும் உதவியாம் அவையத்து முந்தி யிருக்கச் செய்தலுக்காகத் தன் வாழ்வை அமைத்து வாழும் என் தந்தை, தமிழக அரசின் நல்லாசிரியர் விருது பெற்ற வித்வான் சு. இராமகிருட்டிணன் அவர்களை...

எனக்காகவே வாழ்ந்து, வானுறையும் தெய்வமாகி, என்னை வாழவைக்கும் என் அன்னை திருமதி சரோசினி அவர்களை...

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய டாக்டர் அ. அறிவுநம்பி அவர்கள் நாடறிந்த தமிழறிஞர். இதயம் கனத்த கவிதைத் தோட்டம். கம்பன் வீட்டுக் கட்டுத்தறி போல இவர்வீட்டு வாயில், தூண்கள், செங்கற்கள், சன்னல்

கள்... அஃறிணைகளே இவ்வாறெனில்... அறிவாற்றல் நிறைந்த இளைஞர்களைத் தமிழ் இலக்கிய உலகிற்கு அறிமுகப் படுத்தும் ஆய்வியல் அறிஞர். தூய்மையும் நேர்மையும் நெறியெனப் போற்றும் சான்றாளர். மிகப் பல பணிகளுக்கிடையேயும் முகமலர்ச்சியோடு ஒப்புக்கொண்டு மிகமிகக் குறைந்த காலத்தில் நூல் முழுமையும் படித்து சிறந்ததொரு அணிந்துரை வழங்கியருளிய அவர்களை...

என்னை முதன்முதலாகப் படைப்பாளனாக அறிமுகப் படுத்தி உயர்த்தி, என் முயற்சிகள் பயன்தரும் போதெல்லாம் என்னினும் பெரிதும் மகிழும் எம் கல்லூரி மேனாள் முதல்வரும் இந்நாள் ஒசூர் எம்.ஜி.ஆர். அறிவியல் கல்லூரி முதல்வருமாகிய டாக்டர். துரை. கார்த்திகேயன் அவர்களை...

என் நூல்கள் வெளிவருவதற்காக இல்லப்பொறுப்புகளைப் பெரிதும் தாங்கிச் சுமையாகக் கொள்ளாமல் சுகமாகக் கருதி மகிழும் என் துணைவியர் இல. சாந்தி, என் மகன் கோகுல், என் மகள் இராகமலிகா ஆகியோரை..

இந்நூல் உருவாக்கத்தின்போது மெய்ப்புகளைத் திருத்தும் கட்டமைப்புகளில் கருத்து செலுத்தியும் தன் பெரும்பணிகளுக்கு இடையிலே இரவுபகலாக உதவிய என் அருமை நண்பர் தமிழாசிரியர் திரு. த. செயப்பிரகாஷ் அவர்களை...

திருவேங்கடத்தான் திருவருள் இல்லையெனில் இந்நூலே இல்லை. இந்நூல் வெளிவர நிதியுதவி செய்த திருமலை திருப்பதி தேவத்தானத்தை, சிறப்பாகத் தலைமைப் பதிப்பாசிரியர் (சப்தகிரி) திரு. இராமமூர்த்தி அவர்களை...

நன்முறையில் அச்சிட்டு உதவிய கவிக்குயில் அச்சகத்தாரை...

நினைக்கிறேன் நினைக்கிறேன்... நெஞ்சம் நிறைகிறேன்.

உ

சிவமயம்

ஸ்ரீ பாலசித்த குருவே நம :

திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்

**ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருமடம்**

மயிலம்-604304 & பொம்மைய பாளையம்-605114

விழுப்புரம் ராமசாமி படையாட்சியார் மாவட்டம்

# ஆசியுரை

'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என்று திருஞான சம்பந்தர் இவ்வுலகில் வாழ்வோரை நோக்கி நம்பிக்கை யூட்டும்படியாகப் பாடியுள்ளார். 'பெண்ணின் நல்லா ளொடும் பெருந்தகை இருந்ததைச் சுட்டும் பரம்பொரு ளிருப்பை நினைவுபடுத்தி அவன்மீது நம்பிக்கை வைத்தால் எல்லாம் நன்கு நடைபெறும் என்பதை உணர்த்தி யுள்ளரர்கள்.

நம் நம்பிக்கைக்குரிய இறைவன் எப்படியுள்ளான் எனில் அணுவுக்குள் அணுவாகவும் உள்ளான்; அனைத்துப் பொருள்களிலும் வியாபித்தும் உள்ளான் என்பதை,

"இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
இயமானனாய் எறியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்டமூர்த்தி யாகி"

எனும் தேவார அடிகளால் நாம் உணரலாம். இறைமை யினை இயற்கைப் பொருள்கள் யாவற்றிலும் கண்டு வழிபட்ட நம் அருளாளர்கள் இறைவனைப் பாடுமிடத்தில் எல்லாம் இயற்கைப் பொருள்களை உவமையாகவோ, உருவகமாகவோ பிற வகைகளிலோ எடுத்தாண்டு இன்புற் றிருக்கிறார்கள். அவ்விறைவன் உறையும் திருத்தலங்கள் பலவும் இயற்கைச் சிறப்புடைய மலை, சோலை, நீர்நிலை என்பன போன்றவற்றின் பெயர்களோடு விளங்குவதை நூலாசிரியர் எடுத்துக்காட்டியுள்ளார்.

தோத்திரப் பாக்களைப் புனைந்த சமயக் குரவர் இறைவனுக்கோ இறைவிக்கோ இவர்கள் தொடர்பான

ஒரு பொருளுக்கோ விளக்கம்தர நினைத்த பொழுதெல் லாம் அவர்கள் மனக்கண் முன் தோற்றமளித்தவை பெரும் பாலும் இயற்கைப் பொருள்களாகவே இருந்தன. என்பதை இவ்வாய்வுவழி நன்கறியலாம். பக்தியுணர் வினைத் தூண்டுவதற்கு ஒரு வகையில் இயற்கையே பின்புலமாகியுள்ளது என்பதை இந்நூல் நன்கு வெளிப் படுத்துகிறது. இறைமையும் இயற்கையும் எவ்வெவ்வாறு இயைந்து நீக்கமற விளங்குகின்றன என்பதை இந்நூலா சிரியர் முனைவர் இரா. இலட்சாராமன் அவர்கள் உவமை, உருவகம் முதலிய அணிகள்வழி பல கோணங்களில் வகை தொகைப்படுத்தி எடுத்தியம்பியுள்ளார். இவர்தம் தமிழ்ப் புலமை மிக்க தந்தையார் திருவாளர் இராமகிருஷ்ணன் அவர்களும் இவரை ஆய்வில் நெறிப்படுத்திய பேராசிரியர் பொன். சௌரிராசனார் அவர்களும் பெரிதும் காரணமாய் விளங்குகின்றனர்.

திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் அடியவர்கள் இறைவனை எவ்வாற்றால் அறியவியலும் என்பதை நன்கு உணர்த்தியுள்ளார்கள்.

"அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன இத்திறத்தன் இவ்வண் ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே"

எனும் திருத்தாண்டக அடிகள் புகலுமாறு இறையருளே இறைவனைக் காணவும் வெளிப்படுத்தவும் வேண்டப்படுவ தாகும். அவ்வருள் பெற்ற அடியார்களின் பாடல்களில் உறையும் உண்மையை வெளிப்படுத்தவும் அதுவே வேண்டு வது என்பது தெளிவு.

திருவருளால் இந்நூலாசிரியர் திருமுறைகளை நுட்ப மாக ஆராய்ந்து பல கருத்துகளை இந்நூலின்கண் புலப் படுத்தியுள்ளமை மகிழ்வளிக்கிறது. இன்னின்னார் பாடல் களில் இவ்விவ்வாறு இயற்கை இடம்பெற்றுள்ளது என்று

பட்டும் நூலாசிரியர் பட்டியலிடவில்லை. ஒருபடி மேலே சென்று அவ்வாறு இருத்தற்கான காரணத்தையும் ஆராய்ந்து சுட்டியுள்ளார். எடுத்துக்காட்டாகச் சில வற்றைக் குறிப்பிடலாம்.

வினை, பயன், மெய், உரு எனும் உவம வகைகளில் நிலவுவைபகள் திருஞானசம்பந்தர் பாடல்களில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன என்பதற்கு அவர்தம் இளமைத் தன்மை காரணமாக அவர் இவ்வாறு பாடியிருக்கலாம் என்கிறார். அவர்தம் அருட்பாடல்களில் இறைவனைவிட இறைவிக்கே இயற்கை மிகுதியும் உவமை நிலையில் பயன் பட்டுள்ளது என்பதைச் சுட்டி, அதற்கு இறைவி அவருக்கு ஞானப்பாலைப் பொழிந்தூட்டிய நினைவே பெருங்காரண மாக இருக்கலாம் என்கிறார்.

அப்பர் தேவாரத்தில் அம்மையைவிட சிவபெரு மானுக்கு இயற்கை பெரிதும் உவமைப் பொருள்களாய்ப் பயன்பட்டுள்ளமைக்குத் தம் பக்தி அனுபவத்தில் இறைவ னருள் கிட்டியமையே முக்கிய காரணமாக இருக்கலாம் என்பதும் இயற்கை உருவகங்கள் திருஞான சம்பந்தரின் பாடல்களைவிட அப்பர் பாடல்களில் மிகுதியாக உள்ள மைக்கு அவருடைய வயதுமுதிர்வும் உலகியலறிவும் காரண மாக இருக்கலாம் என்று கூறியிருப்பதும் நூலாசிரியன் இலக்கிய ஒப்பாய்வு நுட்பத்தைக் காட்டுவதாக உள்ளது.

அன்பர்கள் இந்நூலைப் படிக்குங்கால் தமிழும் பக்தி யும் இணைந்து இயற்கை மணங்கமழ்தலை நன்குணரலாம். இத்தகு நூல்கள் பலவற்றைத் தமிழுலகிற்கு இவர் அளிக்கும் வகைகளில் திருவருளும் குருவருளும் துணை நிற்பதாக.

முனைவர் அ. அறிவு நம்பி பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்
பாரதியார் தமிழியல் நிறுவனம்
புதுவைப் பல்கலைக் கழகம்
புதுச்சேரி-605014.

# மகிழ்வுரை

நல்ல முறையில் ஏடுகளில் எழுதும் பலருக்கு மேடைகளில் பேசவராது; மேடையில் உரத்து முழங்கக்கூடிய பலருக்கு ஏடுகளில் எழுதுவது கடினமாயிருக்கும். நா ஆற்றலும் எழுத்தாற்றலும் ஒருங்கு கூடிய நிலையில் மிளிரக்கூடிய வல்லாண்மை ஒரு சிலருக்கே உண்டு. மயிலம் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் திருநிறை முனைவர் இரா. இலட்சாராமன் அவர்கள் பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் கொண்ட சிந்தனையாளர் என்பதைக் கண்கூடாகக் கண்டு மகிழ்ந்தவன் என்ற வகையிலே இந்த மகிழ்வுரையை வரைவதில் உவகை கொள்கிறேன். அவருடைய எழுத்துரையைப் படிக்க நேர்ந்தபொழுதில் அவரின் நான்காவது முகம் புலனாயிற்று. மதுரை — காமராசர் பல்கலைக் கழகத்தில் நான் பணிபுரிந்த போழ்தில் நடைபெற்ற ஒரு பயிலரங்கில் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழக ஆய்வாளராக அவர் முதலில் அறிமுகமானார். திண்டிவனத்தில் நிகழ்வுற்ற பாட்டரங்கம் ஒன்றில் அவரை ஒரு நல்ல கவிஞராகச் சந்திக்க முடிந்தது. கச்சிரராயப் பாளைய மேடை ஒன்று அவர் சிறந்த பட்டிமன்றப் பேச்சாளரென இனங்காட்டியது. அவர் ஓர் உயரிய நூல் படைப்பாளர் என்பதற்குச் சான்றே இந்த நூல். பணிபுரியும் இடத்தில் திரு. இரா. இலட்சாராமன் பெற்றுள்ள நற்பெயருக்கு அடையாளம் பல்வேறிடங்களில் பணிபுரியும் அவருடைய மாணவர்கள்.

ஆய்வுக் கண்ணோட்டத்துடன் எழுதப் பெற்றுள்ள 'இயற்கைக் காட்சியும் இறைமைக் காட்சியும்' (திருமுருகாற்றுப்படை அணிநல நெறியில்) என்ற தலைப்பிலான அவர்தம் நூல்

அவர்தம் சதுரப்பாட்டை எடுத்து மொழிகிறது. இயற்கையோடியைந்த காலம், இயற்கையைப் பயன் படுத்திய காலம், எந்திரமயமான பிற்காலம் எனக் காலந்தை மூன்றாகப் பிரிக்குமிடத்தில் ஆசிரியரின் அறிவியல் சார் அணுகுமுறையை கண்டுணர வியலுகிறது. சங்காலம், இயற்கைக் காலம், ஊர்ப் பெயர்களில் இயற்கையின் பதிவுகள், இயற்கைச் சூழலில் இறைமைத் தோற்றம் அதன் விளைவாய் ஆலயங்கள் என்ற செய்திகள் நிரல்படத்தொகுத்தும் பகுத்தும் எழுதும் அவரின் போக்கை உயர்த்துவன. வரலாற்றியல் பார்வையும் பொருளியல் போன்ற பல்துறைப் பார்வையும் இவரிடம் உள்ளன என பதை இந்நூலின் பக்கங்கள் பல நிறுவும். இயற்கைப் பொருள்களை ஏழு வகையாகப் பிரிக்கும் நூலாசிரியர் இலக்கியங்களில் அவை எந்த நோக்கத்துடன் பயன் படுத்தப் பெறுகின்றன என நுணுக்கமாகக் காட்டுகிறார். மேலோட்டமான தொகுப்பாகிவிடக் கூடாது என்ற கவலையுடன் அவர் கவனமாகவே செயல்பட்டிருப்பதற்கு ஒரு பதச் சோறு; பழம் ஒன்று உவமையாகிறது. உவமைப் பொருள்களில் பழமும் ஒன்றெனக் கூறுவதுடன் நூலாசிரி யர் நிற்கவில்லை. பழத்திலிருந்து சுவையைப் பிரித்தல் இல்லை. அதனைப் போல இறையடியார்களின் உள்ளத் தில் கலந்து நிற்கும் இறைவனைத் தனித்துக் காண்பதற் கில்லை. இவ்விளக்கத்தை மொழிகின்ற இடத்தில் ஆசிரியரின் ஆழமான சிந்தனையும் பாடுபொருளுடன் ஒன்றிநின்ற இயைபும் ஒருசேர வெளியாகின்றன.

உயிர்களை இயங்குயிர்கள், இயங்கா உயிர்கள் எனப் பிரித்துப் பேசுதல், அடியார் தம் எழுத்துகளைப் பொதுத் தன்மையாகவும் தனித்தன்மையாகவும் விளக்கிப் பகுப்பாய்வுப் பார்வையில் பகருதல், இடையிடையே விழுமிய பாடல்வரிகளைச் சான்று காட்டல், அணிநல இயற்கைப் பெருண்மைகளைப் படம்பிடிப்பதுடன்

நில்லாது அடியார்கட்கு அழகியல் நோக்கு இருந்ததென இயம்புதல் ஆகியவை நூலாசிரியரின் திறப்பாட்டைச் சிசப்புவன. "மடைவாயில் கொக்கு எவ்விதச் சலனமு மின்றித் தன் கருத்தையே முன் வைத்துக் காத்திருத்தல் யோகப் பயிற்சியில் புருவ நடுவாகிய இடைவாசலை இனிது நோக்கியிருக்கும் செயலுக்கு ஒப்பு காட்டப் பட்டுள்ளது மிக நுண்மையான உவமை" போன்ற எழுத்து களில் ஆசிரியரின் உழைப்பும் தேர்ந்தெடுப்புத் திறனும் பளிச்சிடுகின்றன. பதினோராம் திருமுறையில் "இராநீர் இருண்டனைய கண்டத்தீர்" எனக் காரைக் காலம்மையார் மட்டுமே உவமிக்கிறார் எனும்போது ஒப்பீட்டுப் பார்வை யும், சங்க உவமை மீனவும் வருதல், தேவார, திருக்குறட் செய்துகள் இடம்பெறுதல் போன்றவற்றைப் பேசும்போது பன்னூற் பார்வையும், ஞானசம்பந்தரிடம் நிறவுவமை களைவிட வடிவ உவமைகள் குறைவு என விளக்குமிடத்து அதற்கான காரணமாக அவருடைய இளமைப் பருவத்தை முதன்மைப் படுத்தும் நேரத்தில் தருக்கவியல் பார்வையும் இடம் பெற்றுள்ளன. இங்ஙனம் பன்னோக்கு நிலையில் பாடுபொருளை அலசுவதில் நூலாசிரியரின் ஆற்றல் புலனாகிறது.

காழியினை நினைக்காதவர் ஓதியம்பனை போல விழுவர் என்கிறார் நம்பியாண்டார் நம்பி. இது 'கூர்ந்த நோக்கு' என்பது நூலாசிரியரின் சொல்லாடல், இங்ஙனம் நுண்ணிய பகுதிகளை—உருப்பெருக்கு ஆடியில் நுண் பொருளைப் பெரிதாக்கிக் காட்டுவது போலச் சிறந்த வண்ணம் விளக்கிக் காட்டும் ஆசிரியரை இதுபோன்ற கூறு களுக்காக எத்தனை முறை பாராட்டினாலும் தகும்.

மொத்தத்தில் நல்ல நூலொன்றைப் படித்து மகிழும் பேறு பெற்றமைக்காக உளமார மகிழ்கிறேன். அடியார் தம் அருளிச் செயல்கள், இயற்கையின் பின்புலம், பயன் பாடுகள், வெளிப்படுத்தும் பாங்குகள், இறைமையை

இயற்கை வழியே வழிபடும் போக்குகள் போன்றவற்றை வி (வ) ரிக்கும் இந்த நூல் பல் கோணங்களில். பயன்தரக் கூடியது. 'தமிழுக்குத் தொண்டு செய்தோன் சாவ தில்லை' என்பது வைரவரி. இவ்வரிக்குச் சொந்தக்கார ராகத் திகழும் பேராசிரியர் முனைவர் இரா. இலட்சா ராமன் அவர்கள் இதுபோன்ற இறவாப் புகழுடைய நூல் களைத் தமிழ் கூறு நல்லுலகிற்கு வழங்கிட எல்லாம்வல்ல ஆண்டவனை இறைஞ்சுவல். இந்நூலினைக் கண்ணுறு வோர் என்னைப் போலவே மகிழ்வு பெறுவர் என்பது எளியேனின் நம்பிக்கை. இனி, நூல் உங்கள் கையில். இயற்கையின் வழியே இறைவனை நோக்கிடச் சிறியேன் நந்தியலலை வழிவிட்டு வணங்குவன்.

# நுழைவாயில்...

இந்நூலின் நுழைவாயிலுக்கு வந்துள்ள தங்களை இருகரம் கூப்பி வரவேற்கிறேன்....

இருபத்தொன்றாம் நூற்றாண்டைத் தொட இருக்கும், இச்சூழலில் மனித வாழ்க்கை மிகைவேக வாழ்க்கையாக மாறிப் போய்க் கிடக்கிறது.... கடந்த காலங்களை நினைத்துப் பார்ப்பதும் இயலாமற் போய் விட்டது. எந்திரங்களோடு எந்திரங்களாக மாறிவரும் மனிதனின் இதயத்துக்குள் உணர்ச்சி விழிப்பும் விலகிப் போய்க் கொண்டே இருக்கிறது. அறிவுகூட பழக்கப்பட்டவைகளையே பார்த்துப் பார்த்து கூர்மழுங்கிக் கிடக்கிறது...

மனித வாழ்க்கையின் அகச்சூழல் சிதைவதுபோல புறச்சூழலும் காற்றில்... மண்ணில்... நீரில்... தீயில்... உண்ணும் உணவில்... பூசிக் கொள்ளும் பூச்சுகளில்... எல்லாம் மாசுகள் பரவி மயானமாகி வருகின்றது. இதற்கெல்லாம் மனிதன் தன்னைக் காணாமை—தன் சூழலைக் காணாமை படைக்கப்பெற்றதைக் காணாமை... எனக் காணாமைகளின் பட்டியல் இன்னும் நீளும்— காரணங்களாக....

நாம் படைக்கப் பெற்றதற்கும் நம்முன் இந்த உலகம் படைக்கப் பெற்றதற்கும் காரணம் பல வுண்டு. ஆன்மீகச் சான்றோர் அழகாக எடுத்தியம்பியுள்ளனர். ஆனால் கண்ணிருந்தும் காணாராய்க் காலத்தை வீணே கழிக்கிறோம்....

இந்த நிலையைச் சற்று திசை திருப்பலாமா? திருப்ப இயலுமா? திருப்பினால் தொடருமா? தொடர்ந்தால் விழிப்பு வருமா? என்ற சிந்தனைகளே என் முன் எழுந்தன. அவ்வகையில் உலகப் படைப்பைப் போலவே படைப்பாளர்

படைப்பிலும் காரணங்கள் உள்ளன என்பதுணர வேண்டும். நாமும் இயற்கை, நமக்கு முன்னிருப்பதும் இயற்கை. நம்மையும் முன்னிருப்புகளையும் படைத்த இறையும் இயற்கை ஆகும். இந்த இயற்கைக் காட்சியை மீளமீளக் காண்போம்.... காட்சியின் தொடர்ச்சிப் போக்கில் இயற்கையின்மீது நாட்டமும் தெளிவும் ஏற்பட்டு இறையையும் காண்போம். முடிவில் இறையருள்பெற முயற்சிக்கான முதல்படியில் காலூன்றுவோம்...என வழி விடுகிறேன்....

இனி நூலோடு உங்கள் கலந்துரையாடல் நிகழட்டும்

ஆசிரியன்

# இயற்கைக் காட்சியும் இறைமைக் காட்சியும்

உலகில் எத்தனையோ சிற்பங்கள்; கல்வடிவங்கள் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு செதுக்கப் பெற்றவை வடிவமைக்கப் பெற்றவை. இன்று கிடைத்தால் அந்தச் செய்திறன்நுட்பத்தை—செய்தவன் நோக்கத்தை—அவன் செய்த செய்வண்ணத்தின்வழி நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது; நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். ஒருவாய்அமைத்தவன் இரண்டு கைகளைத் தந்திருக்கின்றான். கண்ணுக்குக் காண்பதையும் காதுக்குக் கேட்பதையும் செயலாகத் தந்த இறைவன், நாவிற்குப் பேசுதல், சுவைத்தல் ஆகிய இருபணிகளைத் தந்துள்ளான். ஏன்? இவற்றின்வழி இறைவன் வாழ்வுநெறியைப் புலப்படுத்துகின்றான்.

உண்; உழைத்து உண்; உண்; கொடுத்து உண் ஊன் சுவை குறைத்து உண்மையையும் உரியவனையும் பற்றிப் பேசு, பாடு என்னும் வாழ்வு நெறிகளை உடல் இயற்கை வழி உணர்த்துகின்றான். இறைவன் படைப்பு எல்லாம் அழகான வாழ்வின் நெறி ஒவ்வொன்றைப் புலப்படுத்துவதோடு, புலன் கவரும் எழிலுடையனவும் அவையாகும். ஒட்டகங்கூட அவன் படைத்ததுதான். ஒட்டகம் அழகாகவா இருக்கிறது என்று நாம் நினைக்கின்றோம். ஒட்டகம் வாழும் நிலத்தையும் நிலையையும் எண்ணிப்

பார்த்தால் மணல் புயல் வீசும் பாலை நிலத்தில் நீரும் நிழலும் இல்லாக் கொடும் கோடையில் உயிர் தாங்கி வாழ வல்ல ஒரு படைப்பை ஒட்டகத்தைவிட மிக அழகாக எந்த அறிஞனும்—கலைஞனும் படைக்க முடியாது என்பதை உணரலாம். நீண்ட நாட்கள் நீரைத் தாங்கி யிருக்கும் வயிறு, மணற் காற்றுப் புயலினைக் காத்துக் கொள்ளும் கண்திரை, பொதிமணலில் அமிழ்ந்துவிடாத மென்பாதங்கள் மணல்மேடுகளைக் கடந்து காணும் உயர்ந்த தோற்றம் மெல்லிய கால்கள் இவையெல்லாம் இறைவன் அருளோடு அமைந்தவை அல்லவா; அழகோடு அமைந்தவை. அல்லவா; இப்படி எத்தனையோ உயிருள் உயிரில் இயற்கைகளை இறைவன் படைத்துள்ளான். அவற் றின்வழி தூய நெஞ்சுடையோர் அவனருளாலே ஆன்மீக உண்மைகள் பலவற்றை உணர்ந்து உணர்த்துகின்றனர். அத்தகு நெஞ்சத் தூயோர் திருமுறைச் சான்றோர்கள் அவர்கள் கண்ட இயற்கைவழி கடவுள் காட்சியை-கடவுள் நோக்கத்தை கடவுள் திருக்குறிப்பைக் காட்டுகின்றனர். ஆங் காங்குச் சுட்டிச் செல்கின்றனர். அவர்கள் கற்ற இயற்கை வழி—அவர்கள் கற்ற நெறியை அறிந்து அவர்கள் கண்ட காட்சியைக் காணுதல் மனிதப் பிறப்பின் பயனாகும்; குறிக் கோளாகும். இறைவன் அறிவுறுத்தவும் அழகுணர்த்தவும் படைத்தான். அவையிரண்டையும் திருமுறைச் சான்றோர் கள் இயற்கை அணிகளில் புனைந்து எடுத்துக் காட்டு கின்றார்கள். இந்த எண்ணத்தில் திருமுறைச் சான்றோர் கள் இயற்கை அணிகள் வழியுணர்த்துகின்ற உண்மைகள் இங்கு எடுத்துரைக்கப் பெறுகின்றன. தொன்மைக் காலந் தொட்டே மனித வாழ்க்கை இயற்கையோடு இணைந்து வருகின்ற ஒன்று. அவ்வகையில்தான் இலக்கியங்களிலும் இயற்கை இடையறவுபடாது இடம் பெற்றுள்ளது. அத்தகு இயற்கைச் சூழலில் திருத்தலங்கள்—திருக்கோவில் கள்—அமைந்தன. அவற்றைக் கண்டுபாடிய இலக்கியங் களிலும் திருமுறைகளிலும் இயற்கைக் காட்சி—அணிநல

இயற்கைக் காட்சி—இறைமைக் காட்சியாகிறது. அவற்றின் விளக்கம் இனிக்காண்போம்.

## இயற்கையும் வாழ்க்கையும்

மனித வாழ்க்கையைத் தொடக்க காலந்தொட்டு இன்றுவரை நோக்கும்போது அவனும் இயற்கையும் பிணைந்திருந்தமையே காணமுடிகிறது.

மனிதனுடைய வாழ்க்கையை,

அ இயற்கையொடு இயைந்து வாழ்ந்த காலம்,

ஆ. இயற்கையைப் பயன்படுத்தி வாழ்ந்த காலம்,

இ. பிற்காலம்,

என்ற மூன்று வகைகளில் அமைத்துக் காணலாம்.

இம்மூன்று காலங்களிலும் மனிதன் இயற்கையுடன் கொண்டிருந்த தொடர்பு இன்றியமையாததாயிற்று. அதனால்தான்,

"மக்களது உடம்பே இயற்கை. உலகத்தின் ஒரு பகுதியாக அமைதலின் உடம்பு நிலைபெறுவதற்கும் வளருதற்கும் இயற்கைப் பொருள்களின் துணை இன்றியமையாததாயிருக்கிறது"[1] என்கிறார் சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்.

மேலும், "தத்துவஞானியோ, இலக்கியவாதியோ அல்லது பிற மனிதர்களோ யாராயிருந்தாலும் வானிற்கும் மண்ணிற்கும் உள்ளடங்கிய செறிவிற்குள்தான் வாழ வேண்டும். மனித வாழ்வில் ஒவ்வொரு கணத்திலும் ஒவ்வொரு முன்னேற்றத்திலும் இவ்வுலகத்துச் சூழல்தான் அடிப்படைக்களனாக அமைந்து வருகிறது"[2] என்ற துரை. சீனிச்சாமி அவர்களின் கருத்தும் மேலதையே அரண் செய்கிறது. இயற்கையோடு மனிதனின் தொடர்பு,

அகலாத் தொடர்பாயினும் காலந்தோறும் அதன் அளவு வேறுபடுகிறது.

## இயற்கையொடு இயைந்து வாழ்ந்த காலம்

இது மிகப் பழங்காலம். இக்காலத்தில் மனிதன் விலங்குகளோடு விலங்காகச் சுற்றி அலைந்தான் நடைமுறை வாழ்க்கையும் விலங்குகளை ஒத்தே அமைந்திருந்தது.

உணவுகளாகக் காட்டில் கிடைந்த பச்சை இலைகளும் காய்கனிகளும் அமைந்தன. தனக்கென வாழ்விடம் அமைத்துக் கொள்ளத் தெரியாது. இயற்கையில் அமைந்த குகைகளும் மரப்பொந்துகளும் மரநிழலும் அவனுக்கு வாழ்விடங்களாக இருந்தன.

"மனிதனுடைய தொடக்க கால வாழ்க்கையில், இயற்கைச் சூழலே சுற்றுப்புறங்களே உணவுக்கும் இருப்பிடத்துக்கும் ஆதாரமாக விளங்கின"[3] என்பார் கூற்றும் அதை வலியுறுத்தக் காணலாம்.

"தமிழன் மரபே இயற்கை. பழந்தமிழன் இயற்கையின் வயத்திலே தன்னை ஒப்படைத்து வாழ்வை நடத்தியவன். அவனுடைய வாழ்வே இயற்கையின் திருவுரு எனலாம். புறவாழ்வை மட்டுமின்றி அகவாழ்வையும் இயற்கையே உருவாக்கிற்று"[4] என்னும் கதிர். மகாதேவன் அவர்களின் கருத்தும் இயற்கை மனித வாழ்வோடியைந்து காணப் பெற்றது என்பதைப் புலப்படுத்துகிறது.

"பண்டைத் தமிழர் என்ன, உலகில் எப்பகுதிக் கண்ணும் வாழ்ந்த பண்டை மக்கள் என்பார் இயற்கை யோடு அகலாத் தொடர்புடையவரே"[5] என்ற வ. சுப. மாணிக்கம் அவர்களின் கருத்தும் மேற்கருத்தை வலுப்படுத்துவதாக உள்ளது.

இன்றைய நூலார் விலங்கினங்களை ஆய்தற் பொருட்டு அவற்றை அணுகி வாழ்ந்து செய்திகளை அறிகின்றனர். அன்றைய வாணர்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவராததால் இயற்கை இயலில் பரந்த அறிவு பெற்று இயற்கை இயலாளராகத் (Naturalist) திகழ்பவராவார்கள்.[6] என்னும் ந. மனோகர் அவர்களின் கருத்தும் அதுவே. மேலும் இல. செ. கந்தசாமி[7] அவர்களும், அ. மா. பரிமணம்[8] அவர்களும் இக்கருத்தையே தெளிவு படுத்தியுள்ளனர்.

அறிஞர்கள் பலரின் கருத்தும் இயற்கையோடு மனிதன் இயைந்த வாழ்வு நடத்தியதைத் தெளிவுபடுத்தியுள்ளது.

இயற்கையைப் பயன்படுத்தி வாழ்ந்தமை

முன்னதின் வளர்ச்சியே இவ்வாழ்க்கை. கிடைத்ததை அப்படியே உண்டவன், அதைப் பக்குவப்படுத்தி உண்ண ஆரம்பித்தான். இருக்கும் குகைகளிலும் மரங்களிலும் வாழ்ந்த மனிதன், அவற்றை விடுத்து அதே இயற்கைச் சூழலில் சிறிய இருப்பிடம் அமைத்து அதில் வாழத் துவங்கினான். விலங்குகள் மீதிருந்த அச்சம் விலகியது, அவற்றைத் தமக்குத் துணையாகப் பயன்படுத்திக் கொண்டனர். மக்கள் வாழும் நிலத்திற்குத்தக உண்டு, உடுத்து, ஆடிப்பாடி வாழ்ந்தனர். அவ்வந்நிலத்திற்கென தனித்தனி தெய்வத்தை ஏற்படுத்தி வணங்கினர். இக்கால மனிதன் இயற்கை வயத்திலே தன்னை ஒப்படைத்த நிலையிலிருந்த மாற்றியபடி தனக்குத்தக இயற்கையை அமைத்துக் கொண்டான். தொல்காப்பியம், சங்க இலக்கியம் கூறும் திணை வாழ்க்கையை இதில் காண முடிகிறது.

பிற்காலம்

இரண்டாவதன் வளர்ச்சியில் அமைந்தது இது. இது இயந்திர காலம். மனிதனுடைய வாழ்க்கை, இயந்திரத்தின்

வேகத்தொடு இணைக்கப்பெற்ற வாழ்க்கையாக விளங்கு கின்றது. இன்றைய நாகரிக வளர்ச்சியில் மனிதன் இயற்கைமீது கொண்ட தனித்த ஈடுபாடு குறைந்து விட்டது. ஆயினும் அவன் வாழ்க்கை இயற்கைப் பொருளின் துணையில்லால் அமைதல் இயலாது. மனிதன் தன் பிறப்புகாலம் முதல் இயற்கை அன்னையின் மடி யிலேயே தவழ்கிறான். தன்னுடைய இறப்புக்குப் பிறகும் அவன் மண்ணோடே கலக்கிறான்.

இயற்கையோடு இயற்கையாக அவன் இயைந்து வாழ எண்ணாவிடினும், இயற்கை அன்னை அவனைத் தன்னொடு இணைத்துக் கொண்டுதான் வாழ்கிறாள். அவன் ஒவ்வொரு நாளும் இயற்கையைப் பார்க்கிறான், அதைப் பற்றிச் சிந்திக்கிறான். எங்கும் அவனைச் சுற்றி லும் இயற்கை பரவியுள்ளது. அவன் காலையில் கதிரவனை யும், மரம், செடி, கொடிகளையும் ஆறுகளையும் மண்ணை யும் பார்க்கிறான். இரவுக் காலத்தில் விண்ணையும், விண் மீன்களையும், நிலவையும் பார்க்கிறான். இவ்வாறு இயற்கை மனித வாழ்க்கை நாகரிக வளர்ச்சி மேம்பட்ட இக்காலத்திலும் இயைந்தே காணப்படுகிறது.

வளர்ச்சியின் அடுத்த காலமாகிய தற்காலத்தில் மனிதனுக்கு இயற்கையின் தொடர்பு மிகவும் குறைந்து விட்டது. இரவு, பகல் என்று இருவேலையிலும் அன்றி, மாறிமாறிப் பணிபுரியும் மிகைவேக வாழ்க்கை வாழும் நிலை இக்கால மனிதனின் நிலையாகும். இயற்கை அவனைச் சுற்றிப் பரவியிருப்பினும், கண்ணுக்குப் புலப் படினும், அவன் மனம் என்னவோ இயற்கையில் ஈடுபடுதல் இல்லை. பொருளாதாரமும், நகர்ப்புற வளர்ச்சித் திட்டங் களும் மனிதனை இயற்கையின் பிணைப்பிலிருந்து சற்று விலகியே இருக்குமாறு செய்துள்ளன. ஆயினும் மனிதன் இயற்கையிடமிருந்து விலகி வாழ்தல் இயலாது. "மனிதனால் இயற்கையை விட்டு விலகித் தனியாக வாழ்தல் இயலாது. இவ்வுலகாயினும் அல்லது எவ்வுலகா

னினும் மனிதன் இயற்கையோடு கொண்ட தொடர்பு நீக்க முடியாது"[9] என பிரிஜ்பிகாரி சௌபி எனும் அறிஞர் குறிப்பிடுவதும் இங்குக் கருதத்தக்கது.

## இலக்கியமும் இயற்கையும்

மனித வாழ்க்கையையும் இயற்கையையும் பிரிக்க இயலாதது போன்றே இலக்கியத்தையும் இயற்கையையும் பிரிக்கவியலாது. தமிழ் இலக்கியத்திற்கு மட்டுமல்லாமல் இக்கருத்து உலக இலக்கியங்களுக்கும் பொருந்துகிறது.

"உலக இலக்கியக் கவிதைகளில் இயற்கையின் எழில் நலத்தைக் காட்டுதல் எங்கும் காணலாம். எனினும் கவிஞர்கள் காட்டும் கற்பனை இயற்கை என்னும் நோக்கைப் பொறுத்தமட்டில் நாட்டிற்கு ஏற்பவும் கவிதையின் பொருளுக்கு ஏற்பவும் மாறுபடுவதைக் காண்கிறோம்"[10] எனும் கதிர் மகாதேவன் அவர்களின் கருத்து அதை வலியுறுத்துகின்றது.

"இலக்கியம் வளர்ந்தெழுவதற்கு நிலைக்களனாக உதவும் பொருள்கள் மக்களும் இயற்கையுமே. இவ்விரு பகுதிகளையும் பிரித்து, இயற்கையை விடுத்து மக்களைப் பற்றியும், மக்களை விடுத்து இயற்கையைப் பற்றியும் புலவர் பாடுவரேல் அவ்விலக்கியம் குறைவுள்ள இலக்கியமாக விளங்கும்"[11] எனும் மேலைநாட்டறிஞர் கருத்தைத் தனிநாயக அடிகளார் எடுத்தாளுகிறார். இக்கருத்து இயற்கையின்றி இலக்கியம் இல்லை என்பதை உறுதி செய்கின்றது. "இயற்கை கலந்த இலக்கியம் தமிழனின் தனிச் சொத்து"[12] என்பது சிறப்பாகத் தமிழிலக்கியத்தில் இயற்கை இணைவின் இடத்தைத் தெளிவு செய்கிறது. இதைத்தான்,

"இயற்கையைத் தொடாமல் எந்தக் கவிஞனும் சிறப்பு பெற்றதில்லை"[13] எனப் ப. குணசேகர் அவர்களும் உறுதி செய்துள்ளார்.

இங்குச் சங்க இலக்கியங்களிலும், காப்பிய இலக்கியங்களும் பக்தி இலக்கியங்களிலும் இயற்கை பெற்றபாங்கு காட்டப்படுகிறது.

தொன்மை இலக்கியமும் இயற்கையும்

"தொன்மை இலக்கியமாகிய சங்க காலத்தை இயற்கைநெறிக் காலம் என்றே குறிப்பிடுகின்றனர். அகம், புறம் எனப் பிரிக்கப்பெற்ற அவ்விலக்கியங்களுள் அகப் பாடல்களில் இயற்கைப் புனைவு மிகுதியாகக் காணப் பெறுகிறது. புறப்பாடல்களிலும் இயற்கை வருணனை வந்துள்ளது.

"பழந்தமிழ்ப் புறப்பாடல்களிலும் இயற்கை வருணனைகள் வராமலில்லை. நில வருணனைகள் புறப்பாடலில் தெளிவாக உள்ளன"[14] என்ற கதிர். மகாதேவன் அவர்களின் கருத்து அதை உறுதி செய்கிறது. சங்க இலக்கியப் புலவர் யாவரும் இயற்கையைத் தொடாமல் விட்டதில்லை.

"பண்டைக் காலத்துச் செந்தமிழ் புலவரெல்லாம் உலக இயற்கைத்திறம் பிறழாமல் அதனை நுணுகி ஆராய்ந்து பாட்டுப்பாடும் மனஉறுதி மிகுதியும் உடையரா யிருந்தனர்"[15] என்று குறிப்பிடுகிறார் மறைமலையடிகளார்.

சு. செல்லப்பன் அவர்களும்

'கை புனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பினை யுடைய இயற்கை, பண்டைத் தமிழிலக்கியங்களில் பேரிடம் பெற்றுச் சிறக்கிறது"[16] என அதைத் தெளிவு செய்கிறார்.

"இயற்கை கவிஞர்களுக்குத் தலையாய துணைப் பொருள். மனிதனின் வினைநிகழ்ச்சியும் மனநெகிழ்ச்சியும் கவிதைக்கு உயிர்ப் பொருள்களாகவும் கொண்ட சங்க இலக்கியப் புலவர்கட்கும் இயற்கைதான் தலையாய துணைப் பொருளாக உதவியுள்ளது"[17] எனும்

அ.அ. மணவாளன் அவர்களின் கருத்தும் உறுதிப்படுத்துகிறது.

சங்க இலக்கியத்தில் காணப்பெறும் இயற்கை பற்றித் தெளிவாகவும் விரிவாகவும் மு. வரதராசன் அவர்களும் தனிநாயக அடிகளாரும் ஆய்ந்து முடிவுகளைத் தம் நூல்களில் தந்துள்ளனர்.

"இயற்கையின் ஒவ்வொரு பகுதியையும் பகுத்துப் பகுத்துப் பாடியவர்கள் பண்டைத் தமிழ்ப் பாவலர்கள். காதல், வீரம் என்பனவற்றைத் தலைமைக் கூறுகளாகக் கொண்டு பிற பல கூறுகளையும் துணையாகப் பெற்றுள்ளது மனித வாழ்க்கை. அத்தகைய மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் வருணித்துத் தெளிவுபடுத்துவதற்காகவே பண்டைத் தமிழ்ச் சான்றோர் இயற்கையைப் பயன்படுத்தினர். சுருங்கச் சொன்னால் மனித இதயத்தின் உணர்வுகளையும், இயற்கையின் கவர்ச்சி நிறைந்த எழிலையும் நெருங்கிய பிணைப்புடையனவாய்—இனிய உறவுடையனவாய் இணைத்தனர்" [8] எனும் மு.வரதராசன் அவர்களின் கருத்து சங்க இலக்கியத்தில் இயற்கையின் இடம் பற்றி விரிவாகப் புலப்படுத்துகிறது.

"தமிழ்ப் புலவரோ தம் புலமைத் திறனைக் காட்டுதற்கு முதற்பொருளாக மக்களையும் துணைப்பொருளாக இயற்கையையும் எடுத்துக் கொண்டனர் இயற்கையைத் தமிழ்ப் புலவர் கையாண்ட முறையில், வேறு எம்மொழிப் புலவரும் கையாண்டிலர். தமிழின் இயற்கை ஈடுபாட்டைப் பற்றி ஆராயுந்தோறும் எந்நாளும் புதிய கருத்துகளும் வியத்தற்குரிய உண்மைகளும் கண்டு வருகிறேன்" [19] எனும் தனிநாயக அடிகளாரின் கருத்தும் சங்க இலக்கிய இயற்கை பற்றித் தெளிவு செய்கிறது.

சங்க இலக்கியத்தில் இயற்கைப் புனைவுகள் மிகுதியாக இருப்பினும், அவை தனி இயற்கைப் பாடல்களாக

இல்லை. இயற்கை இணையமைப்புக்காகவும் மனித வாழ்க்கையின் பின்புலமாகவும் படைக்கப்பெற்றது என்பது தெளிவான ஒன்றாகும்.

டாக்டர் வரதராசனாரும் டாக்டர் தனிநாயக அடிகளும் சங்க இலக்கியத்தின் இயற்கைப் பகுதிகளைத் திறம்பட ஆராய்ந்துள்ளனர். இயற்கையை இயற்கைக்காகவே பாடும் நிலை—அதனைத் தனிப்பொருளாகக் கொண்டு கருத்துரைக்கும் துறை சங்க காலத்தில் இருந்ததில்லை என்றும், மக்களின் ஒழுகலாற்றிற்கும் சிறப்பாகக் காதலொழுக்கத்திற்கும் பக்கப் பொருளாகப் பாடும் சார்பு நிலையே இயற்கைக்கு அன்றைய இலக்கியத்தில் இடமாய் இருந்தது என்றும் அவ்விருவரும் தத்தம் நெறியால் அறுதியிட்டுரைப்பர்"[20] எனும் வ.சுப. மாணிக்கம் அவர்களின் கருத்து அதைத் தெளிவுபடுத்துகிறது.

காப்பியங்களும் இயற்கையும்

காப்பியங்களிலும் இயற்கைப் புனைவுகள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. அ. இராகவன் அவர்களின்,

"தமிழர்கள் கண்ட கவின்பெறு காவியங்கள் அனைத்தும் இயற்கையை அடிப்படையாகக் கொண்டவைகளாகும். இயற்கையின் எழில் காவியத்தின் சிறந்த அணியாக விளங்குகிறது"[21] என்ற கருத்து அதை அரண் செய்கிறது.

காப்பியங்களில் மலை கடல், நாடு, நகரம், பருவம் முதலான இயற்கை வருணனைகளும், கதிரவன், நிலவு முதலியவற்றின் வருணனைகளும் புனைதல் என்பது இலக்கணமாகக் கொள்ளப் பெற்றன. மேலும் பூம்பொழில் நுகர்தலையும் புனல்விளையாடலையும் கூறும்போது இயற்கைப் புனைவுகள் இடம் பெறுகின்றன.

தண்டியலங்காரம்,

"மலை கடலோடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
பூம்பொழி னுகர்தல் புனல்விளையாடல்"

என்பனவற்றைக் காப்பிய இலக்கியமாகக் கூறுதலைக் காணலாம். இவ்வமைப்பே காப்பியங்களில் நாட்டு நகரப் படலங்களைத் தோற்றுவித்தது.

அதுவன்றியும் காப்பிய மாந்தர்களின் பண்பினை, செயலாற்றலை, வாழ்வியலாக உணர்த்தும் பின்புலமாக இயற்கைப் புனைவுகள் விளங்குகின்றன. மேலும் அணிகளில் இயற்கை பயன்படுத்தப்பெற்றுள்ளது. "சிலம்பில் இயற்கை" பற்றிக் கூறும் ஆய்வாளர் துரை சீனிச்சாமி அவர்கள், "நிகழ்ச்சி உட்கருத்துபடக் குறிப்பாக வர்ணித்தல், நிகழ்ச்சிச் சூழலை வர்ணித்தல், வளம் கூறல்"[22] எனும் மூன்று பிரிவுகளைச் சுட்டுகிறார். இவை காப்பியங்களில் இயற்கை அமைந்துள்ள பாங்கைக் காட்டுகிறது. இவற்றிலிருந்து காப்பியங்களிலும் இயற்கைப் புனைவு மிகுதியாக இடம் பெற்றுள்ளது என்பது தெளிவாகின்றது.

## பக்தி இலக்கியங்களில் இயற்கை

சங்க கால, காப்பிய கால இயற்கை வருணனையைப் போலவும் அதற்கு மாறுபட்ட புதிய நிலையிலும் வருணனைகள் பக்தி இலக்கியங்களில் விளங்குகின்றன. ஆயினும் அவை யாவும் முன்னவற்றைப் போலவே இயற்கைத் துணைப்பொருளாக விளங்குகின்றனவே யொழிய, தனியாகத் தலைமைக் கூறாக அமைக்கப்பெறவில்லை. இதுபற்றியே இவண் ஆய்வு நிகழ்வதால் பின்னர் விரிவாக உரைக்கப் பெறுகிறது. இயற்கை நெறிக் காலத்திற்கு அடுத்த நிலையில் இவ்விலக்கியங்கள் தோன்றினதால் இயற்கைப் புனைவுகள் இதிலும் இடம்பெற்றன; பக்தி

இலக்கியங்களில் இயற்கைப் புனைவுகள் இடம்பெறக் காரணமாக அமைந்தன.

"இயற்கை வனப்பும் தெய்வ வனப்புமாகிய இருவகை வனப்புகளே இசைப்படலுக்குரிய சிறப்புடைப் பொருளெனப் பண்டைத் தமிழாசிரியர் கருதினர்"[23] என்னும் கருத்து கூறப்பெறுகிறது.

இயற்கையும் திருத்தலங்களும்

மக்கள் வாழ்க்கையையும் இயற்கையையும் தமிழிலக்கியங்களையும் இயற்கையையும் பிரிக்க முடியாதது போலவே இறைவன் உறையும் கோயிலும் இயற்கைச் சூழலும் பிரிக்க இயலாதவாறு இயைந்தமைந்து விளங்குகின்றது.

பன்னிரு திருமுறையில் பாடப்பெற்ற கோயில்கள் யாவும் இயற்கைச் சூழலில் அமைந்தன என்பதை அவ்வக் கோயிலமைந்த ஊர் பெயர்களே சுட்டுகின்றதைக் காணலாம். அவை மலைகளின் உச்சியிலும், ஆற்றின் கரைகளிலும் கடற்கரை ஓரங்களிலும் அமைந்துள்ளன. ஈங்கோய் மலை, அண்ணாமலை என்று மலை என்று முடிவனவும், பரங்குன்றம், கொடுங்குன்றம் எனக் குன்று என முடிவனவும் மலைகளில் கோயிலமைந்ததைச் சுட்டுகின்றன. பெருந்துறை, திருவாடுதுறை, மயிலாடுதுறை என்பனவற்றுள் வரும் "துறை" என்னும் சொல்லில் முடிவனவற்றை ஆற்றங்கரைத் தலங்கள் எனக்கொள்ளலாம். திருவானைக்கா கோலக்கா எனக் "கா" என்று முடிவனவும்.

திருவாலங்காடு, திருவேற்காடு என்று "காடு" என முடிவனவும் அடர்த்தியான காடுகளிலும் சோலைகளிலும் கோயில்கள் அமைந்ததைக் காட்டுகின்றன. இக்குறிப்புகளிலிருந்து திருமுறையாசிரியர்கள் பாடிய கோயிலமைந்த

தலங்கள் இயற்கைச் சூழலில் அமைந்தன என்பது புலனா கிறது. இதன் விரிவு பன்னிரு திருமுறை இலக்கிய வரலாறு என்னும் நூலில் காணலாம்.

"இயற்கை வளம் மிகுந்துள்ள இடங்களிலேயே பண்டை நாளில் பெருங்கோயில்கள் கட்டப்பட்டன"[24] என்னும் திரு.வி கலியாணசுந்தரனார் குறிப்பும் மேலதையே அரண் செய்கிறது.

மேலும் பிரகத்சம்கிதை

"சோலைகளிலும் ஆற்றங்கரைகளிலும் நகரங்களில் இயற்கைச் சோலைகளிலும் இயற்கையழகு பெற்று விளங்குகின்ற எல்லா இடங்களிலும் இறைவன் உறை வதற்கு விரும்புகிறான்"[25] என்று கூறுவதினால் இயற்கைச் சூழலில் இறைவன் உறைதற்குக் கோயில் எழுப்பியிருப்பர் என்பது புலனாகிறது.

திருமுருகாற்றுப்படையில் வரும்,

"காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும்......"

என்னும் பாடல் அடிகள் இயற்கையில் இறைவழிபாடு நிகழ்ந்ததைச் சுட்டுகின்றன.

பெரும்பாலான சைவக்கோயில்கள் இயற்கைக் காட்சி கள் நிறைந்த காடுகளிலும், மலைகளிலும் ஆற்றங்கரை யிலும் கடற்கரையிலும் எழுந்தன என்பதை மொ.அ. துரை யரங்கனாரும்[26] குறிப்பிடுகின்றார். இதுகாறும் கண்ட செய்திகளிலிருந்து இயற்கைச் சூழல்களிலேயே பண்டைக் கோயில்கள் கட்டப்பெற்றன என்பது தெளிவாகிறது.

## இயற்கைச் சூழலில் கோயிலமைந்ததற்கான காரணங்கள்

இயற்கைச் சூழலில் கோயில்கள் அமைந்ததற்குக் காரணங்கள் பல உள்ளன. திரு.வி.க அவர்களும் அதைப் பற்றிக் கூறியுள்ளார். "இயற்கையோடு இயைந்த இருக்கை மக்கட்கு இருத்தல் வேண்டும் என்ற எண்ணங்கொண்டு நம் பண்டை மூதறிஞர் மலைகளிலும் மலைசார்ந்த இடங்களிலும் கோயில் கட்டினர்"[27] என்னும் அவர் கூற்று அதைத் தெளிவு செய்கிறது.

"இப்புனிதத் தலங்களின் அமைவிடம் ஏதோ ஒரு சந்தர்ப்பவசத்தாலோ எந்தத் தொடர்பும் இல்லாமலோ அமைந்ததல்ல. அவை குறிப்பிட்ட நோக்குடன் அமைந்து தம்மிடம் வரும் தம் நாட்டு மனிதர்களைப் பண்படுத்துகின்றன"[28] என்பது பண்டை இந்தியாவில் நிலவியல் பற்றிய முடிவுகளில் ஒன்றாகும்.

இவை யாவும் கோயில்கள் இயற்கைச் சூழலில் அமைந்ததற்குக் காரணம் உண்டு என்பதைத் தெளிவாக்குகின்றன. இவற்றை ஐந்து வகைகளில் அமைத்துக் காணலாம். அவை,

1. இயற்கைச் சூழலில் வாழ்ந்த மக்களிருப்பிடங்களையொட்டிக் கோயில்கள் தோன்றின.
2. இயற்கை வழிபாட்டின் வளர்ச்சியால் இறைக் கோயில்கள் இயற்கைச் சூழலில் அமைந்தன.
3. சமயச் சடங்குகளுக்காக-மரபுகளுக்காக இயற்கைச் சூழலில் கோயில்கள் அமைந்தன.
4. அமைதி, ஆன்மிகப் பயிற்சி, உடல்நலம் பேண உதவுதல் நோக்கோடு இயற்கைச் சூழலில் கோயில்கள் அமைந்தன.
5. பொருளாதாரமும் ஒரு காரணமாக அமைந்தது.

இயற்கைச் சூழலில் வாழ்ந்த மக்களிருப்பிடங்களை யொட்டிக் கோயில்கள் அமைந்தன

மக்களின் வாழ்க்கை மலைகளிலும், ஆற்றங்கரைச் சமவெளியிலும் கடற்கரை ஓரங்களிலும் தொடங்கின. தொல்காப்பியமும் நிலவமைப்பை—மக்கள் வாழ்ந்த நிலப் பகுதியை நானிலமாகப் பகுத்துள்ளது.

ஊர்ப்பெயர்களைப் பற்றி ஆய்ந்த ஆய்வாளர் ஒருவர்

"தமிழக ஊர்ப்பெயர்கள் பெரும்பாலும் இயற்கைச் சூழலுக்கு ஏற்பவும் நிலத்தின் தன்மைக்கு ஏற்பவும் அமைந்திருக்கும்"[29] எனவும்

"பழங்காலத்தில் இயற்கைக்கும் ஊர்பெயருக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருக்கிறது"[30] எனவும்

"நானிலப் பகுப்பு முறைக்கும் ஊர்ப்பெயர்களுக்கும் பெரிதும் தொடர்பு இருக்கிறது"[31] எனவும் கூறுகின்ற கூற்றுக்களிலிருந்து மக்கள் வாழ்விடங்கள் இயற்கைச் சூழலிலேயே அமைந்தன எனத் துணியலாம். தன்னுடைய வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்து கொள்ள அவன் இருப்பிடங்கள் இயற்கையை ஒட்டி அமைந்தன. கோயில்கள் மக்களின் வழிபாட்டிற்கென எழுந்தன. மக்களிடத்தில் சைவப் பற்றையும் சிவபெருமான் பெருமையும் பரப்பவென எழுந்தன. ஆகையால் மக்களின் வாழ்விடங்களை ஒட்டியே மக்களுக்காக எழுப்பப்பெற்ற கோயில்கள் அமைந்தன என்று கொள்ளலாம்.

மக்களின் வாழ்விடங்கள் இயற்கைச் சூழலில் அமைந்தன.

மக்களின் வாழ்விடங்களையொட்டி கோவில்கள் எழுந்தன.

ஃ கோயில்கள் இயற்கைச் சூழலில் மக்கள் வாழ்விடங்களில் எழுந்தன என்பது பொருத்தமானதாகும்.

இயற்கை வழிபாட்டின் வளர்ச்சியே இறைக்கோயில்கள் இயற்கைச் சூழலில் அமைய காரணமாயின.

பண்டைய மக்கள் இயற்கையோடு இயற்கையாகவும் இயற்கையைப் பயன்படுத்தியும் வாழ்ந்தமை முன்பு கூறப் பெற்றது. அவர்கள் இயற்கையோடு இயற்கையாக வாழ்ந்தபோது இடி, மின்னல், மழை, சில விலங்குகள் முதலியவற்றைக் கண்டு அஞ்சினர்.

"முதல் உணர்வு அச்சத்தின் பாற்பட்டதாயினும் அவ்வுணர்வும் வாழ்வோடு பொருந்திய ஒன்றாகிவிட்டது. இடியையும் மின்னலையும் கேட்டு—கண்டு அவன் அஞ்சினான்"[32] எனும் அக்கருத்து மேற்கருத்திற்கு அரணா கிறது. அவ்வச்சத்தின் காரணமாக அவர்கள் அவ்வியற்கைக் கூறுகளை வணங்கத் தலைப்பட்டனர்.

அதற்கடுத்த நிலையிலும் மனிதன், இயற்கை தந்த—தரும் பயனைக் கண்டு நன்றி மறவாத நிலையில் சிலவற்றை வழிபட்டான். மழை, மேகம், மாடு, பசு முதலியன அவ்வகையில் வழிபடப்பெற்றன. தமிழர் திரு நாளாகிய பொங்கல் விழா நன்றி விழா என்பதன் நோக்கமும் இதுவே.

"உலக வாழ்க்கையில் தெய்வக் கொள்கை உருப் பெறுவதற்குத் துணையாய் முன்னின்றவை ஐம்பூதங்களின் சார்புடைய ஞாயிறு, திங்கள், மழை, நிலம் என்னும் இயற்கைப் பொருள்களாகும். வாழ்க்கையில் நேர்முறையில் பயன் விளைவிக்கும் இவ்வியற்கைப் பொருளை வழிபடும் வழிபாடே மக்கட் சமுதாயத்தில் முதன்முதல் தோன்றித் திணைக்கருப்பொருளாகிய தெய்வக் கொள்கைக்குத் துணை செய்திருத்தல் வேண்டும்"[33] என்ற கூற்றும் இயற்கை வழிபாட்டின் தொடக்கத்தைத் தெளிவுபடுத்து கிறது.

இயற்கையைக் கண்டு அச்சமுற்ற போதும், பயனை உணர்ந்தபோதும் வழிபட்ட மக்கட் சிந்தனை மேலும் வளரலாயிற்று. அவ்வியற்கைக் கூறுகளுக்கு எல்லாம்— இவ்வியற்கையின் செயல்முறைக் கெல்லாம் தலைவன் ஒருவன் உண்டெனை எண்ணினர். அத்தலைவனைப் பெயரிட்டோ அடையாளமிட்டோ அவ்வியற்கையுள் இருப்பதாக எண்ணி வழிபட்டனர். அத்தலைவனுக்கு உருவம் அமைத்து வழிபடும் நிலை அடுத்த நிலையில் துவங்கியது. அத்தலைவனுக்குக் கோயில்களை அவ்வியற்கைச் சூழல் களுக்கிடையிலே அமைத்தனர். முதலில் இயற்கையே இறைவன் என்றிருந்தது. பின்னர் இயற்கையில் இறைவன் என்றநிலை வளர்ச்சி பெற்றது. அதன் வளர்ச்சியே அவ்விறைவன் கோயில் இயற்கைச் சூழலில் அமைந்ததற்குக் காரணமாயிற்று.

இயற்கையே இறைவன்—>இயற்கையில் இறைவன்—>
—>இயற்கைச் சூழலில் இறைவன் கோயில்

என்பதே அதன் வளர்ச்சி நிலைகள்.

சமயச் சடங்குகளுக்காக—மரபுகளுக்காக
இயற்கைச் சூழலில் கோயில்கள் அமைந்தன;

கோயில்கள் மலையுச்சி, ஆற்றுப்படுகை, கடற்கரை, கானகச் சோலை முதலியனவற்றை ஒட்டி அமைந்தனவாயினும் பெரும்பான்மையான கோயில் தலங்கள் ஆற்றங் கரையிலும் கடற்கரை ஓரங்களிலும் அமைந்துள்ளன. பிற விடங்களிலும் அவை நீர் வசதியுள்ள இயற்கைச் சூழலில் அமைந்திருக்கும்.

"இந்தியாவில் பெரும்பான்மையும் கோயில்கள் ஆற்றங்கரை ஓரங்களிலும் கடற்கரை ஓரங்களிலும், ஆற்றிடைக் குறையிலும் அமைந்துள்ளன. வட இந்தியா வில் கங்கையாற்றின் கரையில் மிகுதியான கோயில்கள்

காணப்பெறுகின்றன"[34] என்று வட இந்தியக் கோயில்கள் பற்றிக் குறிப்பிடப்பெறுகின்றது.

இக்கருத்து தமிழகத்திற்கும் பொருத்தமாகவே உள்ளது. தமிழகத்தில் உள்ள பெரும்பான்மையான கோயில்கள் காவிரி ஆற்றின் கரையில் அமைந்துள்ளன. இங்கும் ஆற்றங்கரைக் கோயில்கள் மிகுதி. அடுத்த நிலையில் நிற்பன கடற்கரைக் கோயில்களாகும். 'மூர்த்தி, தலம், தீர்த்தம்' என்னும் வழிபாட்டு மரபினர் தமிழர். தலம் இயற்கையில் அமைந்தது கூறப்பெற்றது. தீர்த்தம் என்பது தெய்வத் தொடர்புடைய நீரைக் குறிக்கும். ஆகையால்தான் தீர்த்தமாடும் மரபுக்காகக் கோயில்கள் நீர்த்துறையோரங்களில் அமைந்தன.

"கோயில் என்பதே தீர்த்தம் ஆகும். கோயில்கள் எங்குத் தீர்த்தங்கள் இருக்கின்றனவோ அங்கு எழுப்பப் பெற்றன. நீர் என்பது இங்கு அவசியமானதாகக் கருதப் பெற்றது. நீர் வசதியில்லையாயினும் செயற்கையாக வரவது நீர்வசதி செய்யப் பெற்றது"[35] என்ற குறிப்பிலிருந்து நீரிற்கும் கோவிலுக்கும் உள்ள தொடர்பு தெளிவாகிறது.

அதுமட்டுமன்று ஓடுகின்ற நீர் புறத்தூய்மை மட்டுமன்றி அகநலமும் அளிக்கிறது என்பது இந்தியர்களின் நம்பிக்கை. இந்தியர் தூய்மையைப் பொன்னுக்குச் சமமாகக் கருதுபவர் ஆவர். புனித நீராடலைச் சடங்காகக் கொண்டவர். உடல் தூய்மையொடு உளமும் தூய்மை பெறுகிறது எனும் நம்பிக்கையின் காரணமாகத் தீர்த்தமாடல், புனித நீராடல் மரபாக ஆயிற்று. அதையொட்டியே நீர்வசதியுள்ள ஆற்றின் கரைகளில் கோயில்கள் தோன்றின.

"நீராடல் முதலிய சமய ஒழுக்கங்களைக் கடைப்பிடிப்பதற்கு ஆறுகள் பயன்பட்டதும் அவற்றின் கரைகளில்

கோயில்கள் அமையக் காரணமாகலாம்"[36] எனும் கி. சத்திய மூர்த்தி அவர்களின் கருத்தும் அதையே காட்டுகின்றது.

தூய்மையான இடங்கள் மற்றும் நீர் வசதியுள்ள இடங்கள் எனில் உறுதியாக அவை இயற்கைச் சூழலில் அமைந்ததாகத்தான் இருக்கமுடியும். மேலும் இந்திய நாடு சிறப்பாகத் தமிழ்நாடு கடுங்கோடையோ கொடுங் குளிரோ இன்றி இடைநிலையான தட்பவெப்ப நிலை யுடையது. எனவே நீராடல் இங்கு இன்பமாகவும் அமைகிறது.

அதுவன்றியும் இந்தியர்,

"இந்தியா உண்மையிலேயே ஒரு புனிதமான பூமி. அதன் மலைகளும் நதிகளும் மரங்களும் மற்றும் எல்லாப் பொருள்களும் புனிதமானவை"[37] என்ற கோட்பாடு உடையவர்களாவர். இக்கருத்தை கிருஷ்ணசைதன்யா அவர்களும் குறித்துள்ளார். பரிபாடலில் வையை ஆறு வணங்கப் பெறுவதைக் காணமுடிகிறது. அப்பாடல்கள் தரும் விளக்கங்களிருந்தும் ஆறுகள் புனிதமாகக் கருதப் பெற்றன என்பது புலனாகிறது.

சமயச் சடங்குகளுக்காக—மரபுகளுக்காகக் கோயில்கள் நீர்வசதியுள்ள இடங்களாகிய ஆறுகளின் கரைகளிலும் கடற்கரை ஓரங்களிலும் எழுந்தன என்பது மேற்கண்ட கருத்துக்களால் தெளிவாகிறது.

## அமைதி ஆன்மிகப் பயிற்சி உடல்நலம் பேண உதவுதல் நோக்கொடு இயற்கைச் சூழலில் கோயில்கள் எழுந்தன

இயற்கைச் சூழல்கள் ஆன்மாவிற்கு அழகுணர்த்தி இன்பம் ஊட்டுவது மட்டுமில்லாமல் அமைதியையும் அளிக்கிறது. அமைதியான மனம் பெறும்போது ஆழ்ந்த சிந்தனை அமைய, அச்சிந்தனையும் ஆன்மிகச் சிந்தனை யாக மாறுகிறது. அச்சிந்தனையின் வளர்ச்சி ஆன்மீக நேரக்குக்கு—பாதைக்கு வழி வகுக்கின்றது.

சி. பாலசுப்பிரமணியம் அவர்களின்,

"இயற்கையே இறைவன். இறைவனை வணங்குவதால் உண்டாகும் மன அமைதி, இயற்கைக் காட்சிகளைக் காண்பதாலும் உண்டாகிறது. ஓங்கி உயர்ந்த மலை, அதில் பொங்கி விழும் அருவி, சலசலவென ஓடும் நீரோடை, நீரோடை இருமருங்கும் செழித்து வானளாவ உயர்ந்து வளர்ந்துள்ள மரங்கள், பூத்துக் குலுங்கும் பல நிற பலமண மலர்கள், அங்கே கூடுகட்டி வாழும் பறவைகள்—இவை போன்ற எண்ணற்ற இயற்கைக் காட்சிகளே அவையும் நம் எண்ணங்களை ஒருமைப்படுத்தி உயர்வுபடுத்தும் ஆற்றல் வாய்ந்தனவாய் உள்ளன"[38] என்ற கருத்து அதைத் தெளிவு செய்கிறது.

"அழகும் பேராற்றலும் உள்ள இயற்கைச் சூழலமைந்த இடங்கள் உயர்ந்த அமைதியையும், சிறந்த ஆறுதலையும் கொடுத்து இறைவனைப் பற்றி ஆழ்ந்து சடுபட [தியானம்] உதவுகிறது" என்ற சுரேந்தர் மோகன் பரத்வாஜ் என்பாரின் கூற்றும் அக்கருத்திற்கு அரணாக அமைந்துள்ளது. இயற்கையின் அவ்வகைப் பேருதவியை ஹென்றிவாகனும் குறிப்பிடுகிறார். இக்கருத்தை உசைன் தம் நூலில் குறிப்பிடுகிறார். இவையன்றியும் பிரகத்சம்கிதை,

"எங்கெல்லாம் இயற்கையழகு நிறைந்துள்ளனவோ. அவ்விடங்களின் இயற்கை யழகுகள் யாவும் ஆன்ம அமைதியையும் தியானத்தையும் பெற உதவுகிறது"[39] என்று குறிப்பிடுதல் நோக்கற்குறித்து.

இக்காரணங்களினால் கோயில்கள் இயற்கைச் சூழலில் அமைந்திருப்பதின் அவசியத்தை உணர முடிகிறது. இதை,

"இயற்கை எழில் நிறைந்த சூழ்நிலையில் இறைவனை உள்ள ஒழுக்கத்துடன் நினைவு கூரும் பொருட்டு ஆற்றங்கரைகளில் கோயில்கள் எழுந்தன"[40]

என்னும் சி. சத்தியமூர்த்தி அவர்களின் கூற்றும் வலுப் படுத்துகிறது.

"மனித வாழ்க்கையின் அன்றாடச் சுமைகளையும் கவலைகளையும் மறந்து இறைபக்தியில் ஈடுபடவும் தியானம் மேற்கொள்ளவும் புனிதத் தலங்கள் உதவு கின்றன"41 என்பார் கூற்றும் அமைதி, ஆன்மீகப் பயிற்சி அளிக்கக் கோயில் தலங்கள் உதவுகின்றன என்பது புலனாகிறது.

"ஆற்றங்கரைகளும், கடற்கரைகளும், ஆற்றிடைக் குறை களும் மலைகளும் காடுகளும், குகைகளும் பூந்தோட்டங் களும் இறை வழிபாட்டிற்குப் பொருத்தமாக அமை கின்றன—ஆகவேதான் அத்தகு இடங்களில் இந்தியக் கோவில்கள் கட்டப்பெற்றுள்ளன"42 என்ற கருத்து அதை யொட்டியே அமைந்தது.

அமைதி, ஆன்மீகப் பயிற்சி என்னும் நோக்குகளுக்கு மட்டுமல்லாமல் உடல்நலம் பேண, உதவுதலுக்காகவும் இயற்கைச் சூழலில் கோயில்கள் எழுப்பப் பெற்றன. மலை களிலும் காடுகளிலும் உள்ள கோயில்களுக்கு வழிபாட்டிற்கு மனிதன் செல்லும் போது அந்நடைப்பயிற்சி அவன் உடல் நலத்தை வளர்க்கிறது.

"இறைவனை, இயற்கையின் தெய்வத்தை வழிபடும் பொருட்டு மக்கள் செல்லின், அச்செலவால், மக்கள் சில நாளாவது உறையும் பேறுபெற்றுப் பிணியின்று வாழ்வார் கள் என்ற கருணையால் அறிஞர்கள் மலைகளிலும் மலை சார்ந்த இடங்களிலும் கோயில் கட்டினார்."43 எனும் திரு. வி. க. அவர்களின் கூற்று உடல் நலம் பேணலுக்குதவு தல் பொருட்டு இயற்கைச் சூழலில் கோயில்கள் அமைந்த காரணத்தைச் சுட்டுகிறது.

அதுமட்டுமில்லாமல் அவ்விடங்களில் இருக்கும் தூய காற்றையும் சிற்சில போது மூலிகைகளின் மணம் கலந்த

காற்றையும் உட்கொள்கிறான். மேலும் தாது உப்புக்களில் படிந்து மூலிகைகளைத் தழுவி ஓடிவரும் ஆற்று, அருவி நீர்களில் நீராடுகிறான். இத்தகு செயல்கள் அவன் உடல் நலத்தை வலுப்பெறுத்துவதொடு உடல் நோய்களிருப்பின் அவை நீக்கவும் செய்கின்றன.

"கங்கை நீரில் நோய்க்கிருமிகளைவிட்டால் அவை உயிர் வாழ்வதில்லை; இறந்து போகின்றன. இந்தச்சக்தி கங்கை நீருக்கு இருப்பது விஞ்ஞானபூர்வமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இதன் காரணத்தை கண்டறிவதும் கஷ்டமில்லை. கங்கை நதி இமயமலைச் சாரலில் உற்பத்தியாகிறது. இமயமலைச்சாரலில் ஏராளமான மருத்துவ மூலிகைகள் இருக்கின்றன. அதோடு இமயமலைப் பாறைகளில் உள்ள உப்புக்கள் மருத்துவக் குணம் கொண்டவைகளாக இருக்கின்றது. இவற்றை எல்லாம் தன்னுள் சேர்த்து வடித்துவரும் கங்கை மருத்துவக் குணம் கொண்டதாக இருப்பதில் ஆச்சரியமில்லை"[44] என்ற பி. சி. கணேசன் அவர்களின் கருத்து உடல்நோய்களை ஆற்றுநீர் நீக்குகிறது. என்பதைத் தெளிவாக்குகிறது. அக்காரணம் பற்றியே வட இந்தியாவில் கங்கை ஆற்றின் கரையில் மிகையாகக் கோயில்கள் எழுந்தன எனலாம்.

தென்னிந்திய ஆறுகளுக்கும் இத்தகு தன்மை இருக்கலாம்; இருக்க வேண்டும். அதன் காரணமாக அவற்றின் கரைகளில் மிகையாகக் கோயில்கள் தோன்றின எனலாம். இவற்றிலிருந்து உடல்நலம் பேண உதவுதற் பொருட்டு இயற்கைச் சூழலில் கோயில்கள் எழுந்தன என்பது தெளிவாகப் புலனாகிறது.

### பொருளாதாரக் காரணத்தால் இறைக்கோயில்கள் இயற்கைச் சூழலில் அமைந்தன

மேற்கூறிய காரணங்களோடு இக்காரணமும் சிறந்ததாகும். மனிதன் பொருளாதார வளம் பெறுகின்றபோது

தான்—தேவை நிறைவு அடையும்போதுதான் இறை வழிபாடு பற்றிய சிந்தனைக்கு இடமளிக்க முடிகிறது. ஆற்றுப் பகுதிகள் யாவும் செழிப்பான நிலப்பகுதிகள். நில வளத்தினால் வாழ்க்கை வளம் பெறுகிறது. வாழ்க்கை வளம் பெறுவதால் மக்கள் மனவளம் பெற்றால் இறைவழி பாட்டுச் சிந்தனை வளம்பெற முடியும்.

"மனித வாழ்வுக்குத் தேவையான வசதிகளைத் தரக் கூடிய பொருளாதார வளமுள்ள இடங்களில் நிறைய ஊர்கள் தோன்றுகின்றன. எனவேதான் பழைய காலத்தில் நீர்ப்பாசன வசதியுள்ள ஆற்றுப்பகுதிகளில் நிறைய ஊர்கள் தோன்றின"[45] என்கிறார் கி. நாச்சிமுத்து அவர்கள்.

அக்கருத்தையே இறைக்கோயில்கள் அவ்வூர்களில் தோன்றக் காரணமாயின என்பதற்கும் கொள்ளலாம். அவர்களின் வாழ்வில் இறைவழிபாடும் ஒன்றுவதற்காகத் தான் அவ்விடங்களில் கோயில்கள் தோன்றின.

"உலகின் பழம்பெரும் நாகரிகங்கள் அனைத்தும் ஆற்று வெளியில் தோன்றியனவாக அறிகிறோம். ஆறுகள் தாம் பண்பாட்டின் வளர்ப்பு ஊற்றுகளும். ஊர்களும் நகரங்களும் ஆற்றங்கரையில்தான் முதன்முதலில் அமைந்தன. மக்கள் வாழ்க்கை மலர்ச்சியுற்ற இடம் நிலவளத்திற்குக் காரண மான ஆற்றங்கரையே ஆகும்."[46] என்கிறார் க. த. திருநாவுக்கரசு, உலகியல் வாழ்க்கை மலர்ச்சியுற்றால் தான் ஆன்மீக வாழ்வில் ஈடுபட இயலும். ஆகையால் இத்தகு பொருளாதார வளம்தரும் இடங்களில் கோயில்கள் எழுந்தன என்பது மிகவும் பொருத்தமானதாகும்.

"ஆற்றின் வளம் தந்த நிறைவிலும் ஓய்விலும் சூழ்நிலை வனப்பிலும் கலைகள் உருவாயின. சிந்தனைகள் கிளர்ந்தன: எல்லோரும் நிறைவாக உண்டு, ஒருவருக் கொருவர் சார்ந்து வாழும் மரபு உருவாயிற்று. ஊர்ப்

பொதுவையும் அதிலும் ஆழ்ந்த தத்துவமான கோவிலை யும் மையமாகக் கொண்டும் வாழும் முறை எங்கும் அமைந் திருந்தாலும் காவிரியின் வளத்தால் அது அமைதியோடும் கலைப்பண்போடும் அமைந்தது''[47] என்பாரின் கூற்று, பொருளாதார வளம் வாழ்க்கை சீர்பெற உதவுதலைப் போலவே ஆன்மீக வாழ்க்கை சீர்பெறவும் உதவுகிறது என்பதைக் காட்டுகிறது. இயற்கைச் சூழலில் அமைந்த மக்களின் வாழ்விடங்கள் நாகரிகத் தொட்டில்களாக மட்டு மல்லாமல் ஆன்மீக வளர்ச்சிக்கும் பெரிதும் உதவின என்பது இதன் மூலம் புலனாகிறது.

ஆற்றங்கரைச் சமவெளிகள் பயிர் வெளிகளாகி மக்களின் பொருளாதாரத்தைச் சீர் செய்தது போலவே கடற்கரைகள் வாணிகத் தலங்களாகி, அங்கு வாழும் மக்களின் பொருளாதாரத்தைச் சீர் செய்தது. இங்கும் மக்களின் பொருளாதார வாழ்வு சிறப்புற அமைந்தது. மக்களின் பொருளாதார வளம் உடல் வளத்தை வளர்த்தது. அவ்வழியே ஆன்மீக வளம் பெரிதாக அடைந்தனர். அந்நோக்கிற்காகவே கோயில்கள் அங்கு அமைந்தனவாயின.

பொருள்வள வாய்ப்பு மிக்க இவ்விடங்களில் ஐந்நில மக்களும் தொழில், வாணிகம் நோக்கித் திரண்டனர். இம்மக்கள் திரட்சி கூட்டு வழிபாட்டுக்கு—கோயில் வழி பாட்டுக்குக் காரணமாயிற்று. திணைக் கடவுள்கள் முழு முதற்கடவுளாக உருவாயின; கோயில்கள் எழுந்தன.

இச்செய்திகளிலிருந்து கோயில்கள் இயற்கைச் சூழலில் அமைந்ததற்கான காரணங்களைத் தெளிவாக உணர முடி கிறது. மக்களின் வாழ்விடங்களில் அவர்களிடை வழிபாடு வளர்வதற்காகவும் சமயக் கொள்கைகள் பரவுவதற்காகவும் அமைதி, ஆன்மீகப் பயிற்சி உடல் நலம் பேணல் ஆகிய வற்றுக்காகவும் வாழ்க்கையில் பொருளாதாரச் சீர்மை பெறுவதற்காகவும் இறைக்கோயில்கள் இயற்கைச் சூழலில்

அமைந்தன என்பது தெளிவாகின்றது. அவ்வகையிலேயே திருமுறைச் சான்றோர்கள் பாடிய திருத்தலங்கள் அமைந்துள்ளன. அவற்றை நேரில் கண்டு பாடிய பெருமையும் பலருக்குண்டு. அவ்வத்தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவனை இயற்கையோடு இணைத்துக்கண்ட இடங்கள் சிறப்பாகப் பல உள்ளன. அவர்கள் கண்ட இயற்கைப் பொருள்கள் அணி நலவழி இறைமைக் காட்சியாகவே புலப்பட்டன.

1.0 திருமுறையில் இயற்கைப் பொருள்கள் உவமை, உருவம் இயல்பு நவிற்சி, தற்குறிப்பேற்றம் முதலான அணிகளாக வந்துள்ளன. தண்டியலங்காரம், மாறனலங்காரம் ஆகிய இலக்கண நூல்கள் கூறும் அணிவகைகளைக் குறிப்பிட்டு இன்னின்ன அணிகள் வந்துள்ளன என்று குறிப்பிடுதல் நோக்கமன்று. இயற்கைப் பொருள்களடிப்படையில் அவை நோக்கப்பெறுகின்றன. இவ்வியலில் இயற்கைப் பொருள்கள் நிலைத்திணை, இயங்குதிணை என இரு பெரும் பிரிவாகப் பிரிக்கப் பெறுகின்றன. பின்னர் அவை 1. நில இயற்கை 2. நீரியற்கை 3. உயிரியற்கை 4. வானியற்கை 5. தீ இயற்கை 6. காலவியற்கை 7. பிறவியற்கை என ஏழு வகையாகப் பிரிக்கப் பெறுகின்றன. அவற்றுள் உயிரியற்கை எனும் பிரிவு இயங்குயிர், நிலையுயிர் என மேலும் இரு உட்பிரிவுகளைப் பெற்று விளங்குகிறது. இவ்வகைப் பாட்டில் திருமுறை ஆசிரியர்கள் பாடல்களில் அணிகளாக வந்த இயற்கைப் பொருள்கள் ஆயப் பெறுகின்றன. அவை ஆசிரியர் வரிசையில் இவ்வியலில் ஆயப்பெறுகின்றன.

1.1 திருஞான சம்பந்தரும் அணிகளில் வந்த இயற்கைப் பொருள்களும் :

1.1.1 நிலவகைமை

நிலவகைமையில் மலைமட்டும் அணி இயற்கையில் வந்துள்ளது. ஓரிடத்தில் மணல் குறிப்பிடப்பெறுகிறது.

1.1.1.1 மலை

மலை உவமையாக வந்துள்ள இடங்கள் முப்பத்து மூன்றாகும்.

நிற உவமை உவமையாகவந்த அவற்றுள் மூன்று குறிப்புகள் தவிர்த்த பிறயாவும் வடிவ உவமைகளாகும். மக்களை மலை தன்னுடைய வடிவத்தாலேயே கவர்கின்றது. அவருள்ளும் சிறுவர்க்கு மலையைக் காணும் போது மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுதல் இயல்பு. அத்தகைய இளங்குழவியாம் ஞானசம்பந்தரையும் மலை தன்னுடைய வடிவத்தாலேயே ஈர்த்திருக்கின்றது. அதன் தோற்றம் வடிவே இவரைக் கவர்ந்தது. இது இவர் பாடல்களில் வரை, பொறுப்பு, குன்று, குவடு, விலங்கல் எனும் பிற பெயர்களானும் குறிக்கப் பெற்றுள்ளது.

மலை உவமையாக வந்த குறிப்புகளை நான்கு வகையிலடக்கலாம். அவை, 1. உறுப்புக்களுக்கு உவமை 2. இயற்கைப் பொருளுக்கு உவமை 3. செயற்கைப் பொருளுக்கு உவமை 4. இறைக்கு உவமை என்பன.

1. உறுப்புக்களுக்கு உவமை:

சிவபெருமான், இராவணன், சிறுதொண்டர் ஆகிய மூவரின் தோள்களுக்கு உவமையாக மலை கூறப்பெற்றிருக்கிறது. சிவபெருமான் தோள்களுக்கு நான்கிடங்களிலும், இராவணன் தோள்களுக்கு மூன்றிடங்களிலும், சிறுத்தொண்டரின் தோள்களுக்கு ஓரிடத்திலும் மலை உவமையாக வந்துள்ளது.

"குன்றிரண்டன்ன தோளுடை" [சிவன்]
"தடவரைத் தோள்"

என்பன$_{48}$ அவற்றுள் சில.

மலையின் வடிவு, தோற்றம் உவமையாக வந்துள்ளன என்பதைக் காட்டிலும் மலையின் நிலைதிரியாத

தன்மை உவமையாகக் கூறப்பட்டுள்ளது என்பது பொருத்தமாகும். தோள்களுக்கு மலையை உவமை கூறுவது மரபு வழிப்பட்டதே.

2. இயற்கைப் பொருளுக்கு உவமை:

உயிரில் பொருளாகிய கடலலைக்கு ஐந்திடங்களிலும் உயிர்ப் பொருளில் இயங்குயிர்களாகிய விலங்குகளுக்கு மூன்றிடங்களிலும் மலை உவமையாக்கப் பெற்றுள்ளது.

இவர் கடலலையின் உயரம் தோற்றம் மலைபோன்று உள்ளது என்கிறார். இத்தகையன வடிவம் பற்றி வந்த உவமைகளாகும்.

"வன்றிரைவரை யெனப்பரந்தெங்கும்" 49

என்பது அவற்றுள் ஒன்று.

பன்றியின் வடிவுக்கு ஓரிடத்திலும் யானையின் வடிவுக்கு சரிடங்களிலும் மலை ஒப்பாக வந்துள்ளது. இங்கு வடிவு என்பதொடு வலிமை எனும் தன்மை ஒப்பாகப் பெற்றுள்ளது என்று கொள்ளலாம். "காரி... மால்வரை புரையக் களிற்றினது உரிவை" 50 என்பது அவற்றுள் ஒன்று. இயற்கையொடு இயற்கைப் பொருள் உவமையாக வந்துள்ள இவை ஆசிரியர் இயற்கை மீது கொண்ட பெரும் ஈடுபாட்டை உணர்த்துகின்றன.

3. செயற்கைப் பொருளுக்கு உவமை:

மதிலுக்கு உவமையாக ஓரிடத்திலும், மாட மாளிகைக்கு உவமையாக எட்டிடங்களிலும், கப்பலுக்கு உவமையாக ஓரிடத்திலும், மலை உவமிக்கப் பெற்றுள்ளது.

இவை யாவும் அவற்றின் தோற்றம், உயரம் பற்றி வந்தமையே ஆகும். பிற செயற்கைப் பொருள்களைக் காணும் போது இயற்கைப் பொருள்கள் உவமையாக வருதலிலிருந்தும் இவர் இயற்கை மீது பெரும் ஈடுபாடு கொண்டமை புலனாகிறது.

4. இறைவனுக்கு உவமை

சிவனார்க்கு உவமையாக மலை நான்கிடங்களில் கூறப் பெற்றுள்ளது. அவற்றுள் ஓரிடத்தில் உவமையாக பனிமலை காட்டப் பெற்றுள்ளது. சிவனுக்கு–நீறணிந்த திருமேனிக்கு உவமையாக வந்துள்ளது. நிலையிற்றிரியா வலியதன்மை, நெடிய தோற்றம் ஆகிய தன்மைகளே இங்குப் பொதுத் தன்மைகளாயின.

"வரையென வீற்றிருந்தான்"[51]

இவர் பாடல்களுள் மலை அணியா வந்துள்ள இடங்கள் யாவும் உவமையின் பாற்படும். உருவகமாக மலை வர வில்லை.

1.1.1.2 மணல்— கடற்கரை மணலின் வெண்மை நிறம் இறைவன் தலையில் அணிந்துள்ள துண்டப் பிறைக்கு ஒப்புமையாக ஓரிடத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. "இலங்குவெண் மணலறைத்துடைப் பிறை"[52] என்பதது. மணலின் வெண்மை பிறையின் வெண்மைக்கு ஒப்பிடப் பெறுதல் இவர்மட்டும் காட்டும் புதுமையதே. இது நிறம் பற்றி வந்த உவமையாகும்.

1.1.2 நீர்நிலைகள் — நீர்நிலைகளில் கடல், ஆறு என்பன உவமையாகப் பதினெட்டு இடங்களில் வந்துள்ளன அவற்றுள் நீர் எனப் பொதுவாக இரு இடங்களில் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றை,

1. இறைவனுக்கு உவமையாக—உருவகமாக வந்தன.
2. இயற்கைக்கு உவமையாக—உருவகமாக வந்தன.
3. உலகியலுக்கு உவமையாக—உருவகமாக வந்தன

என மூவகையில் அடக்கலாம்.

1. இறைவனுக்காக வந்தன ;

திருமாலின் நிறத்திற்கு ஒப்புமையாகக் கடல் ஆறு இடங்களில் குறிக்கப் பெற்றுள்ளது.

"கடல் வண்ணன்"[53] என்பது அவற்றுள் ஒன்று. திருமாலின் நிறம் கருமை என்றும், நீலம் என்றும் கூறுவது மரபொட்டியது. அவரின் திருமேனி நிறத்திற்கு ஒப்புமை யாகக் கடலின் நிறத்தைக் கூறுவதும் மரபை ஒட்டி வந்ததே.

2. இயற்கைப் பொருளுக்காய் வந்தன

ஆற்றின் தோற்றத்திற்கும் ஆழத்திற்கும் வளம் தரும் பயனுக்கும் ஒப்புமையாக கடல் மூன்றிடங்களில் உவமை யாக வந்துள்ளது.

"கடல் போல் காவிரி"

"ஆழ்கடலெனக் கங்கை"[54] என்பன அவை.

இந்தியத் திருநாட்டில் வடநாட்டில் உள்ள இமயம் கங்கை ஆறு மிகவும் புனிதத் தலமாகவும், ஆறாகவும் கருதப் பெற்றது. அப்போது தென் நாட்டிலும் புனிதமான தலங்களும் ஆறுகளும் உள்ளன என்பதைப் பக்தி இயக்க காலத்தினராகிய திருமுறைச் சான்றோர்கள் புலப்படுத்து வதற்காக வட இமயத்தைப் போன்றது தென்பொதிகை எனவும், வடக்கில் உள்ள கங்கையைப் போன்றது காவிரி எனவும் குறிப்பிட்டனர். கங்கையின் புனிதத்தன்மை காவிரியும் பெற வேண்டும் என்ற நோக்கத்திற்காக அமைந்தது இவ்வுவமை ஆகும்.

"கங்கைக்கேயும் பொற்பார் கலந்து வந்த பொன்னி"[55] பயன் உவமை, வடிவுவமை என இருவகை யிலும் இவை வருவன.

3. உலகியலுக்காக வந்தன

உருவகமாக உலகியலாகிய பிறவி, துன்பம், சுற்றம் ஆகியவற்றுக்கு கடல் உருவகமாக வந்துள்ளது. இத்தகை யன நான்கு குறிப்புகள்.

"இடும்பைக் கடல்"

"அவலமாகிய கடல்"

"பிணிபடு கடல் பிறவி"

"பெண்டிர் மக்கள் சுற்றமெனும் பேதைப்பெருங் கடல்" என்பவை அவை.[56] 'பிறவிப் பெருங்கடல்' என வள்ளுவப் பெருந்தகை குறிப்பிடுவதும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. இவையாவும் கடலின் ஆழம், அளவிற் பெரியதன்மை என்னும் இயல்புகளால் மேற்கூறிய வற்றிற்கு உருவகமாக வந்துள்ளன. இவை உருவகமாக வந்துள்ளதின் காரணம் அதன் தன்மைகளைப் பெரிதும் வலியுறுத்தற்கே ஆகும்.

செயற்கைக்கு வந்தது ஒரு குறிப்பு மட்டுமே "கலமார் கடல்போல் வளம்... வேணுபுரம்"[57] இது அத்தலத்தின் பெருமையைக் குறிக்கவே வந்தது. இதுவன்றியும் இறையை வணங்குவார் "கடல்போல் பெருகி ஆள்வார்" எனும் குறிப்பொன்றும் உள்ளது. கடல்தரு வளம் இங்கு உவமையானது. பக்தி இயக்கத்தின் முக்கிய கொள்கை யாம் சைவத்தை நிலைநாட்டல் என்பதற்கு உத்தியாக அமைந்தது இதுவெனக் கூறலாம்.

கடலின் நிறம், ஆழம், அளவிற் பெரிய தன்மை, வளம் ஆகியன உவமை பொருளாகவும் உருவகங்களாகவும் வந்துள்ளன. மலையைக் காட்டிலும் கடல் இவரைப் பெரிதும் கவர்ந்துள்ளது.

1.1.3 உயிரியற்கை— உயிரியற்கை இயங்கா உயிர்கள் இயங்குயிர்கள் என இருவகையன.

## 1. இயங்கா உயிர்கள்

மரமும், மரத்தின் உறுப்புகளாகிய கொம்பு, தளிர், இலை, அரும்பு, மலர், காய், கனி, விதை முதலியனவும் கொடியும் உவமையாக வந்துள்ளன.

1. மரம் : மரம் எனப் பொதுவாக ஒரிடத்திலும் வேய் என்பது பதினான்கு இடங்களிலும் பனை என்பது மூன்றிடங்களிலும் மரம் உவமையாக வந்துள்ளது.

"இரவலர் துயர்கெடுவகை நினையிமையவர்
புரமெழில் பெறவளர்
மரநிகர் கொடைமனிதர்கள் பயில்மறைவனம்"[58]

என்பதில் மரம்தரும் வளம் ஒப்புமையாக வந்துள்ளன.

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடைய யான்கண் படின்" (குறள் 216)

"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்" (குறள் 217)

என்னும் குறள்களில் வரும் ஒப்புமையையும் ஒப்பு நோக்க வேண்டும். மரத்தின் உறுப்புகளனைத்தும் மனிதர்க்கு உதவுவன. அதுபோல மனிதர் உதவுதலை உணர்த்துகிறார். இவ் ஒரு குறிப்பு மட்டுமே பயன் உவமை. பிற யாவும் வடிவ உவமையிற்பாற்படும்.

2. வேய் : உமையம்மையின் தோள்களுக்குப் பதி மூன்றிடங்களிலும் மகளிரின் தோள்களுக்கு ஒரிடத்திலும் வேய் உவமையாக வந்துள்ளது. இவை யாவும் உவமை. "வேயன தோளுமை" "வேயாயின் தோளி" என்பன[59] அவற்றுள் சில. இவர் வேயின் மறு பெயர்களாக மூங்கில், காம்பு என்பனவற்றைக் குறிப்பிடுகிறார். வேயின் திரட்சியான வடிவம், பசுமையான நிறமும் ஒளிதரு பொலிவும் இவை மூலம் உணர்த்தப் பெறுகின்றன.

3. பனை : யானையின் துதிக்கைக்கு உவமையாகப் பனை மூன்றிடங்களில் குறிக்கப் பெற்றுள்ளன. "பனைக் கைப் பகடு"[60] என்பது அவற்றுள் ஒன்று. பனை மரத்தின் திரட்சியான வடிவமும் கருமை நிறமும் இங்கு ஒப்புமைக்கு வந்தன. இவையும் மரபு வழிப்பட்டன.

4. மரத்தின் செடியின் கொம்பு : உமையம்மையின் சாயலுக்கு ஈரிடங்களிலும் இடைக்கு ஈரிடங்களிலும் கொம்பு உவமையாக வந்துள. "கொம்பன சாயல்", "கொம்பன இடை" என்பன[61] அவற்றுள் சில அழகிய தன்மையும் நிறமும் மெல்லிய வடிவும் இங்கு ஒப்புமை யாயின. இங்கு பூங்கொம்பு என்பது குறைவு.

5, தளிர் : இறைவன், இறைவியர் உறுப்பு நலன் களுக்காக, உவமையாக தளிர் இவர் பாடல்களுள் பதினொரு இடங்களில் வந்துள்ளது. உமையம்மையின் நிறத்திற்குத் தளிர் ஒப்புமையாக வந்துள்ள இடங்கள் எட்டு. அவையே மிகுதி "பைந்தளிர் மேனி"[62] என்பது அவற்றுள் ஒன்று.

உமையம்மையின் முலையின் நிறத்திற்கு ஓரிடத்தில் தளிர் உவமையாக வந்துள்ளது. சிவன் நிறத்திற்கும் அவன் பாதத்திற்கும் ஈரிடங்களில் தளிர் உவமையானது. தளிரின் மென்மையும், தளிர் நிறமாகிய மஞ்சள் கலந்த பொன்னிறமும் இவரைக் கவர்ந்தன. மழைக்காலத்தில் புதிய தளிர்களின் தோற்றம் இன்றும் இயற்கையின் விருந் தாக அமைந்துஉளதைக் காணலாம்.

6. இலை : தளிரின் அடுத்தநிலை இலை என்ப தாகும். சூலம், வேல் முதலியவற்றின் வடிவம் இலை போன்றுள்ளது. இத்தகையன மூன்றுள்ளன. இவையாவும் வடிவ உவமைகளாகும். "இலை மல்கு சூலம்"[63] என்பது அவற்றுள் ஒன்று. ஆல், அரசு முதலானவற்றின் இலைகளின் தோற்றம் இவர்கூறும் அமைப்பினுக்கு ஒத்ததாகப் பெறுகின்றன. வேலின் நுனியும் ஒத்து விளங்குகின்றன, இவை அவரின் கூர்த்த நோக்கை உணர்த்துகின்றன.

7. அரும்பு : மலரின் முதல் நிலைக்கு இப்பெயர். உமையம்மையின் முலைக்கு அரும்பு உவமையாக ஏழு இடங்களில் இவர் குறிப்பிடுகிறார். பொதுவாக அரும்பு

என ஐந்திடங்களிலும் "கோங்கின் அரும்பென ஈரிடங்களிலும் இவர் குறிப்பிடுகிறார் "அரும்பன வனமுலை"[64] என்பது அவற்றுள் ஒன்று. இவையாவும் வடிவ உவமையின் பாற்படும். மொக்கு, மொட்டு எனவும் இதைக் குறிப்பிடும் வழக்கமும் உண்டு.

8. மலர் : மலர், போது எனப் பொதுச் சொல்லால் மலர் பதினாறு இடங்களில் உவமையாக வந்துள்ளது. அவற்றை, 1 இறைவன் திருவடிக்கு உவமையாக வந்தன. 2. உமையம்மையின் கண்ணுக்கு உவமையாக வந்தன என இரு வகையாக்கலாம். முதல் வகையில் பன்னிரு குறிப்புகளையும், இரண்டாம் வகையில் நான்கு குறிப்புகளையும் அடக்கலாம்.

ஒண்மலர், மட்டுறுமலர், நறுமலர், பொன்னின் மலர் என வரும் அடைகள் மலரின் அழகு, குளிர்ச்சி, மணம் முதலியனவற்றினைக் காட்டுகின்றன. இறைவியின் கண்ணுக்குத் தடமலரை ஓரிடத்தில் ஒப்பிடுதல் அவரின் கருணையாம் குளிர்ச்சியைக் காட்டவேயாகும்.

காந்தள் உமையம்மையின் கைவிரலுக்கு இரு இடங்களிலும், பொதுவாக மகளிரின் கைவிரல்களுக்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது. காந்தளின் ஐந்து இதழ்களின் அமைப்பு கைவிரல்களின் அமைப்புபோல காணப்படுகின்றது. இவை வடிவ உவமை, இவை இவரின் கூர்ந்த இயற்கை மீது கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகிறது. இத்தகை உவமை மரபு வழிவந்ததே.

காசை மலர் சிவபெருமானின் மிடற்றுக்கு உவமையாக ஓரிடத்திலும், முருக்க மலர் பெண்களின் இதழுக்கு உவமையாக ஓரிடத்திலும் வந்துள்ளது. இவை நிறவுவமை காசையின் நீலநிறமும், முருக்க மலரின் செம்மையும் இவரைக் கவர்ந்தன.

முல்லையின் வெண்மை உமையம்மையின் முறுவலுக்கு ஒப்புமையாக ஈரிடங்களில் வந்துள. வெண்மை நிறம் இங்கு ஒப்புமைக்கு வந்தது. இவையும் நிறவுவமை.

குவளை மலர் பெண்களின் கண்களுக்கு ஐந்திடங்களிலும் உமையம்மையின் கண்களுக்கு ஆறு இடங்களிலும் உவமையாக வந்துள. காவி, நீலம் எனுமிரு பெயர்களால் குவளை குறிக்கப் பெறுகின்றது. "காவிக் கண்ணார்" "குவளையம்மலர் நயனத்தவள்" என்பன[65] அவற்றுள் சில.

இவையன்றியும் நீலமலரின் அழகில் பெரிதும் ஈடுபட்டதாகப் பல குறிப்புகளைக் குறிப்பிடலாம். பிறவற்றிற்கு நீலமலரை ஒப்புமையாக்கும் இவர், நீலமலருக்கு ஒப்புமையாக பிறவற்றை ஒப்புமையாகக் காட்டுவதிலிருந்து இவர் மலரிடத்துக் கொண்ட ஈடுபாட்டை உணர முடிகிறது. வயல்களிலும் குளங்களிலும் துறைகளிலும் மலர்ந்து காணப்பெறும் நீலமலர்கள் பெண்களின் கண்களைப் போல உள்ளன என்று இவர் குறிப்பிடுகிறார். இத்தகைய குறிப்புகளை இவர் ஐந்திடங்களில் குறிக்கிறார். "கள்வாய் நீலம் கண்மலரேய்க்கும்"[66] என்பது அவற்றுள் ஒன்று.

தாமரை மலர் இறைவன் பாதத்திற்கும், இறைவியின் பாதம், முகம், கண் முதலானவற்றிற்கும் உவமையாக ஏழு இடங்களில் வந்துள்ளது. தாமரை மலரின் செம்மை நிறம் இங்கு ஒப்புமையாகக் கூறப்பெற்றுள்ளது. "கமல பாதர்" "பங்கயமுகத்தரிவை" என்பன[67] அவற்றுள் சில. இவை யாவும் நிறவுவமை. உள்ளத்தைத் தாமரையாக உருவகம் செய்யும் இடமொன்றும் உளது. இதுவன்றியும் தாமரை மலரில் காணப்பெறும் தாதுவின் நிறத்தைப் பொன்னின் நிறத்தோடு ஒப்பிடும் குறிப்பு ஒன்றும் உளது. இது அவருடைய அழகியல் நுண்ணுணர்வைக் காட்டுகிறது.

குவளை மலரின் அழகைப் பிறவற்றோடு ஒப்பிட்டது போன்ற குறிப்புகள் மேலும் கொன்றை, செருந்தி,

வேங்கை, கோங்கு, புன்னை முதலான மலர்களின் அழகுக் குறிப்புகள் காணப்படுகின்றன. கொன்றை, கோங்கு, வேங்கை முதலிய மலர்கள் மஞ்சள் நிற மலர்கள். இவற்றின் நிற அழகு அவரைக் கவர்ந்தது போலும். அவை பொன் போல மலர்ந்து அழகாகக் காணப்பெறுகின்றன என்கிறார்.

"கொன்றை பொன்னென மலர்தரும்", "பொன்போ தலர்கோங்கு" "கனகமென மலர்களணி வேங்கை" என்பன[68] அவற்றுள் சில. தாமரைத் தாதின் நிறத்தைக் கூறியதுபோல புன்னை மலரின் தாதின் நிறம் பொன் எனக் குறிப்பிடுகிறார்.

பொன்போலும் மஞ்சள் நிற மலரின் அழகை இவர் பெரிதும் பாராட்டுகிறார். பெரிதும் மலர் பற்றிய குறிப்புகள் நிறவுவமையாக வந்துள. குரவமலர் பாம்பின் எயிறு போலவும், காந்தள் மலர் பாம்பு போலவும் காணப் பெறும் அழகையும் குறிப்பிடுகிறார். வெண்மை நிறமும் வடிவும் இவரால் ஒப்பிட்டுக் காட்டப் பெறுகின்றன.

இவை யாவும் இவரின் கட்புலன் காட்சியுணர்வின் கூர்மையையும், தெளிவையும் காட்டுகின்றன.

இத்தகைய உவமைகள் சங்க இலக்கியங்களில் மிகுதியும் காணப் பெறுகின்றன. இவை யாவும் மரபுவழிப் பட்டனவாகவே காணப்பெறுகின்றன.

9. காய் : மா, வாழை, கமுகு முதலிய காய்கள் உவமைகளாகவும் உவமேயங்களாகவும் வந்துள்ளன.

மாவில் பிளந்த வடு உமையம்மையின் கண்களுக்கு உவமையாக நான்கிடங்களில் வந்துள. நுளைச்சியர் கண்களுக்கு உவமையாக ஓரிடத்தில் மாவடு வந்துள்ளது. இது மாவழ, வடு, வடி எனும் சொற்களால் குறிக்கப் பெறுகின்றன. இவை வடிவ உவமையின் பாற்படும்,

"மிழைமொண்கண் மடவாள்"69 என்பது அவற்றுள் ஒன்று.

வாழைக் குலையின் அழகும், கமுகுக் குலையின் அழகும் இவரைக் கவர்ந்துள்ளன. வாழை பொன்நிற மாகவும் கமுகு செம்மை நிறமாகவும் காணப்படுகின்றன. இவற்றின் நிறத்திற்கு ஒப்புமையாகச் சிலவற்றை இவர் காட்டுகிறார். இத்தகையன நான்கு குறிப்புகள் உள.

"முரண் வேழக் கைபோல் வாழை காய்குலை ஈனும்"

"குலை வாழைக் கமுகும்பொன் பவளம் பழக்கும்"

என்பன70 அவற்றுள் சில. இவை அவரது அழகியல் உணர்வைக் காட்டுகின்றன. இயற்கையின் ஈடுபாட்டைக் காட்டுகின்றன.

10. கனி: கனி வகைகளுள் தொண்டைக் கனி மட்டும் நான்கிடங்களில் குறிக்கப் பெறுகின்றன. உமையம்மையின் வாய்க்கு உவமையாக வந்துள. அவற்றின் செம்மை நிறம் ஒப்புமைக்கு காரணமாயது.

"கொவ்வைச் செவ்வாய் கோமள மாது"71 என்பது அவற்றுள் ஒன்று. தொண்டை கொவ்வை என இரு பெயரால் இக்கனி அழைக்கப் பெறுகிறது. இவையன்றி யும் இறைவனைக் கனி என்றும் குறிப்பிடுகிறார், சுவை யும் பயனும் இவர் இதன் மூலம் குறிப்பிடுகிறார்.

தினையின் சிறிய அளவினை இறைவன் திருதுமிடற்றின் அளவுக்கு ஒப்பிடும் இடம் ஒன்றுள்ளது. தினைத்தனை யாம் மிடறு என்பதது. சிறிய அளவுக்குத் தினையை ஒப்பிடுதல் புதுமையாக உள்ளது.

11. செடி: பஞ்சு என்னும் பருத்திச் செடியின் உறுப்பு உமையம்மையின் திருவடிகட்கும் மகளிரின் பாதங் களுக்கும் ஒப்புமையாக ஆறு இடங்களில் வந்துள.

மென்மைத்தன்மை அதற்குக் காரணமாகலாம். இதுவும் மரபு வழிப்பட்டதே ஆகும்.

12. கொடி: உமையின் இடைக்கு எட்டு இடங்களிலும் சாயலுக்கு ஈரிடங்களிலும் கொடி உவமையாக வந்துள. வஞ்சிக்கொடி எனும் ஒரு குறிப்பைத் தவிர பிறவெல்லாம் பொதுப் பெயராலேயே அமைந்துள்ளது. இவையும் மரபு வழிப்பட்டன. சாயல் தவிர்த்த பிற வடிவ உமையின் பாற்படும்.

மரம், செடி, கொடிகளின் உறுப்புகளின் நிறம் பெரிதும் பேசப்படுகின்றன. கனிகளைப் பற்றிகூறும் போதே நிறம் பேசப்படுகிறது. குழந்தைப் பருவத்தினர்க்கு நிறங்களின் மீது கவனம் திரும்புதல் இயல்பான ஒன்று. இவரின் இளமைப் பருவத்தை அதற்குக் காரணமாகக் காட்டலாம்

1. 1. 3. இயங்குயிர்:

உயிரியற்கையுள் விலங்குகள், பறவைகள், நீர்வாழ்வன முதலியன இயங்குயிர்களாகும்.

1. 1. 3. 1. விலங்குகள்:

மான், யானை, வேங்கை, மந்தி, ஆடு, பன்றி முதலான விலங்குகள் உவமைகளாக வந்துள்ளன.

1. மான்: பெண்ணுக்கு மானும், பெண்ணின் கண்களுக்கு மானின் விழியும் உவமையாக வருதல் சங்க இலக்கியந் தொட்டு வருகின்ற பழ மரபு. இவர் பாடல்களுள் உமையம்மைக்கு மூன்றிடங்களிலும் மகளிர்க்கு ஓரிடத்திலும் மான் உவமையாக வந்துள. உமை அம்மையின் கண்களுக்கு மானின் கண்கள் உவமையாகப் பதினெட்டு இடங்களில் வந்துள்ளது. "மானை நோக்கி" "மடமான் விழி யுமை" என்பன[72] அவற்றுள் சில.

இவற்றை வடிவ உவமையாகக் கூறுவதிலும் வினையுவமையாகக் கூறுதல் சாலச் சிறந்தது. மடமைத்

தன்மையும், பிறழ்தலும் மருண்டு நோக்குதலுமாகிய செயல்களை உடைய மானின் கண்கள் இவரைக் கவர்ந்து இறைவியின் கண்ணுக்கு உவமையாக்கி இருக்கும். அச்சம் கொண்ட மிரண்ட பார்வையே இங்குக் குறிக்கத்தக்கது. இவையும் மரபு வழிப்பட்டனவே.

2. யானை: உமையம்மையின் நடைக்குப் பிடியின் நடை உவமையாகியது. இத்தகையன மூன்று. அசைந்த மென்னடை இங்கு உவமையாகின்றது. இவை வினையுவமையின் பாற்படும். யானை திரிதலாகிய செயலும் ஓரிடத்தில் வீணே திரிந்தற்கு உவமை ஆயிற்று. நாவீகேரத்து இளம்பாளை கரியின் மருப்பினைப் போலக் காணப்படுகிறது என்றொரு குறிப்புளது. யானைத் தந்தம் இங்கே வடிவத்தாலும் நிறத்தாலும் ஒப்புமையானது. அதுவன்றியும் இயற்கைக்கு இயற்கையே உவமையாக வந்தது. இவர் இயற்கைமீது கொண்ட ஈடுபாட்டையும், நுண்ணுணர்வையும் காட்டுகின்றது.

வேங்கை, மந்தி, ஆடு, பன்றி முதலான முறையே ஒவ்வொரு இடத்தில் உவமையாயின.

வேங்கை மலர்கள் பூத்துத்திரிந்து மூடிய பாறையின் தோற்றம் சினவேங்கையைக் காட்டுகிறது என்கிறார் இவர்

"உடைந்த காற்றுக் கயர் வேங்கை பூத்துதிரக்
கிடந்த வேங்கை கல்லறை கண்மேல் சினமா முகஞ்
செய்யும்"

என்பது[72] அது ஒப்புமைத் தோற்றம் பற்றி வந்தது இது. மந்தி திரிதலாகிய செயல் இவர் தன் நிலையைக் குறிப்பிடும்போது உவமையாக வருகிறது. ஆடுபோல வாழ்க்கை என்பது ஒன்று. பன்றிகள் பூழ்தி கிளைக்கும் செயலும் இவரால் காட்டப்பெறுகின்றது. விலங்குகள் உவமையாக வந்துள்ள இடங்களில் பெரும்பான்மை இயக்கமே காட்டப்

பெறுகின்றன. தாவரங்களின் வடிவம், அழகு, நிறம், மணம் முதலியன உவமையாக வர விலங்குகளின் இயக்கம் மிகுதியும் உவமையாகின்றது.

1. 1, 3. 2 பறவைகள்:

பறவைகளில் அன்னம், மயில், குயில், கிளி, ஆந்தை ஆகியன உவமைகளாக வந்துள.

1. மயில்: இவர் உமையம்மையின் சாயலுக்கு மயிலின் சாயலை ஒப்பிடுகிறார். இத்தகையன பன்னிரு குறிப்புகள்..."மயிலார் சாயல்மாது", "மயிலினோர் இயல்" என்பன[78] அவற்றுள் சில. இவை உருவுவமை. இவை யாவும் மரபு வழிப்பட்டன. மகளிரை மயிலாகக் குறிப்பிடும் குறிப்பொன்றும் இவர் காட்டுகிறார். இவை யன்றியும் மயிலின் குரலைப் பெண்களின் குரலுக்கும் மயிலின் நடையை உமையம்மையின் நடைக்கும் ஒப்பிடும் இருகுறிப்புகள் உள. இவையிரண்டும் புதியன. குயில், கிளி முதலியவற்றின் குரலை மகளிரின் குரலொடு ஒப்பிடு வார்களே அன்றி மயிலின் குரலை ஒப்பிடுவதில்லை. மேலும் அன்னம், பிடி ஆகிய இவற்றின் நடையை பெண் களின் நடைக்கு ஒப்பிடுவது மரபு. இவர் உவமையாக அவற்றைக் காட்டுகிறார். மயிலின் அழகொடு நடையை யும், குரலையும் இவர் விரும்பியதை அவை காட்டுகின்றன. இத்தகையன புதுமையானதாகக் காணப் பெறுகின்றன.

அன்னப்பறவை உமையம்மையின் நடைக்குப் பத்திடங் களிலும் பெண்கள் நடைக்கு ஓரிடத்திலும் உவமையாயின. உமையம்மையும் பெண்கள் அன்னப்பறவையாக ஒப்பிடும் குறிப்புகளும் மூன்றுள. மெல்லென நடத்தலாகிய செயல் இவரின் கவனத்தைக் கவர்ந்தது எனலாம்.

3. பிற: குயிலின் குரலையும் கிளியின் குரலையும் உமையம்மையின் குரலொடு ஒப்பிடும் குறிப்புகள் முறையே மூன்றுள. பூதங்களின் விழிக்கு ஆந்தையின்

விழியை ஒப்பிடுகிற காட்சியொன்றுள்ளது. பெரிய உருண்டை வடிவமும் மிரட்டும் நோக்கும் அதற்குக் காரண மாகலாம்.

பாம்பு உமையம்மையின் அல்குலுக்கு உவமையாகப் பன்னிரு இடங்களில் வந்தன. இவை மரபுவழிப்பட்டன. படத்தொடு விளங்கும் பாம்பு இங்கு ஒப்புமையாவதால் இவையாவும் வடிவுவமை ஆகும். இடைக்குப் பாம்பை உவமையாகக் கூறும் புதிய உவமை இவரிடம் உள்ளது.

இதுவன்றியும் காந்தள் மலரும் குரவமலரும் பாம்பு போலப் பூத்துக் காணப்பெறும் காட்சிகள் இவர் பாடல் களின் எட்டிடங்களில் காணப்பெறுகின்றன. "அரவிற் றோன்றிக் கோடல் பூத்தது" "பையடை நாகவாயில் எயிறாரமிக்க குரவம்பயின்றும்" என்பன. 74 சில காந்தள் மலர் பாம்பு போன்ற காட்சியினைத் தருகிறது. குரவ மலர் பாம்பின் எயிறுபோன்றும் காட்சி தருகிறது. இத்தகையன மரபின் வழிப்பட்டனவே. மலரின் அழகில் பெரிதும் ஈடுபட்டிருப்பதை இவை உணர்த்துகின்றன. இத்தகைய உவமைகள் பல சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன.

**I. 1. 3. 4. நீர்வாழ்வன:**

நீர் வாழ்வனவற்றுள் மீனினங்கள் மட்டும் உவமை யாக வந்துள்ளன. அவற்றுள்ளும் கயல், சேல், கெண்டை எனும் மூவகை மட்டுமே காணப்பெறுகின்றன. கயல் இருபதிடங்களிலும், சேல் ஒன்பது இடங்களிலும், கெண்டை ஓரிடத்திலும் உமையம்மையின் கண்களுக்கும் மகளிர் கண்களுக்கும் உவமையாக வந்துள்ளன. மகளிர் விழிபோலக் கயல் உளதாக உவமேயமாக ஒரு குறிப்பும் உளது.

கயல் உவமையாக வந்துள்ள இடங்களே மிகுதியாகும். இம்மீன்களின் பிறழ்வும் நீரில் காணப்பெறும் இயல்பும்

ஆகிய தன்மைகளிலே பெண்களின் கண்களுக்கு உவமையாக வந்தன. இவை வினையுவமத்தின் பாற்படும். இவை யாவும் மரபு வழிப்பட்டனவாகும்.

**1. 1. 4.** வானியற்கைப் பொருட்கள்:

கதிரவன், மதி, மேகம், மின்னல், இடி, மழை முதலானவை இவர் பாடல்களுள் உவமைகளாக வந்துள்ளன.

1. கதிரவன்: கதிர் ஞாயிறு எனும் பெயர்களால் இது அழைக்கப் பெறுகிறது. இறைவன் திருமேனி நிறத்திற்கும் மார்பு நிறத்திற்கும் ஒப்புமையாகக் கதிரவன் ஒளியை இவர் காட்டுகிறார். இத்தகைய மூன்று குறிப்புகள் உள. "செங்கதிரென நிறமையதோர் செழுமணி மார்பு"[75] என்பது அவற்றுள் ஒன்று. கதிரவனின் செம்மை நிறம் இங்கு ஒப்பாகிறது.

இதுவன்றியும் இறைவன் முன் வினைமேவுதலாகியச் செயலுக்கு "செறிகதிர் முன் இருள் கெடும்"[76] செயலை ஒப்பாகக் காட்டுகிறார். இது வினையுவமையாகும். வினைகெடும் செயலை எல்லார்க்கும் விளங்கும் செய்தி கொண்டு உணர்த்துகின்றமை இவரது சிறப்பாகும்.

உயிரிடத்தில் மும்மலங்கள் இருந்துகொண்டு அஞ்ஞானமாகிய இருளில் ஆழ்த்துகின்றன. அந்த அஞ்ஞானம்—அறியாமை நீங்க வேண்டுமெனில் இறைவன்—இறையருள் தேவை. அவ்விறையருள்தான் கதிரவன். கதிரவன் ஒளியைக் கண்டவுடன் இருள் விலகுதல் போல இறைவன்-முன்னர் வினைகளும் நீங்குகின்றன. என்ற கருத்தை இவ்வியற்கைக் காட்சி மூலம் தெளிவாக உணர்த்துகின்றார்.

2. மதி:

இது மதி, பிறை, நிலா எனும் பெயர்களால் குறிப்பிடப் பெறுகிறது. வடிவ உவமையாக எட்டும், நிற உவமையாக பதினேழும் வந்துள்ளன.

உமையம்மையின் நுதலுக்கு ஏழிடங்களிலும், பன்றி மருப்பிற்கு ஓரிடத்திலும், பிறைமதி வடிவ அளவில் ஒப்பாகக் காட்டப்பெற்றுள்ளது.

"பிறை நுதலவள்"

"கேழல் வெண்பிறை"

என்பன[77] அவற்றுள் சில. பிறைமதி எனும்போது எண்ணாள் பத்துத் திங்களாகும். குறுந்தொகையில் "எண்ணாட் பக்கத்துக் கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்" என்ற குறிப்பொன்றும் உள்ளது.

உமையம்மையின் முகத்திற்கு நான்கிடங்களிலும் மகளிர் முகத்திற்குப் பதினொரு இடங்களிலும் முழுமதி உவமையாக வந்துள்ளது. இவை நிறம்பற்றியும் வடிவம் பற்றியும் வந்தன எனலாம்.

இதுவன்றியும் "மலைமகள் கதிர் நிலா முறுவல்"[78] என்றகுறிப்பு நிலவின் ஒளி முறுவலுக்கு ஒப்புமையானதாகக் காட்டுகிறது. இதுவும் நிறவுவமை. இறைவன் நிறத்திற்கு ஒப்புமையாக வந்த இடம் ஒன்றுளது.

மேலும் இவர் ஆமையின் ஓடும், மணற்கானல் முத்தும் மதியம் போலக் காணப்பெறுகிறது என்கிறார். முன்னது வடிவாலும் பின்னது நிறத்தாலும் உவமையாயின. இவை இவரது இயற்கையின் ஈடுபாட்டைப் பெரிதும் காட்டுதலைப் புலப்படுத்துகின்றன.

3. மேகம் :

சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு ஆறு இடங்களிலும் திருமாலின்நிறத்திற்கு நான்கிடங்களிலும், இராவணன் நிறத்திற்கு ஓரிடத்திலும் யானையின் நிறத்திற்கு ஈரிடங்களிலும் வேள்விப் புகையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் மேகம் உவமையாக வந்துள்ளது. இவையாவற்றுக்கும் மேகத்தின் கரிய நிறம் ஒப்புமை காட்டப்பெற்றுள்ளது.

இது புயல்-மேகம், கொண்டல், மழை எனும் பல பெயர்களால் இவர் பாடல்களுள் குறிக்கப் பெற்றுள்ளது. இவையும் நிறம்பற்றி வந்த உவமைகளாகும். வானின் தோன்றிய கரியமேகம் இவற்றைச் சார்ந்தன, அதுவன்றியும் அக்கருமேகம் தந்தபயனும் கவனத்தை ஈர்த்துள்ளது "புயலிலங்கும் கொடையாளர்," "புயலவன்" என்பன[79] அவை தருபயனை உணர்த்துகின்றன. இவை இரண்டும் வினையுவமை ஆயின.

"மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே"

எனும் சங்கப் பாடல் தொடரும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. மேகம் பற்றியன யாவும் மரபுவழிப்பட்டனவே ஆகும்.

4. மின்னல் :

சிவபெருமான் சடைக்குப் பதினெட்டிடங்களிலும் சிவபெருமான் திருமேனி நிறத்திற்கு ஈரிடங்களிலும் சிவபெருமான் அணிந்துள்ள புரிநூலின் வடிவு, நிறம் இரண்டிற்கும் மூன்றிடங்களிலும் மின்னல் உவமையாக வந்துள்ளது.

"மின்னியல் செஞ்சடை"
"மின்தயங்கு சோதியான்"
"மின்னு பொன்புரி நூலினார்"

என்பன.[80] அவற்றுள் சில. புரிநூல் பற்றியன வடிவு, நிறம் ஆகிய இரண்டும் பற்றி எழுந்தன. பிறயாவும் செம்மை நிறம் உணர்த்தும் நிறவுவமைகளாகும்.

உமையம்மையின் மேனிக்கு ஓரிடத்திலும் உமையம்மை இடைக்கு எட்டு இடங்களிலும் மின்னல் உவமையாக வந்துள்ளது. முன்னது நிறவுவமை பின்னவை வடிவ உவமை. மின்னற்கீற்றுப் போன்ற வடிவம் இடைக்கு உவமையாகிறது.

இதுவன்றியும் வடிவு, நிறத்திற்கு ஈரிடங்களிலும் எரிக்கு ஓரிடத்திலும், எயிற்றுக்கு ஓரிடத்திலும் உவமை யாக மின்னல் காட்டப் பெற்றுள்ளது. இவையாவும் மரபு வழியாகக் கூறப்பெறுவனவே.

மின்னலின் ஒளியும் செம்மை நிறம். கீற்றுப்போல் தோன்றிமறையும் வடிவம் இவரைக் கவர்ந்திருக்க வேண்டும். மின்னலின் நிறமே பெரிதும் இவரால் பேசப் பெறுவதிலிருந்து நிறங்கள் பற்றிய இயற்கை ஈடுபாடு இவ ரிடம் மிகையாக உள்ளது எனலாம்.

5. இடி :

இடியின் குரல் இவரால் உவமையாக, ஏற்றின் குரலுக்கு மூன்றிடங்களிலும் முழவு, முரசு முதலியவற்றின் ஒலிக்கு ஈரிடங்களிலும், கடலொலிக்கு ஓரிடத்திலும் கரி யின் பிளிறலுக்கு ஓரிடத்திலும் குறிப்பிடப் பெறுகின்றது.

அதிர்ந்து ஒலித்தலாகிய செயல் இவரால் கவரப்பெற் றுள்ளது. அதுவே இங்கு வினையுவமையாக வடிவெடுத்தது. இடியின் பேரொலி யாவற்றினும் பெரிதாய் ஒலித்தலால் அவரைக் கவர்தல் அச்சமூட்டல் இயல்பே ஆகும். இவை யாவும் மரபுவழியாக வந்தனவே ஆகும்.

"இடியா ரேறுடையாய்"

"இடிகோள் முழவோசை"

"மதகரியினனின மிடியின் குரலதிர"

என்பன[81] அவற்றுள் சில. இடியின் குரலதிர எனும் சொல்லாட்சி இடியின் பேரோசையைச் சுட்டக் காணலாம்.

6. மழை :

மழையில் உள்ள பனித்துளி மழைபோல விழும் ஒரு குறிப்பும், 'பெய்யுமாயமழையானவன்''[82] எனும் குறிப் பொன்றும் மட்டும் மழை உவமையாக உருவகமாகவும்

வந்த குறிப்புகளாகும். மூங்கிலிலிருந்து பனித்துளி விழும் காட்சி இவர் இயற்கைக் காட்சியில் தன் நேரத்தை செல விட்டமையை—அவரின் கூர்ந்த நோக்கைக் காட்டுகிறது. இறைவன் அருளுவன் என்பதை உணர்த்த மழையை இவர் காட்டுகிறார். மழையுதவுதலை மண்ணவர் அறிவர். இறையுதவுதல் அறியாராய் இருக்கின்றனர். அதை யுணர்த்த இவர் "மழையானவன்" "என்று குறிப்பிடுகி றார், "கைம்மாறு கருதாத கடப்பாடு மாரிமாட்டு" உண் டல்லவா. அதனால்தான் மழையை உவமையாக்குகிறார்.

## 1. 1. 5. தீ இயற்கை

தீ இயற்கைப் பொருள்களுள் கதிரவன், மதி என்பன வான் இயற்கைப் பொருள்களுள் காட்டப்பெற்றவை. இங்குத் தழல் என்பது மட்டும் நோக்கப் பெறுகிறது.

### 1. தழல்

இறைவன் திருமேனி நிறத்திற்கு முப்பத்தொன்பது இடங்களிலும் சடையின் நிறத்திற்கு இரு இடங்களிலும் இராவணன் முடிக்கு ஓரிடத்திலும் தழல் உவமையாக வந் துள்ளது. இவையாவும் நிறம் பற்றி வந்த உவமையாகும்.

"அழலார் மேனி" "அனல் நிகர்சடை" என்பன[83] அவற்றுள் சில. கூற்றுவன் விழிக்கு அலை உவமையாகக் காட்டும் இடம் ஒன்று.

இறைவன் தழலாக உருவகப்படுத்திய இடங்கள் ஒன்பது. அவற்றுள் "கனலவன்" என்பது ஒன்று. இதைக் குறியீடாகக் கூறலாம். தீ தன்னை சேர்த்தி சுத்தப் படுத்தித் தன்னுள் சேர்ப்பதைப்போல இறைவன் தன்னைச் சேர்ந்தாரைச் சுத்தப்படுத்தித் தன்னுள் ஐக்கியப் படுத்திக் கொள்வதை இதன் மூலம் காட்டுகிறார்.

இதுவன்றியும் தாமரையின் நிறம் தீயைப்போல உள்ளதாக இரு இடங்களில் காட்டுகிறார். இவர் அம்மலர்

மீது கொண்ட ஈடுபாட்டை அது காட்டுகிறது. பெரும் பான்மையும் செந்நிற மலர்களை தீயின் நிறத்தோடு ஒப்பிட்டுக் காட்டுவது காலந்தோறும் காட்டும் மரபுவழிப் பட்ட உண்மையே.

1. 1. 6. காலவியற்கை

இரவு, மாலை என்ற இரு பிரிவுகள் மட்டும் உவமை யாக வந்துள்ளன.

இரவு : இறைவன் கண்டத்திற்கு ஐந்திடங்களிலும், இராவணன் நிறத்திற்கு ஈரிடங்களிலும், மேதியின் கரிய நிறத்திற்கு ஓரிடத்திலும் இருளின் நிறம் உவமையாக வந் துள்ளது. கரிய நிறமே இவரால் ஒப்பாகக் காட்டப் பெறு கிறது. "இருள் கூர்ந்த கரியமிடற்றர்," "இருளைப் புரை யும் நிறத்திலரக்கன்" என்பன[84] அவற்றுள் சில. இவையும் நிற உவமைகள், இவையும் மரபுவழி வந்தனவே. இருளை யும் அழகுணர்ச்சியில் கண்டு, காட்டும் சூழல் இனிமை யானதே,

மாலை

இது அந்தி என்ற சொல்லால் காட்டப் பெறுகிறது. இறைவன் திருமேனி நிறத்திற்கு அந்திக் காலத்தினை உவமையாக நான்கிடங்களில் காட்டுகிறார். மாலைக் காலத்துச் செவ்வான் இன்றும் மக்களால் விரும்பிக் காணப் பெறுவதை யாவரும் அறிவர். இவரையும் மாலைக் காலம் ஈர்த்திருக்கிறது. இது இவரது இயற்கை மீது கொண்ட அழகியல் உணர்வைக் காட்டுகிறது. இவையும் மரபுவழி வந்த நிறவுவமைகளே ஆகும்.

1.1.7. மணிகள்

நீலமணி, பவளம், முத்து முதலான மணிகள் உவமை களாக வந்துள்ளன, நீலமணி, சிவபெருமான் கண்டத்தின்

நிறத்திற்கு இருபத்தொரு இடங்களிலும் அரக்கன் நிறத்திற்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது.

"மணி நீல கண்ட முடையபிரான்"
கருமணி நிகர்கள் முடை"

என்பன.[85] அவற்றுள் சில. இவையாவும் நிறஉவமைகள்.

இறைவன் திருமேனி நிறத்திற்கு ஒன்பதிடங்களிலும் சடைக்கு ஓரிடத்திலும் சிவன் மார்புக்கு ஓரிடத்திலும் இறைவியின் வாய்க்கு ஈரிடங்களிலும் பெண்களின் எழிலுக்கு ஓரிடத்திலும் பவளம் உவமையாக வந்துள்ளது. இவையும் நிறவுவமைகளே ஆகும்.

உமையம்மையின் முறுவலுக்கு ஐந்திடங்களிலும் நீற்றின் ஒளிக்கு ஓரிடத்திலும் உவமையாக முத்து வந்துள்ளது. இவையாவும் நிறவுவமைகள்—"முத்திலங்கு முறுவலுமை"[86] என்பது அவற்றுள் ஒன்று.

கண்ணீர்ச் சொட்டு முத்தைப் போலக் காட்சி தருவதை ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். இதுவும் மரபாக வருவதே. இறைவன் திருமேனிக்கு—நீறணிந்த திருமேனிக்குச் சங்கை ஓரிடத்தில் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

மணிகள் யாவும் நிறமிக்கன. அவற்றுள்ளும் பவளத்தின் செம்மை நிறமும் முத்தின் வெண்மை நிறமும் நீலமணியின் கருநீல நிறமும் வெண் நிறத்தில் அடங்குவன. மணிகள் அவற்றின் நிறத்தாலே மக்களைக் கவர்கின்றன. இவரும் மணிகளின் நிறத்திலேயே பெரிதும் ஈடுபட்டவராகக் காணப்படுகிறார்.

## 1.1.8. பிற

ஞானசம்பந்தர் மிகையாகக் காட்டுவன உவமைகளே. அவற்றுள் அவர் நிறவுவமைகளை மிகுதியாகக் காட்டுகிறார். அடுத்த நிலையில் நிற்பன வடிவ உவமைகளாகும். இவரது இளமைத் தன்மை நிறம் பற்றிச் சென்றதற்குக்

காரணமாகலாம். அவர் காட்டும் இயற்கைப் பொருள் வந்த அணிகளை,

1. இறைவன் இறைவியர் உறுப்பு நலன்களுக்கு வந்தன.
2. இயற்கைப் பொருளுக்கு இயற்கைப் பொருள் உவமையாய் வந்தன.
3. செயற்கைக்கு இயற்கை உவமையாக வந்தன.
4. உலகியல்காட்ட இயற்கை உவமையாக உருவக மாக வந்தன.
5. மகளிர் உறுப்பு நலன்களுக்காக உவமையாக வந்தன.
6. இராவணன், கூற்றம்—இவர்களுக்கு உவமையாக வந்தன.

என ஆறு வகைப் பாட்டில் அடக்கலாம்.

இறைவன் இறைவியர்க்கு உவமையாக வந்தன. இவற்றுள் மிகுதியாக உள்ளன. அவற்றுள் உமையம்மையை மிகுதியாகக் குறிப்பிடுகிறார். ஞானப் பாலைப் பொழிந் தூட்டிய நினைவு அதற்குக் காரணமாகலாம்.

இயற்கைக்கு இயற்கை உவமையாக வந்தன. யாவும் இவரின் இயற்கை ஈடுபாட்டை அழகியல் உணர்வைத் தெளிவு படுத்துகின்றன.

## 1.2. திருநாவுக்கரசரும் அணிகளாக வந்த இயற்கைப் பொருள்களும்

1.2.1, நிலவகைமை : நிலவகைமையில் இவர் பாடல் களுள் மலை மட்டும் (திருஞான சம்பந்தரைப் போல) குறிப்பிடப் பெறுகின்றது. மலை; மலை உவமையாக வந்துள்ள இடங்கள் இருபத்தாறு ஆகும். அக்குறிப்பு களை—உவமைகளை

1. இறைவன், இறைவி உறுப்புகளுக்கு உவமையாக வருதல்.

2. இயற்கைப் பொருளுக்கு உவமையாக வருதல்.

1. இறைவன், இறைவன் உறுப்புகட்கு உவமையாக வருதல்.

என வகைப்படுத்தலாம்.

சிவபெருமான் தோள்களுக்கு ஐந்திடங்களிலும் சலந்தரன், மன்னர் முதலியவர்களின் தோள்களுக்கு முறையே ஒவ்வோரிடங்களிலும் அரக்கன் தோள்களுக்கு மூன்றிடங்களிலும் மலை உவமையாக வந்துள்ளது. இத்தகைய உவமைகள் மரபு வழிபட்டன. இவை திருஞான சம்பந்தரின் உவமைகள் போலவே காணப் படுகின்றன.

"பொருப்போட்டி நின்ற திண்புயம்".

"மால்வரைய திண் தோளும்"

என்பன[87] அவற்றுள் சில.

சிவனுக்கு உவமையாக ஐந்திடங்களிலும் உருவகமாக மூன்றிடங்களிலும் மலை வந்துள்ளது. ஆனால் இங்கே இயற்கையான குன்று என்றில்லாமல் "பவளக்குன்று" "மாமணிக் குன்று" கனகத் தனிக்குன்று என்று இல் பொருள் உவமையாக வந்துள்ளன. ஒளி நிறம் பற்றி அவை அவ்வாறமையினும் இயற்கை—மலையின் தோற்றமே அவரை அவ்வாறு உணரவைத்தன எனலாம். பக்தி இயக்கக் காலத்தில் மலையை இறைவனுக்கு ஒப்பிடும் விதம் வளர்ந்து காணப் பெறுகிறது.

இயற்கைப் பொருளுக்கு உவமை

யானையின் தோற்றத்திற்கு ஐந்திடங்களிலும் விடையின் தோற்றத்திற்கு ஒரிடத்திலும் மலை உவமையாக

வந்துள்ளது. உயிரில் பொருள்களுக்கு இவர் பாடல்களுள் மலை உவமையாக வரவில்லை.

"பருப்ப தம்மத யானை"

"குன்றன்ன விடையான்"

என்பன[88] அவை. சிவபெருமானின் வீரத்தைச் சிறப்பித்த அவனால் தோலுரிக்கப் பெற்ற யானை மிகப் பெரிய மலையைப் போன்றது என்ற குறிப்பு வந்துள்ளது. அவனேறும் விடையின் சிறப்பை உணர்த்த மலை விடைக்கு உவமையாயிற்று.

அரக்கரின் மணிமுடிக்கு மலை உவமையாக வந்த ஓரிடத்தை செயற்கை பொருளுக்கு உவமையாக வந்தது எனலாம். ஞானசம்பந்தர் போல மதில், மாடமாளிகை, கப்பல் முதலானவற்றிற்கு மலை உவமையாக இவர் பாடல்களுக்குள் காட்டப் பெறவில்லை.

திருஞான சம்பந்தர் அளவுக்கு மலை இவர் மனதைக் கவர்ந்தது என்று கூறமுடியாது. இவருடைய தொண்டு மனமும் பக்தி நிலையும் அதற்குக் காரணமாகலாம்.

### 1.2.2. நீர் நிலைகள்

நீர் நிலைகளுள் கடல், ஆறு, அருவி, ஏரி, குளம், (சுழி, குமிழ்) என்பன உவமையாகவும் உருவகமாகவும் வந்துள்ளன. மேலும் கடல் இவர் பாடல்களில் வந்துள்ளது. நீர்நிலைகளில் கடல் இவர் பாடல்களுள் உருவகமாக இருபத்துமூன்று இடங்களிலும் உவமையாக ஏழு இடங்களிலும் வந்துள்ளது.

1. கடல் :

உருவகமே மிகுதியாக உள்ளது.

சிவன் கடலாக விளங்குகிறான். என்று உருவகமாக வந்துள்ள மூன்றிடங்கள் தவிர்த்துப் பிறவெல்லாம்

உலகியலை உணர்த்துவதே. உலகியலை உணர்த்துவதாகப் பத்தொன்பது இடங்கள் உள்ளன. துன்பத்தையும் தடுமாற்றத்தையும், வினையையும், பிறப்பையும் ஞானத்தையும் பொய்மையயும் கடலாக உருவகப் படுத்துகிறார்.

"இடர்க்கடலுள் அழிக்கப்பட்டு" "வெம்மையான வினைக்கடல்" "பொய்ம்மாயப் பெருங்கடல்" என்பன[89] அவற்றுள் சில,

உமையம்மையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு ஓரிடத்திலும் திருமாலின் நிறத்திற்கு ஆறு இடங்களிலும் கடல் நிறம் உவமையாக வந்துள்ளது.

"கடல் வண்ணமாகி நின்ற தேவி"

"மறிகடல் வண்ணன்"

என்பன[90] அவற்றுள் சில நிறம் மட்டுமே உவமையாக வந்துள்ளது.

கடலில் ஒப்புமையாக ஓரிடத்தில் வந்துள்ளது.

கடலின் அளவு ஆழம் முதலிய தன்மைகள் உருவகமாக வந்துள்ளன.

துன்பம் கடலாக உருவகப்படுத்தப் பெற்ற இடம் மிகுதி. இவை தன் கழிவிரக்க நிலை கூறுகையில் அமைந்துள்ளன. மிகுதியான அளவும் அளவிடற்கரிய ஆழமும், மீண்டும்மீண்டும் வருதலாகிய அலைகளையும் உடையதாகக் கடல் விளங்குவது, இவரின் கவனத்தை கவர்ந்திருக்க வேண்டும். ஆகவே தான் அவற்றின் வலிமையையும் அளவிற் பெரிய தன்மையும் அளவிற்கரிய ஆழத்தையும் கண்டு கடலாக உருவகப்படுத்தினார்.

இவர் தொண்டுளமும் கழிவிரக்கமும் பக்தியும் இவ்வாறு கடல் உருவகமாக அமையக் காரணம் எனலாம்.

இயற்கைப் பொருளின் ஈடுபாட்டைக் காட்
உலகியல் அறிவின் விரிவே இவற்றில் காண மு
இத்தகையன திருஞான சம்பந்தரிடமும் உள்ளன.

2. ஆறு:

கங்கையாறு இரு இடங்களில் குறிக்கப் பெ
கெடிலநதியின் சிறப்பைப், புனிதத் தன்மையை உ
"கெங்கைய தெனப்படும் கெடிலம்"₉₁ என்ற குறி
காட்டுகிறார். காவிரிக்குச் சிறப்பை திருஞான சம்
இத்தகைய உவமை மூலம் காட்டுவது போல,
கெடிலத்திற்குக் காட்டுகிறார். ஆற்று வருணனை
கெடிலத்திற்குச் சிறப்பு தந்தது போலவே
தருகிறார். கெடிலத்தின் மீது கொண்ட பற்றை
காட்டுகிறது. மேலும் தென்னாட்டு ஆறுகளும்
மானவை என்பதை உணர்த்துவதற்காகப் பயன்ப
உத்தியாகவும் கொள்ளலாம்.

மற்றுமொரு குறிப்பு இறைவன் கங்கையைச்
தலையில் அணிந்து கொண்டதைச் சிறப்பிக்
இதன் மூலம் இறைவன் ஆற்றலை உணர்த்துகிறார்

"கங்கை பனி போலாங்குச் செறித்தா
என்பதது. பனிநீரின் அளவு இங்கு ஒப்புமைய
இங்கு ஆசிரியர் பனித்துளியைக் குறிப்பிடுகிறார்.
களிலும், மலர்களிலும் கண்ட பனித்துளிகள் இ
கவர்ந்தன போலும். தமிழர் மூங்கில் இலை
தூங்கும் பனி நீரில் மனதைப் பறிகொடு
களல்லவா,

3. அருவி

மார்பின் புரிநூலுக்கு மலை யருவியை உவமை
காட்டுகிறார். வெண்மை நிறம் பற்றி வந்த நிறவு

யாக இதைக் கொள்ளலாம் அருவியின் வெண்மை நிறமே இவரை கவர்ந்துள்ளது.

4. ஏரி:

ஏரி நிறந்தனைய செல்வன் கண்டாய்"[93] என்றொரு தொடர் மட்டும் ஏரி உவமையாக வந்தது ஆகும். இவர் மட்டுமே இறைவனுக்கு ஒப்புமையாக நீர் நிறைந்த ஏரி யைக் கூறுகிறார். இது இவர்காட்டும் உவமை. ஆறுஇல்லாத ஊர்களில் ஏரிதான் செல்வம். ஊருக்கு அழகையும் குளிர்ச்சி யையும் தருவதோடு வளத்தையும் தருகின்றது. ஒரு கிராமத்தின் பொருளாதாரத்தை ஏரி நீரே வளப்படுத்து கிறது. அவ்வாறே இறைவனும் உயிர்களுக்குத் தன்னரு ளும் மேலுலகச் செல்வத்தையும் தருபவன் என்பதை உணர்த்துகிறார்.

எளிய உவமை மூலம் எல்லார்க்கும் தெளிவாய் உணர்த்துகிறார்.

5. குளம்:

நெஞ்சத்தைக் குளமாக ஓரிடத்தில் உருவகப் படுத்து கிறார்- "நெஞ்சம் என்பதோர் நீள்கயம்"[94] என்ற பாடலடி அதைக் காட்டுகிறது. பிறிதோரிடத்தில் உடம்பினைக் குளமாக உருவகப்படுத்துகிறார். இவை யாவும் தன் கழிவிரக்கு நிலையை எண்ணிப்பார்க்கையில் அமைந்தன. உலகியலைக் காட்டுவார்.

இதுவன்றியும் பக்தியை வெள்ளமாக உருவகமாக்கும் இடமொன்றுள்ளது.

மேலும் நீர்ச்சுழியை மூன்றிடங்களில் காட்டுகிறார்.

நீர் நிலைகளில் காணப்பெறும் நீர்ச்சுழி மிகவும் கொடு மையானது. நீர்ச்சுழியில் அகப்பட்டார் நீந்துதல்

அறிந்தாராயினும் தப்புதல் தப்புவித்தல் என்பதிரண்டும் அரிது. பிறவியை நீர்ச்சுழியாக ஈரிடங்களிலும் வஞ்சனையை ஓரிடத்திலும் உருவமாகக் காட்டுகிறார்.

"பிறவிச் சுழிப்பட்டு நம்மை மறக்கினும்"
"சுழித்துணையாம் பிறவி"
"வஞ்சம் எனும் வான்சுழப்பட்டு"

என்பன[95] அவை. பிறவி என்பது மீண்டும் துன்பம் தருவது. பிறவித் துன்பத்திலிருந்து மீளுதல் அரிது என்பதை உணர்த்த அவை உருவகமாக அமைக்கப் பெற்றன.

இவ்வுலக வாழ்வு நீர்க்குமிழ் போன்றது; நிலையான தன்று; தோன்றி மறைவது. இதைக் "கொப்புளே போலத் தோன்றி கொப்புளே போல மறையும்" எனும் தொடர் உணர்த்துகிறது. நீர்க்குமிழியும் இவரைக் கவர்ந்தது. அக்குறிப்பும் உலகியலை உணர்த்துவதாகவே வந்துள்ளது.

நீர் நிலைகள் பற்றிய குறிப்புகளில் மிகுதியானவை உலகியலை உணர்த்துவன. பிற இறைவன் பற்றியன. மிகையான குறிப்புகள் உருவகத்தின் பாற்படும். பெரும் பான்மையும் தன்னிலை பற்றிக் குறிப்பிடுகையில் அவை வந்தமைகின்றன. கடந்த வாழ்வுக்கு இரங்கும் தன்மையும் பக்திமையும் தொண்டுளமும் உருவகங்களையும் உவமைகளையும் படைத்தன எனலாம். இறைவனுக்கு ஏரியை ஒப்பிடும் உவமை இவர் குறிக்கும் புதுமையான செய்தி ஆகும்.

3. உயிரியற்கை

1. 3. 3. இயங்கா உயிர்கள்

மரம் : வேய், பனை, புன்னை ஆகிய மூன்று மரங்கள் உவமையாக வந்துள்ளன.

வேய் : உமையம்மையின் தோள்களுக்கு ஆறிடங்களி லும் வானர மங்கையர் தோள்களுக்கு ஓரிடத்தும் வேய் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

"காம்பேய் தோளி"

"வேயத்தோள் வடிகொள் வானர மங்கையர்"

என்பன[96] அவற்றுள் சில.

இவை வேயின் வடிவம் ஒளி பொருந்திய நிறம் இவ்வுவமை அமையக் காரணமாயின.

பனை : யானைத் துதிக்கைக்குப் பனைமரம் உவமை யாக எட்டு இடங்களில் வந்துள்ளது, "வெம்பனைக் கருங் கையானை"[97] என்பது அவற்றுள் ஒன்று. பனையின் திரண்டு உருண்ட வடிவமும் கரிய நிறமும் உவமையாக அமைந்தது.

இவை போன்றன திருஞான சம்பந்தராலும் கூறப் பெற்றுள்ளன. இவையாவும் மரபு வழிப்பட்டனவே ஆகும். சங்க இலக்கியங்களிலும் இத்தகைய இயற்கை உவமை பல்வேறிடங்களில் பயின்று வந்துள்ளது.

புன்னை

புன்னை மரம் உவமையாக வந்துள்ள குறிப்பு புதுமை யாக அமைந்துள்ளது. மரத்தின் பயனும் உணராத் தன்மையும் உவமைகளாக மரபு வழியாக வந்துள்ளன. ஆயின் மரம் படுதுயரம் யாராலும் உவமையாகக் காட்டப் பெறவில்லை.

"மன்றத்துப் புன்னை போல மரம் படுதுயரமெய்தி"[97] என்பதது. ஊர்ப் பொதுவில் வளர்ந்த மரம் இன்னார் இனியார் என்றில்லாமல் எல்லார்க்கும் பொதுவாக உள்ளது. ஆகையால் மக்களால் இலைகளும் கிளைகளும் ஒடிக்கப் பெறுதல் இயல்பு. நிழலுக்காய் வளர்ந்த மரம்

அப்பயனின்றி அழிவதும் உண்டு. உரிமையென்று ஒருவனைப் பெறாததால் அம்மரம் துன்புறுகிறது. இக் காட்சி அவர்படும் துயரத்திற்கு உவமையானது. இது பிறர் நோக்காத புதிய நோக்கில் அமைந்துள்ளது இதன் சிறப்பாகும். தன்னிலையை நினைந்து பாடியது இது.

2. அரும்பு

பொதுச் சொல்லால் மட்டுமே குறிக்கப்பெற்றுள்ளது. உவமையம்மையின் முலைக்கு ஓரிடத்திலும் மகளிரின் முலைக்கு ஓரிடத்தும் அரும்பு உவமையாக வந்துள்ளது. பிறைத்திங்கட்கும் ஒப்புமையாக ஓரிடத்தில் வந்துள்ளது, மேலும் சிவபெருமானுக்கு ஒப்பாக அரும்பு மூன்றிடங் களில் குறிக்கப் பெற்றுள்ளன.

"அருப்போட்டு முலைமடவாள்"

"முளையை மொட்டை"

"அரும்பொட் பாளை"

என்பன[98] அவற்றுள் சில.

இறைவனை அரும்புக்கு ஒப்பிடுவது இவர் மட்டும் காட்டும் உவமையாகும். பின்னால் தோன்றும் விளைவுக ளாகிய மலர், காய், கனி, விதை ஆகியவற்றின் வளர்ச்சிக்கு முதலாக இது விளங்குவதால் அனைத்துக்கும் மூலமாக விளங்குவதால் அதை இறைவனுக்கு உவமையாக்கினார். அரும்பு தோன்றாத செடியோ, கொடியோ மரமோ கனிப் பயன் தருவன அல்ல என்பதுணர்ந்து கூறினர் எனலாம்.

8. கொம்பு

உமைக்கும், உமையின் இடைக்கும் உவமையாக மூன்றிடங்களிலும் மகளிர்க்கும் மகளிரின் இடைக்கும் உவமையாக மூன்றிடங்களிலும் கொம்பு உவமையாக வந்

துள்ளது. இவை போன்று திருஞானசம்பந்தர் பாடல்களி லுள்ள இவை மரபு வழிபட்டன ஆகும்.

4. தளிர்

உமையின் திருமேனி நிறத்திற்கு ஈரிடங்களிலும் தலைவியின் மேனி நிறத்திற்கு ஈரிடங்களிலும் தளிர் உவமையாக வந்துள்ளது. இவையும் மரபு வழிபட்டனவே

' தளிர்நி றத்தையல்''

''தளிர் வண்ணம்''

என்பன[99] அவற்றுள் சில தளிரின் மென்மையும் பசுமை கலந்த பொன் நிறமும் உவமையாயின.

5. இலை

திருஞான சம்பந்தரைப் போலவே இவரும் வேலுக்கும் சூலத்திற்கும் ஒப்புமையாகப் பத்திடங்களில் இலையைக் காட்டுகிறார் ''இலையார் படை'' என்பது அவற்றில் ஒன்று. இலையின் வடிவம் இலை நுனியின் கூர்மையும் இங்கு ஒப்புமையாயின. இவையும் மரபு வழிப்பட்டனவே.

6. மலர்

பொதுவாக மலர் என்பதொடு, தாமரை, குவளை, முல்லை, அல்லி, வேங்கை, காந்தள், கொன்றை, முதலான மலர்களையும் குறிப்பிடுகிறார்.

பொதுவாக,

இறைவன் திருவடிகட்கு உவமையாக இருபத்தேழு இடங்களிலும் திருமாலின் கண்ணுக்கு ஓரிடத்திலும் உமையம்மையின் கண்ணுக்கு மூன்றிடங்களிலும் மகளிரின் கண்களுக்கு ஓரிடத்திலும் மலர் உவமையாக வந்துள்ளது. இறைவன் திருவடிக்கு மலரை ஒப்பிடும் குறிப்புகள் மிகுதி யாக உள்ளன.

"மலரடி ஊன்றலும்"
"மலர்ப் பாதம்"

என்பன[100] அவற்றுள் சில.

மலரின் அழகும், மென்மையும் திருவடிக்கு ஒப்புமையாகக் காட்ட இவரை ஈர்த்திருத்தல் வேண்டும். இத்தகைய திருஞானசம்பந்தர் பாடல்களிலும் உள. இவை மரபு வழிப்பட்டனவே.

மலரின் மணமும் இவரால் உவமையாகக் கட்டப்பெறுகின்றன. "பூவுக்கோ நாற்றமாகி" "மூவுற்ற நாற்றமாய்" "பூவினில் நாற்றமாய்" என்பன. அவை இறைவன் உயிர்களில் கலந்துள தன்மையை அவ்வுவமைகள் உணர்த்துகின்றன, மலர், மொட்டு நிலையிலிருந்து மலரும் பக்குவம் வரும் போதுதான் நாற்றம் தோன்றி வெளிப்படுகிறது. மனித உயிரும் பக்குவப்படும் போதுதான் உயிருள் மறைந்து விளங்கும் இறை வெளிப்பட்டுத் தோன்றும் என்பதை இதன்மூலம் 'உணர்த்துகிறார்.

தாமரை ;

இறைவன் திருவடிகட்கும் பதின் மூன்றிடங்களிலும் சிவன் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் உமையம்மையின் திருக்கரங்களுக்கு ஓரிடத்திலும் தாமரை உவமையாக வந்துள்ளது. "கமலபாதா" "செய்யதாமரைகளன்ன சேவடி" என்பன[101] அவற்றுள் சில. தாமரையைத் திருவடிகட்கு ஒப்பிடுதல் பழைய மரபு. தாமரையின் செழுமை நிறமும் அழகும் இங்கு ஒப்புமையாயின.

உமையம்மை, சிவன், தலைவி [பெண்கள்] ஆகியோரின் கண்களுக்குக் குவளை பத்திடங்களில் உவமையாக வந்துள்ளது. பெண்களின் கண்களுக்குக் குவளை மலரை உவமையாக்கல் பண்டையோர் மரபு. இங்குச்சிவன். கண்ணுக்கு உவமையாகக் குவளையைக் காட்டினமை அவர்

உமையொருபாகனாக விளங்குதல் பற்றியே ஆகும். உமையம்மைக்கே குவளை உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. இவை நிறம் பற்றி வந்தன ஆகும்.

உமையம்மையின் முறுவலுக்கு முல்லை நிறம் உவமையாக நான்கிடங்களில் வந்துள்ளது. அல்லிமலர் ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது. காந்தள் உமையம்மையின் கைவிரலுக்கு உவமையாக வந்துள்ளது,

மலர்கள் மற்றவற்றிற்கு உவமையாகக் காட்டியதன்றியும் மலர்களின் அழகுக்கும் நிறத்திற்கும் ஒப்புமையாகப் பிறவற்றைக் காட்டியதும் உண்டு. இவ்வகையில் காந்தள் மலரின் அழகும், கொன்றை மலரின் நிறமும் இவரால் சிறப்பிக்கப் பெறுகின்றன. கொன்றை மலர் பொன்போல் மலர்ந்துள்ளதாக எட்டிடங்களில் குறிப்பிடுகிறார். காந்தள் மலர் மகளிர் கைபோல் மலர்ந்துள்ளதாக ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். இத்தகையனவும் மரபுவழி வந்தனவே. இவைபோன்றன திருஞானசம்பந்தர் பாடல்களிலும் வந்துள்ளன. "பொன்னலத்த நறுங்கொன்றை" "புனக்காந்தள் கைகொட்ட" என்பன[102] அவற்றுள் சில.

7. காய் :

திருஞானசம்பந்தரைப்போல இவரும் பிளந்தமாவின் வடுமட்டும் உவமையாக உமையம்மையின் கண்ணுக்கு ஈரிடங்களிலும் மகளிர் கண்களுக்கு ஈரிடங்களிலும் குறிப்பிடுகிறார். இவை மரபு வழிப்பட்டன. இவை வடிவம் பற்றி வந்தன.

8. கனி :

தொண்டை, கொவ்வைக்கனி உமையம்மையின் வாய் இதழுக்கு உவமையாக இவர் ஆறு இடங்களில் குறிப்பிடுகிறார். பழத்தினில் சுவைபோல இறைவன் உயிர்களில் கலந்துள்ளான் என்பதை நான்கிடங்களில் குறிப்பிடுகிறார். இங்குப் பழம் என்ற பொதுச்சொல்லே காணப்பெறுகிறது.

பழத்தைவிட்டுச் சுவையைப் பிரிக்கமுடியாது. பழத்திலே சுவை கலந்து உள்ளது. அதுபோலவே இறைவன் உயிர்களில் கலந்துள்ளான் என்பதை உணர்த்த இவ்வுவமையைப் பயன்படுத்துகிறார். பக்குவமுற்ற உயிரே இறையருளில் அழுந்தி பேரின்பத்தைத் துய்க்கமுடியும் என்பதைக் குறிக்க இது வந்தது எனலாம்.

9. பஞ்சு

பருத்திச்செடியில் விளைவது இது. இது மிகவும் மென்மைத் தன்மை கொண்டது. அம்மென்மைத்தன்மை உமையம்மையின் கைவிரல் மென்மைக்கு நான்கிடங்களிலும் மகளிர் விரல்களின் மென்மைக்கு ஈரிடங்களிலும் உவமையாக வந்துள்ளது. ''பஞ்சடைந்த மெல்விரலாள்'' என்பது அவற்றுள் ஒன்று. இதுவும் மரபு வழிப்பட்டதே.

10. விதை

தினையும் எள்ளும் மட்டும் உவமையாக வந்துள்ளன. இவையிரண்டும் அளவில் மிகச்சிறியவை. மிகப்பெரிய மலை மக்களின் மனதைக் கவர்வதுபோல, மிகச்சிறிய தன்மை கொண்ட பொருளும் மக்களைக் கவர்வது இயல்பானதே. தினை மூன்றிடங்களிலும் எள் ஓரிடத்திலும் அளவிற் சிறிய தன்மைக்கு உவமையாக வந்துள்ளது. ''தினைத்தனையோர் பொறையிலா உயிர். எள்தனைப்பொ போதும்'' என்பன [103] அவற்றுள் சில.

இவையன்றியும் வித்து எனும் சொல் மூன்றிடங்களில் வந்துள்ளது. இறைவனே வித்தாக விளங்கும் தன்மையை அது காட்டுகிறது. வித்தினை என்பது அவற்றுள் ஒன்று. எல்லாவற்றையும் படைக்கும் மூலகாரணமாக இறைவன் விளங்குதலை அது காட்டுகின்றது.

11. செடி

இவர் குறிப்புகளுள் கரும்பை மட்டும் செடியாகக் குறிப்பிடலாம். சிவன் இனிமையாக விளங்குகிறான் என்ப

தற்கும் உமையம்மையின் சொல் இனிமையாக உள்ளது என்பதற்கும் உவமையாகவும் உருவகமாகவும் கரும்பு வந்துள்ளது. "தீங்கரும்பின் இன்சுவையை" "கரும்பின் தெளிவே" என்பன[104] அவற்றுள் சில இறைவனைக் கரும்பாக உருவகப்படுத்துகிறார். உமையம்மையின் சொல்லுக்கு உவமையாகக் கரும்பைக் கூறுகிறார்.

1. கொடி

பொதுவாகக் கொடி என்பது மட்டுமே வந்துள்ளது. உமையம்மையின் இடைக்கு ஈரிடங்களிலும் தலைவிக்கு ஓரிடத்திலும் கொடி உவமை கூறப்பெறுகிறது. இவை மரபு வழிப்பட்டனவே.

இவருடைய இயற்கைப் பொருள்கள் உவமையாக வந்தனவற்றுள் மரபு வழிப்பட்டனவாக பெரும்பாலும் குறிப்புகள் உள்ளன.

திருஞானசம்பந்தரின் குறிப்புகளை ஒத்தே பெரும் பான்மையான இவரின் குறிப்புகள் காணப்பெறுகின்றன. இருவரும் சமகாலத்தவர் என்பதோடு மரபு வழியைப் பின் பற்றியவர் என்பதையும் அதற்குக் காரணமாகக் கூறலாம். புன்னையின் துயரம் உவமையாக வந்த இடம் இவர் குறிப்புகளில் புதுமையானது என்று கூறலாம்.

1.2.3.2. இயங்குயிர்கள்

1.2.3.2.1. விலங்குகள்

விலங்குகளில் நாய், மான், யானை, ஆமை, நரி, சிங்கம் ஏறு, முதலை, எறும்பு, பாம்பு, முதலானவை உவமைகளாக வந்துள்ளன.

தன்னை இவ்வாசிரியர் நாய் என்றே குறிப்பிடுகிறார். நாயினுங் கீழ்ப்பட்ட குணங்களை உடையவனாகக் குறிப்

பிடுகிறார். நாயொடு தன்னை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளும் இடங்கள் மொத்தம் இருபத்தெட்டாகும்.

"நாயினும் கடைப்பட்டேனை"[105]

என்பது அவற்றுள் ஒன்று. மனித உயிரில் பிறப்பு தொடங்கியே இருக்கின்ற மூலமலமாகிய ஆணவத்தை அழிப்பதற்காக—தன்முனைப்பை அழிப்பதற்காகத் தன்னை இழிவாக்கிக் கூறுகிறார்.

உமையம்மைக்கு ஒரிடத்திலும் உமையம்மையின் கண்ணுக்கு ஈரிடங்களிலும் மானும், மானின் கண்ணும் உவமையாக வந்துள்ளன. இது மரபு வழிவந்தது.

இவர் சிவபெருமானைக் களிறு என்கிறார்.

"மானக் கயிலை மழகளிற்றை"[106]

என்பதுபோல வந்துள்ளது. இத்தகைய நான்குள் யானையின் மருப்பை உமையம்மையின் முலைக்கு உவமையாக ஒரிடத்தில் குறிப்பிடுகிறார்.

"தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற ஆமை போல்"

"கூவ லாமை குரைட லாமையது கூவலொடொக்கு மோகடல் என்றல் போல" என ஆமை இரு[107] இடங்களில் உவமையாக வந்துள்ளது. இரண்டாவது கற்பனையாக அமைந்தது. இவையிரண்டும் அறியாமையை உணர்த்தப் பயன்பெற்றன.

மால்கொள் சிந்தைக்கு உவமையாக நரிவரால் கவ்வச் சென்று நற்றிசையிழந்த தொத்தது என்று நரி ஒரிடத்திலும் இறைவனுக்குச் சிங்கத்தை ஒரிடத்திலும் ஏற்றை ஒரிடத்திலும் உவமையாகக் கூறுகிறார், சிங்கமும் ஏறும் வலிமைக்கும் வீரத்திற்கும் உவமைகளாயின.

தன்னுடைய உள்ளத்தினை காட்டுதற்கு "இருதலைக் கொள்ளியின் எறும்பை" உவமையாகக் கூறுகிறார். இன்

னொரு இடத்தில் புலன்களுக்கு உவமையாக முதலையை ஓரிடத்திலும் குறிப்பிடுகின்றார். முதலையின் பற்றியது விடாத தன்மை உவமையாக ஆயிற்று. இவையாவும் மரபு வழிப்பட்டனவே ஆகும். விலங்குகளின் இயக்கங்களே பெரிதும் கவர்ந்தன எனலாம்.

### 1.2.3.1. பறவைகள்

பறவைகளில் அன்னம், மயில், கிளி, குயில், கூகை, மின்மினி, காக்கை, குருகு முதலான பறவைகள் உவமைகளாயின.

1. அன்னம் : அன்னத்தின் நடை உமையம்மையின் நடைக்கு உவமையாக ஈரிடங்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

2. மயில் : மயிலின் சாயல் உமையம்மையின் சாயலுக்கு நான்கிடங்களிலும் மகளிரின் சாயலுக்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது. காரென மயில் வெள்குறும் மயக்க அணிகளைச் சார்ந்த குறிப்புகள் இரண்டுள. இவற்றின் மூலம் மேகத்தைக் கண்டு மயில் ஆடும் செய்தியை உணரவியலுகின்றது.

3. கிளி, குயில் : கிளியின் குரலும் குயிலின் குரலும் உமையம்மையின் குரலுக்கு உவமையாக ஒவ்வொரு இடங்களில் வந்துளது. இனிய குரல் இங்கே அவரை ஈர்த்திருக்க வேண்டும்.

4. கூகை : தன்நிலையை—வீணே திரியுந் தன்நிலையை கூகையோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். வீணே திரியும் அதன் செயல் காட்டப் பெறுகிறது "மாயத்தை அறியமாட்டேன் மையல்கொள் மனத்தனாகிப் பேயொத்துக் கூகை யானேன்" என்கிறார்.[108]

5. குருகு : தாழை மடலைக் குருகென மயங்கும் குருகு மயக்க அணியில் அடங்கும். இத்தகைய காட்சி சங்க இலக்கியத்திலும் காணப்பெறுகிறது.

6. மின்மினிப்பூச்சு : "விளக்கிருக்க மின்மின காய்ந்தவாறே"[109] எனும் பழமொழியில் மின்மினிப் யின் ஒளி மிகச்சிறிய ஒளியெனக் காட்டப் பெறுகிறது

7. காக்கை : மொய்த்தல் — குழுவாகச் சே உண்ணல் என்னும் செயலை வல்வினைகள் மொய்த்தலுக்கு உவமையாகக் காட்டுகிறார். இவ் குறிப்பு உவமையாக வந்துள்ளது. இதுவன்றியும் பழ யாகவும் ஓரிடத்தில் வந்துள்ளது.

அன்னத்தின் நடை, மயிலின் சாயல், கிளி, ஆகியவற்றின் குரல், கூகை திரியும் செயல், மின் பூச்சியின் ஒளி, காக்கையின் மொய்க்கும் செயல் முத உவமைகளாக வந்துள்ளன.

8. ஊர்வன : அரவும் புழுவும் உவமை வந்துள்ளன. அரவு மகளிரின் அல்குலுக்கு உவமை நான்கிடங்களில் வந்துள்ளது. பாம்பின் படம் உவமை வந்துள்ளது.

புழு : புழுவினுங்கடையேன் எனும் ஒரு குறி மட்டும் புழு உவமையாக வந்துள்ளது—இவர் நிலையைப் புழுவின் நிலையொடு ஒப்பிட்டுக் காட்டு "புழுவினங் கடையேன் புனிதன் தமர்—குழுவு விடத்தேன்" என்பதது.[110]

1.2.3.2.3. நீர் வாழ்வன

கெண்டை, சேல் எனும் இருவகை மட்டும் உவ மையின் கண்ணுக்கும் மகளிர் கண்ணுக்கும் நான் களில் உவமையாக வந்துள்ளன. இவையாவும் தே பற்றி வந்தன.

1.2. வானியற்கைப் பொருள்கள் :

வான், கதிரவன், மதி, மேகம், மின்னல், இடி, என்பன உவமையாக வந்துள்ளன.

1. வான் : அந்தி காலத்து வானின் நிறம் இறைவன் திருமேனி நிறத்திற்கு உவமையாக எட்டிடங்களில் வந்துள்ளது. செம்மை நிறம் இங்கு செவ்வான் வண்ணர்" என்பன[111] அவற்றுள் சில. மாலைக்காலச் செவ்வான மிக வழகிய தோற்றமுடையது. அது அவரின் அழகியல் உணர்வைக் காட்டுகிறது.

2. கதிரவன் : கதிர், ஞாயிறு எனும் பெயர்களால் இவராலும் குறிப்பிடப்பெறுகிறது. சிவபெருமான் திருவடிக்கு மூன்றிடங்களிலும் சிவன் திருமேனி நிறத்திற்கும் நீள்முடிக்கும் ஓரிடத்திலும் கதிரவன் ஒளிநிறம் உவமையாக வந்துள்ளது. மேலும் சிவனுக்கு ஒப்புமையாகக் கதிரவன் ஈரிடங்களில் உவமையாக வந்துள்ளது.

கதிரவன் புறவிருள் நீக்குதல்போல இறைவன் அக இருளை நீக்குகிறான் என்பதே அதன் விளக்கமாகும். இருளை நீக்குதலாகிய செயல் மட்டுமின்றி புல்நுனிப் பனியைப் போக்கும் செயலும் உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது, கதிரவனைக் கண்டதும் புற்பனி விலகுதல் போல இறைவனைக் கண்டதும் வினைகள் அழிகின்றன என்பது அதனால் உணர்த்தப் பெறுகிறது.

கதிரின் ஒளியும் கதிரின் இருள் நீக்கும் செயலும் பனி நீக்கும் செயலும் உவமைகளாக வந்துள்ளன. இவை யாவும் மரபு வழிப்பட்டனவே.

3. மதி : மதியின் ஒளியும் மதியின் வடிவும் மதியின் குளிர்ச்சியும் இங்கு உவமைகளாக வந்துள்ளன. உமையம்மை மகளிர் ஆகியோரின் நுதலுக்கு ஒப்புமையாக ஆறு இடங்களில் மதி வந்துள்ளது. இங்கு பிறைமதியை உவமையாகக் கொள்ளவேண்டும். பன்றியின் எயிற்றுக்கு ஓரிடத்தில் பிறைமதி வடிவம் நோக்கி உவமையாக வந்துள்ளது. இவை யாவும் வடிவவுவமையாகும். திரு

நீற்றின் நிறத்திற்கு ஓரிடத்திலும் வெண்புரி நூலின் நிறத்திற்கு ஓரிடத்திலும் மதி ஒளியின் நிறம் ஒப்புமையாக வந்துள்ளது. இவை நிறம் பற்றியன சிவபெருமானின் கண்ணுக்கு ஓரிடத்திலும், திருவடி நிழலுக்கு ஓரிடத்திலும் மதியின் குளிர்ச்சி உவமையாக வந்துள்ளது. இதுவன்றியும் மதியை இறைவனுக்கு ஒப்பிடும் இடங்கள் மூன்று. இவை யாவும் உவமைகளாகும்.

"பிறைநுதலி"

"பிறையெயிற்று வெள்ளைப் பன்றி"

"இளம்பிறை போல்வெள்ளைச் சுண்ணத் தானை"

"மாலைமதியமும்... திருவடி நிழலே"

என்பன[112] அவற்றுள் சில.

4. மேகம் : மேகத்தின் நிறமும், மேகத்தின் பயனும் இங்கு உவமைகளாக வந்துள்ளன. சிவன் மிடற்றின் நிறத்திற்கு மேகத்தின் கரிய நிறம் திருமால் நிறத்திற்கு ஓரிடத்திலும்யானையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் உவமையாகப் பதினொரு இடங்கள் காணப்பெறுகின்றன. இறைவன் அருளும் தன்மை பயன் பாராது அருளும் தன்மைக்கு உவமையாக மழைபொழி முகில் ஆறு இடங் உவமையாக வந்துள்ளது.

"கருகு கார்முகில் போல்வதோர் கண்டனை"

"காராகி நின்ற முகிலே"

என்பன[113] அவற்றுள் சில. மேகத்தின் கரிய நிறமும் மேகம் தரும் பயனும் இவரைக் கவர்ந்திருக்க வேண்டும். இவையாவும் மரபு வழிப்பட்டனவே ஆகும்.

5. மின்னல் : மின்னலின் நிறமும் மின்னலின் தோன்றி மறையும் கீற்றுப் போன்ற வடிவமும் உவமைகளாக வந்துள்ளன.

சிவபெருமானின் திருமேனி நிறத்திற்குப் பதினான்கு இடங்களிலும் சிவபெருமான் சடையின் நிறத்திற்கு ஒன்பதிடங்களிலும் சிவபெருமான் முடியின் நிறத்திற்கு ஓரிடத்திலும் கயிலையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் சூலத்தின் நிறத்திற்கு ஓரிடத்திலும் திங்களின் ஒளிக்கு ஓரிடத்திலும் இராவணன் ஞாயிற்றின் ஒளிக்கு ஓரிடத்திலும் மின்னலின் ஒளி, நிறம் காரணமாய் உவமையாக வந்துள்ளது. "மின்திகழும் சோதியானை" "மின்னானை"

"மின்னியலும் வார்சடை"
"மின்னிசையும் வெள்ளெயிற்றோன்"

என்பன[114] அவற்றுள் சில.

ஒளியொடுகூடிய வெண்மை நிறம் இங்கு ஒப்புமையாயின.

உமையம்மையின் இடைக்குப் பன்னிரு இடங்களில் மின்னலின் தோன்றி மறையும் கீற்றுப் போன்ற வடிவம் உவமையானது. இவை மட்டுமே வடிவு உவமைகளாகும். மின்னல் நிறமும் வடிவமும் உவமைகளாக வந்த இவை யாவும் மரபு வழிப்பட்டனவே ஆகும்.

6. இடி : இடியின் பேரோசை இங்கு உவமையாக ஆறிடங்களில் வந்துள்ளது. பூதப்படையின் குரல். வெள்வெருதின் குரல், ஏனத்தின் குரல் ஆகியவற்றிற்கு முறையே ஒவ்வோரிடத்தில் இடியின் ஓசை உவமையாக உள்ளது. இதுவன்றியும் உருவகமாக இறைவனைக் காட்டுந்திறம் இங்கு இடியின் ஓசை குறிக்கப்பெறவில்லை. இடியொடு கூடியமழை அல்லது இடிக்குப்பின் வரும் மழையின் பயன்பற்றி இறைவனுக்கு ஒப்புமைப்படுத்தினார் எனலாம்.

7. மழை : மழையின்பயன் உவமையாக வந்துள்ளது. மழை பொழியும் அழகோ நீர்த்தாரையின் அழகோ

குறிக்கப்பெறவில்லை. இறைவன் மழையாக விளங்குகின்றான் எனக் காட்டுகிறான். இத்தகைய மூன்றும் இவை மழையினரல் மக்கள் வளம் பெறுதல் போல இறைவன் அருளால் வளம் பெறுகின்றனர் என்பதை உணர்த்தற்கு வந்தன.

"பயிர் வளர்க்கும் துளியவன்"115 என்பது அவற்றுள் ஒன்று. வளர்கின்ற பயிருக்கு வான்மழையானவன் என்பதைக் குறிப்பதே அது.

1. 2. 5.

தீ இயற்கை

இங்குத் தழல்மட்டும் நோக்கப் பெறுகின்றது.

தீயின் நிறம் இறைவன் திருமேனி நிறத்திற்கு முப்பத்தொன்பது இடங்களிலும் சடையின் நிறத்திற்கு மூன்றிடங்களிலும் உவமையாக வந்துள்ளது.

"கனல்போல் மேனி" 'செந்தழல்போ லுருவினானை' என்பன116 அவற்றுள் சில.

இவையாவும் தீயின் நிறமாகிய செந்நிறத்தை உவமையாகக் கொண்டு வந்தனவாகும். இவை திருஞான சம்பந்தர் குறிப்புகளோடு ஒத்து விளங்குகின்றன. திருவடியின் நிறத்திற்கும் வேலின் நிறத்திற்கும் ஒவ்வோர் இடம் திருஞான சம்பந்தர் போலவே தாமரையின் நிறத்தைத் தீயின் நிறத்தோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். இத்தகு குறிப்பு ஒன்று மட்டுமே உள்ளது.

தீ தன்னைச் சேரும் பொருள்களில் அசுத்தத்தை நீக்குதலும் சுத்தம் செய்தலும் ஆகிய செயல்கள் இவரால் ஓரிடத்தில் உவமையாக வந்துள்ளது.

"வெவ்வழல் புகலினவை ஒன்று மில்லையாம்......
பாவத்தை நண்ணிநின்றறுப்பது நமச்சிவாயவே"[117]
என்பதது.

அழலின்கண் சேரும் எவையும் அழியும் அதுபோல, நமச்சிவாய எனும்போது பாவங்கள் யாவும் அழியும் என்பதை உணர்ந்துகிறார். திருஞானசம்பந்தர் குறியீடாக உணர்த்தியதை இவர் தெளிவாக உணர்த்தியுள்ளார்.

1. 2. 6. காலவியற்கை

ஒருநாளின் ஆறு பிரிவுகளில் இருளும் மாலையுமாகிய இருபிரிவுகளும் உவமையாக வந்துள்ளன.

1. இருள் ; இருளின் நிறமும் இருளினது பிறபொருள்களை மறைக்கும் தன்மையும் இங்கு உவமையாகவும் உருவகமாகவும் உள்ளது.

"இரவு கொப் பளித்தகண்டர்"
"இருட்டிய மேனி...வெங்கூற்றம்"

என்பன[118] அவற்றுள் சில.

இருளானது பிற பொருள்களை மறைக்கின்றது. அத்தகு தன்மை பற்றி வஞ்சம், பாவம், வினை, பொய் முதலானவற்றிற்கு உருவகமாக வந்துள்ளது.

சிவபெருமான் கண்டத்தின் நிறத்திற்குப் பன்னிரு இடங்களிலும் கூற்றின் நிறத்திற்கு ஓரிடத்திலும் இருளின் கரிய நிறம் உவமையாக வந்துள்ளது.

அறியாமை இருளை நீக்கும் ஞானச் சூரியனாக இறைவன் வருகிறான் என்பதை உணர்த்தவே உருவகமாக்குகிறார் அவர்.

"இருளவா அறுக்கும் எந்தை"
"இருள்கெடச்சென்று"

என்பன[119] அவற்றுள் சில.

இத்தகையன அவர் பாடல்களுள் ஆறிடங்களில் காணப்பெறுகின்றன. இருளின் அழகு காணப்பெறும் நிலை ஒன்று. இருளின் இயல்பு காணப்பெறுதல் இன்னொரு நிலை.

2. அந்தி

மாலைக் காலத்தின் பொன்மை கலந்த மஞ்சள் நிறம் இறைவன் திருமேனிக்கு உவமையாக எட்டிடங்களில் வந்துள்ளது.

"அந்திவாய் வண்ணங் கொண்டார்"

"அந்தி வாயொளி யான்றான்"

என்பன[120] அவற்றுள் சில!

இது இவரது அழகியலுணர்வைக் காட்டுகிறது.

1. 2. 7. மணிகள்

பவளம், நீலமாமணி, முத்து முதலிய மணிகளின் நிறம் உவமைகளாக வந்துள்ளன.

1. பவளம் :

பவளத்தின் செந்நிறம் உவமையாக சிவபெருமானின் தோள் நிறத்திற்கு ஓரிடத்திலும் சடையின் நிறத்திற்கு ஈரிடங்களிலும் மலரடியின் நிறத்திற்கு ஈரிடங்களிலும் திருமேனியின் நிறத்திற்கு நாற்பத்தொன்பது "இடங் களிலும் சிவன் வாயின் நிறத்திற்கு ஈரிடங்களிலும் உவமை யாக வந்துள்ளது,

"செம்பவ ளம்புரை மேனி"

"பவள அடி"

என்பன[121] அவற்றுள் சில,

2. நீலமணி

மணிகளுள் முத்து சிவன் மிடற்றின் நிறத்திற்கு எழுப திடங்களிலும் நீறணிந்த திருமேனி நிறத்திற்கு பன்னிரண்டு இடங்களிலும் வந்துள்ளது. மதியின் நிறத்திற்கு பன்னிரண்டு இடங்களிலும் வந்துள்ளது.

இதற்கு மறுதலையாக முத்தின் நிறத்திற்கு மதியின் நிறத்தைக் குறிப்பிடுகிறார் திருஞானசம்பந்தர். திருஞான சம்பந்தர் உமையம்மையின் முறுவலுக்கு முத்தின் ஒளியை மூன்றிடங்களில் குறிப்பிடுகின்றார். சங்கின் வெண்மை நிறம் நீற்றணிந்த திருமேனியின் நிறத்திற்கு ஈரிடங்களி லும் ஏற்றின் வெண்மை நிறத்திற்கு ஓரிடத்திலும் உவமை யாக வந்துள்ளது.

மணிகளின் ஒளி மக்களைக் கவர்தல் இயற்கை இவரையும் மணிகளின் ஒளி நிறம் கவர்ந்தது என்பர்.

1. 2. 8. முடிவு

இவர் உவமைகளையும் உருவகங்களையும் சம அளவில் பயன்படுத்துகிறார். இவர் குறப்பிடுவனவற்றுள் பெரும் பான்மை மரபு வழிப்பட்டனவே ஆகும். இவர் உணகியல் பற்றித் திருஞான சம்பந்தரைக் காட்டிலும் மிகுதியாகக் காட்டுகின்றனர்.

இயற்கைப் பொருள்கள் வந்த அணிகளை,

1. இறைவன், இறைவியர், மகளிர் முதலியோர் உறுப்புகளுக்கும் வருதல்.
2. இயற்கைப் பொருளுக்கு இயற்கைப் பொருள் உவமையாய் வருதல்
3. உணகியல் காட்ட இயற்கை உவமையாக உருவக மாக வருதல்

என மூவகையில் அடக்கலாம்,

இவரின் முதிர்ந்த வயதும் உலகியல் அறிந்த அறிவும் தொண்டுள்ளமும் பக்தி மேம்பாடும் ஆகிய காரணங்களே இவர் திருஞான சம்பந்தரைக் காட்டிலும் மிகையான உருவகங்கள் பயன்படுத்தவும் உலகியலை உணர்த்துவனவும் ஆகிய அணிகள் இவர் பாடல்களில் இடம்பெற்றன. எனலாம். இயற்கைக்கு இயற்கை உவமையாக வந்த சில இவர் இயற்கை மீது கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகின்றன. இவர் திருஞானசம்பந்தரைப்போல மிகுதியாக உமையம்மைக்கு அணிகளாக இயற்கைப் பொருள்களைப் பயன்படுத்தவில்லை. சிவபெருமானுக்கே மிகுதியான அணிகளைப் பயன்படுத்துகிறார். தனக்கு அருளிய சிவபெருமானையே நினைந்த உள்ளம் அதற்குக் காரணமாகமாம்.

## 1. 3. சுந்தரரும் அணிநலமாக வந்த இயற்கைப் பொருள்களும்

### 1. 3. 1. நிலவகைமை

நிலவகைமையில் மலைமட்டுமே அணியாக வந்துள்ளது.

அதனுடைய தோற்றமும் நிலைபிற்றிரியா தன்மையும் உவமையாக வந்துள்ளது.

சிவன் தோளுக்கு ஓரிடத்திலும் அரக்கன் தோளுக்கு ஓரிடத்திலும் சிவனுக்கு ஓரிடத்திலும் அரக்கனுக்கு ஓரிடத்திலும் மலை உவமையாக வந்துள்ளது. இவை இறைவன்' அரக்கன் உறுப்புநலன் புனைவில் வந்தன.

மேலும் இயற்கைப் பொருளுக்கு இயற்கைப்பொருள் உவமையாக வந்துள்ளது. கடலலைகளின் தோற்றமும் வலிமையும் மலையை உவமையாகக் கூறுமளவிற்கு இருந்தன. இத்தகைய உவமைகள் இரண்டுள. காய்க்குலைகளுக்கு மலையை உவமையாக்குமிடம் ஒன்று. இவர் தன்னுடைய மனத்தின் இயல்புக்குக் கல்லை ஒப்புமையாக இரு

இடங்களில் கூறுகிறார். காற்று, வெப்பம் எனும் எதற்கும் கலங்காத, உருகாத தன்மைதான் உள்ளத்திற்கு ஒப்புமையானது.

"மலை பெற்ற அணிகளுள்
"குன்று லாவிய புயமுடை யான்றன்"
"அரக்கன் வரைதோள்"
"கல்லியல் மனத்தேன்"

என்பன[122] சில.

இவையாவும் மரபுவழி வந்தன. முன் இருவராலும் குறிப்பிடப் பெற்றன.

1. 3. 2. நீர் நிலைகள்

நீர் நிலைகளில் கடல் மட்டுமே உவமையாக வந்துள்ளது.

இவர் இறைவன் கருணையை ஓரிடத்திலும் பிறவியை ஈரிடங்களிலும் கடலாக உருவகப்படுத்தியுள்ளார்.

"கருணையெங் கடலை"
"பிற விக்கடல்"

என்பன[123] சில. கடலின் ஆழம், அளவிற் பெரிய தன்மை, அளவிடற்கரிய ஆழம் எனும் தன்மைகள் இங்கு ஒப்புமையாக வந்தன. கடலின் நிறம் பற்றிய உவமைகள் ஏதும் வரவில்லை.

மேலும் புனற்கரை ஓரிடத்தில் இளமைக்கு உவமையாக வந்துள்ளது. "ஓ ஓடுபு னற்கரை யாம் இளமை"[124] என்பதது. புனற்கரை நீர்ப் பெருக்கினால் சிறிது சிறிதாகக் கரைந்து அழிதல் போல இளமையும் அழிகின்றது என்பதை உணர்த்துகின்றார்.

இதுவன்றியும் இவர் நீர்சுழியையும் ஓரிடத்தில் உலகியலில் அலைகின்ற உள்ளத்திற்கு ஒப்புமையாகக் காட்டுகிறார். திருநாவுக்கரசருக்கு அடுத்த நிலையில் நீர்ச்சுழியைக் குறிப்பிடுபவர் இவரே ஆவர். அவர் பிறவி, வஞ்சனை, பொய் என்பனவற்றிற்கு நீர்ச்சுழியை உருவகமாக்குகிறார். இவரோ உலகியலில் அலையும் உள்ளத்தை நீர்ச்சுழியாக உருவகிக்கிறார். உலகியலில் உள்ளம் மிகவும் அழுந்தினால் அதனின்றும் தப்புதலரிது என்பது உணர்த்த இவ்வுவமை ஆளப்பெறுகிறது.

1. 3. 3. வானியற்கை

1. வான் : மாலைக் காலத்து வானத்தை முன்னிருவரைப் போலவே இவரும் இறைவன் திருமேனியின் நிற அழகுக்கு ஒப்புமையாக நான்கிடங்களில் குறிப்பிடுகிறார். மாலைச் செவ்வான் இவரை ஈர்த்திருக்கிறது எனலாம்.

"செக்கர்வான் அந்தி அன்னானை"[125]

என்பது அவற்றுள் ஒன்று.

2. கதிரவன் : சிவன் ஞாயிறாக விளங்குகின்றான் என்றொருவிடத்தில் உருவகப்படுத்தி உள்ளார். பிறிதொரிடத்தில் ஞாயிற்றைச் சிவனுக்கு உவமையாக்கியுள்ளார். கதிரவன் தோற்றத்தில் நிகழும் செயலாகிய புல்நுனிப்பனிவிலகும் செயலை இவரும் முன்னிருவரைப் போலவே குறிப்பிடுகிறார். அவர்கள் இறைவன் முன் வினைகள் யாவும் அழிதலுக்கு உவமையாகக் காட்டுகிறார்கள். இவர் அவ்வாறில்லாமல்

"புன்னுனைப்பனி வெங்கதிர் கண்டாற்போலும் வாழ்க்கை"[126] என்று காட்டுகிறார். வாழ்க்கை நிலையானதன்று; அழிவது என்னும் கருத்தை உணர்த்த இவ்வுவமையைப் பயன்படுத்துகிறார். உலகியலை உணர்ந்த

வர்களே அருளியனலை அறியமுடியும் என்னும் முதல்படியை உணர்த்துவதாக இக்காட்சி அமைந்து விளங்குகிறது.

3. மதி : மதியின்தன்மையும் வடிவும் உவமையாக வந்துள்ளன. பிறைமதி உமையம்மையின் நுதலுக்கு உவமையாக ஈரிடங்களில் குறிக்கப் பெற்றுள்ளது.

"பிறையணி வாணுதலாள் உவமையாள்"[127]
என்பது அவற்றுள் ஒன்று.

மதியாக இறைவன் விளங்கும் கருத்தொன்றுள்ளது.

இயற்கைப் பொருளுக்கு இயற்கைப் பொருள் உவமையாக வந்தன ஏதும் இல்லை. குளிர்ச்சி, ஒளி முதலான தன்மைகள் முன்னிருவரைப் போல இவர் கூறவில்லை.

4. மேகம் : மேகத்தின் கரிய நிறமும் மேகம் தரும் பயனும் உவமைகளாக வந்துள்ளன. இறைவன் மிடற்றின் நிறத்திற்கு உவமையாக மூன்றிடங்களில் மேகம் வந்துள்ளது.

மேகம் பயன் எதிர்பாராது மழைபெய்கிறது. மண் வளம் சேர்கிறது. பொருள் வளம் செழிக்கிறது. அவ்வாறே இறைவன் புயல்போல பயன் எதிர்பாராது அருள்கிறான். இதை உணர்த்தும் நிலையில் இரு உவமைகள் வந்துள்ளன. கழற்றறிவாரின் கொடைத் தன்மைக்கும் மேகம் உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது.

இவை மரபு வழிப்பட்டன. மேகம், மழையென்ற சொல்லால் ஓரிடத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. திருமாலின் நிறத்திற்கு உவமையாக வந்துள்ளது.

5. மின்னல் : மின்னலின் நிறமும், கீற்றுப்போன்ற வடிவும் உவமைகளாக வந்துள்ளன.

உமையம்மையின் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் சிவன் திருமேனி நிறத்திற்கும் நான்கிடங்களிலும் சடை

யின் நிறத்திற்கு நான்கிடங்களிலும் மின்னலின் நிறம் உவமையாக வந்துள்ளது. உமையம்மையின் திருமேனி இங்கு மாதொருபாகனாக விளங்கும் திருமேனியைக் குறிப்பதாகும்.

மின்னலின் கீற்றுப் போன்ற வடிவு உமையம்மையின் இடைக்கும் மகளிரின் இடைக்கும் உவமையாக நான்கிடங்களில் வந்துள்ளது.

"மின்னனை யாள்திரு மேனி"
"மின்னேர் உருவத் தொளி யானே"
"மின்னார் செஞ்சடை"

என்பன[128] அவற்றுள் சில. இவையாவும் மரபு வழிப் பட்டன. இவை முன்னிருவர் குறிப்புகளைப் போலவே உள்ளன.

6. இடி: இடியின்பேரோசை இரு இடங்களில் உவமையாக வந்துள்ளது. ஏற்றின் குரலுக்கு ஓரிடத்திலும் கூற்றத்தின் குரலுக்கு ஓரிடத்திலும் இடியின் ஓசை உவமையாக வந்துள்ளது. மகளிர் கண்களுக்கு மழையை உவமை கூறும் இடம் இரண்டுளது.

1. 3. 4. காலவியற்கை

காலவியற்கையில் இருள் ஒரே இடத்தில் குறிப்பிடப் பெறுகின்றது. அது "இருள் மேவும் அந்தகன்"[129] என்ற குறிப்பாகும். இது நிறவுவமை. இத்தகையது நாவுக்கரசர் குறிப்பிலும் உளது.

காற்று: (வளி)

காற்று, பரியின் வேகத்திற்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது.

1. 3. 5. உயிரியற்கை

இயங்கா உயிர்கள்

1. மரம் : வேய் மட்டும் உமையம்மையின் தோளுக்கு உவமையாக நான்கிடங்களில் வந்துள்ளது. பிற இல்லை. "வேய்புரையும் தோளாள். உமை" என்பது அவற்றுள் ஒன்று. கலை வடிவ உவமையின்பாற்படும். இவை மரபு வழிவந்தவை. முன்னவர் இருவரும் கூறியனவே.

2. வேர் : பிறவியை வேராக ஓரிடத்தில் உருவக மாகக் கூறியுள்ளார். அதுவன்றியும் சிவபெருமான் சடைக்கு உவமையாக ஆலம் விழுதுகளை ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார் "கோடரம்பயில் சடை" என்பதது.

இவ்வுவமை இவரால் மட்டுமே கூறப்பெற்ற புதுமைய தாகும். இது வடிவ உவமை.

கொம்பு ஓரிடத்தில் உமையம்மையின் இடைக்கும், தளிர் உமையம்மையின் திருவடிகட்கும் உவமையாக வந்துள்ளன. இவையிரண்டும் குறிப்பிட்ட மரத்தின் உறுப்புகள் என்றில்லாமல் பொதுவாகக் கூறப் பெற்றுள்ளன.

வேல், சூலம் இவற்றின் வடிவுக்கும் கூர்மைக்கும் உவமையாக இலை ஆறிடங்களில் வந்துள்ளது. இவை யாவும் மரபின் வழிவந்தனவே.

3. மலர்

மலர் என்று பொதுவாக ஈரிடங்களில் இறைவன் திரு வடிக்கு உவமையாக இவர் பாடல்களுள் வந்துள்ளது. மலரின் மென்மையும் அழகும் அதற்குக் காரணமாகும். இவை மரபின் வழிப்பட்டனவே.

தாமரை மலர் சிவபெருமான் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் சிவன் திருவடிகட்கு ஈரிடங்களிலும் உமையம்மையின் முகத்திற்கு ஈரிடங்களிலும் திருமாலின் கண்ணுக்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது இவை யாவும் நிறவுவமையின் பாற்படும்.

"ஏரிக் கனகக்கமல மலரன்ன சேவடி" 130

என்பது அவற்றுள் ஒன்று.

முல்லை மலரை உமையம்மையின் முறுவலுக்கு ஈரிடங்களிலும் குவளை மலரை உமையம்மையின் கண்ணுக்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது.

"முல்லை முறுவல்லுமை" என்பது அவற்றுள் ஒன்று.

முருக்கமலர் சிவன் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் உமையின் வாயிதழுக்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது.

வெண்மை நிறம்

இவையாவும் நிறம் பற்றி வந்தன. மலர்களின் நிறத்தில் கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகின்றன, மேலும் மரபு வழி வந்தன முன்னவர் இருவராலும் பயன்படுத்தப் பெற்றனவே ஆகும்.

முன்னிருவர் போலவே மலர்களின் நிறஅழகை இவரும் அழகாகக் குறிப்பிடுகிறார்.

கொன்றை பொன்போல மஞ்சள் நிறத்துடன் விளங்குகின்றதை இவரும் காட்டுகிறார். இத்தகையன ஈரிடங்களில் வந்துள்ளன.

செருந்திபல நும் செம்பொன்னைப் போல மலர்கின்றன என்கிறார். இத்தகையன மூன்றிடங்களில் உள. புன்னை அரும்புகளின் வெண்மை நிறத்தை முத்தெனக் குறிப்பிடும்

இடம் ஒன்றுளது. குவளை மலரின் குவிந்த அழகைக் "குவளை கண்வளரும்" என்று மூன்றிடங்களில் குறிக்கிறார்.

தாமரையும் பொன்றிரள் மணிபோல மலர்ந்துள்ள அழகை இருவிடங்களில் காட்டுகிறார்.

"செருந்தி பொன்மலரும்"
"தூநீலங் கண் வளரும்"
"பொன்ன விலுங் கொன்றை"

என்பன[131] அவற்றுள் சில. இத்தகையன முன்னிருவர் பாடல்களினும் காணப்படுகின்றன. மலர்களின் நாற்றத்தில் இவர்கள் மனம் ஈடுபடவில்லை. மலர்களின் செம்மை, வெண்மை, கருமை, பொன்மை முதலான நிறங்கள் இவரைக் கவர்ந்தன எனலாம். மலரின் மென்மையும் பொலிவும் இவரையும் கவர்ந்தன.

4. காய் :

மாவின் வடுமட்டுமே குறிக்கப் பெற்றுள்ளது.

மகளிர் கண்ணுக்கு ஈரிடங்களிலும் பாவையர் கண்களுக்கு ஓரிடத்திலும் உமையம்மையின் கண்ணுக்கு ஓரிடத்திலும் உவமையாக மாவடு வந்துள்ளது. இவை மரபு வழி வந்தன ஆகும்.

மகளிரின் முலைக்கும் உமையம்மையின் முலைக்கும் குரும்பை (பனை தன்னை) உவமையாக ஈரிடங்களில் வந்துள. இவையாவும் வடிவ உவமையின் பாற்படும்.

"குரும்பை மென்முலைக் கோதைமார்"

என்பது அவற்றுள் ஒன்று. இவை தொல்மரபே ஆகும்.

5. கனி

கொவ்வைக்கனி, பலாக்கனி, நெல்லிக்கனி முதலான கனிகள் உவமைகளாயின. பொதுவாகக் கனியெனும் இரு இடங்களும் உள்ளன.

உமை வாயிதழின் நிறத்திற்கும் ஓரிடத்திலும் மகளிரின் வாயின் நிறத்திற்குப் பாடல்களிலும் தொண்டைக்கனி [கொவ்வை] உவமையாக வந்துள்ளது. "தொண்டைவாயுமை" என்பது அவற்றுள் ஒன்று.

இறைவன் பழமாகவும் பழத்தின் சுவையாகவும் விளங்குகின்றான்.

என்பதை உருவகமாக இரு இடங்களில் குறிப்பிடுகிறார் ஆசிரியர். பழத்தினையும் பழத்தின் இனிமையையும் சுவையையும் பிரித்தல் இயலாது இரண்டு கலந்தது. அது போல இறை உயிர்களிடம் கலந்துளது என்பதுணர்த்த இவ்வுவமை வந்துளது. இதை முன்னிருவரும் பயன்படுத்தியுள்ளனர். மரபு வழிப்பட்டதே இது.

"சிந்தித்தெழுவார்க்கு நெல்லிக்கனியே" [182] என்னும் ஒரு குறிப்பு இறைவன் உயிர்களுக்குச் சாவா மருந்தாக விளங்குகின்றான் என்பதை உணர்த்துகின்றது. இது புதுமையான ஒன்றாக விளங்குகின்றது. பலவின் கனியை ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். பலவின் கனி ஈயதுபோல எனப் பெண்ணின்பத்தைக் குறிப்பிடுகிறார்.

கனியின் நிறமும் இனிமையும் மருந்தாம் தனிமையும் ஈக்கள் மொய்க்கும் தன்மையும் இவர் பாடல்களில் உவமையாக வந்துளது.

6. பஞ்சு

மகளிரின் பாதத்திற்கு ஓரிடத்திலும் உமையம்மையின் திருவடிகட்கு நான்கிடங்களிலும் பஞ்சு உவமையாக வந்துளது.

"பஞ்சேர் மெல்லடி" பஞ்சின் மென்மைக்கு இங்கு உவமையானது. இது மரபு வழிப்பட்டது.

7. விதை

தினைமட்டுமே இங்கு உவமையாக ஓரிடத்தில் உருவிற் சிறிய தன்மைக்கு உவமையாக வந்துள்ளது.

"தினைத்தனைப் புகலிட மறந்தேன்" 133

தினையின்தாள் நாரைக்கு ஒப்புமையாக ஓரிடத்தில் காட்டப்பெற்றுள்ளது. இது சங்க இலக்கிய மரபை ஒட்டியது.

8. செடி

கரும்பின் இனிப்புச்சுவை மகளிர் மொழிக்கு ஓரிடத்திலும் இறைவன் அருளின் இனிமைக்கு ஈரிடங்களிலும் உவமையாக வந்துள்ளது.

"கரும்பார் மொழிக் கன்னியை"

என்பது அவற்றுள் ஒன்று. இதுவும் மரபு வழிப்பட்டதாகும்

மரம், செடி, கொடிகளின் நிறமே இவரால் பெரிதும் பேசப் பெறுகின்றது. மலரின் அழகும் நிறமும் இவராலும் முன்னவர் போலவே கூறப்பட்டிருக்கின்றன. யாவும்மரபை ஒட்டியனவாகவே காணப்பெறுகின்றன. முன்னவர்கள் மீது கொண்ட ஈடுபாடும் வழிவழிவந்த மரபைப் பின் பற்றலும் இதற்குக் காரணமாகலாம்.

இயங்குயிர்கள்

1.3.5.2.0. விலங்குகள்

இயங்குயிர்களில் விலங்குகள் உவமைகளாக வந்துள்ளன. நாய், மான், பசு, நரி, கழுதை, தேரை, களிறு, காளை, குரங்கு முதலியன உவமைகளாக வந்துள்ளன.

1. நாய் : நாயின் குணங்களாகிய தலைவன்மேல் பற்று வைத்திருத்தல், வேலையின்றிச் சுற்றுதல் கீழ்ப்பட்டு நடத்தல் முதலான தன்மைகள் எதிர்மறை வகையால் சுட்டப்பெறுகின்றன தலைவனாம் இறைவனை மறந்து அழிந்த தன்னிலைக்கு உவமையாக நாயைத் தின் பாடல்களுள் இவர் பதினைந்திடங்களில் குறிப்பிடுகிறார்.

"நாயடியேன்" "நாய்தான் போல நடுவே திரிந்தும்" என்பன[184] அவற்றுள் சில.

2. மான்; உமையம்மைக்கு ஓரிடத்திலும் சங்கிலியார்க்கு ஓரிடத்திலும் மான் உவமையாக வந்துள்ளது. மகளிர் கண்ணுக்கு ஐந்திடங்களிலும் உமையம்மையின் கண்ணுக்கு மூன்றிடங்களிலும் மானின்கண் உவமையாக வந்துள, இது மரபு வழிப்பட்டதாகும்.

"மானன நோக்கியர்"

என்பது அவற்றுள் ஒன்று. மிரட்சியான பார்வை இங்கு உவமையாக வந்தது. மானின் மிரளும் விழி இவரைக் கவர்ந்துளது.

3. பசு; கன்று மடியில் முட்டமுட்டப் பால் சுரக்கின்ற தன்மையை இவர் உவமையாகக் காட்டுகிறார்.

"கன்று முட்டி உண்ணச் சுரந்த காலியவை போல-என்றும் முட்டா பாடும் அடியார்"[185] என்பதது. அவ்வுவமை மூலம் இறைவனை நெருங்கிப் பாடினால் தானே அருளுவான் என்பதை உணர்த்துகிறார். பக்திமையை, பக்தியின் வழியைப் பிறர்க்கு உணர்த்துகிறார்.

நரியின் ஏமாற்றும் தன்மையும் கழுதையின் இழிபும் காளையின் பீடும் களிறின் வலிமையும் முறையே ஒவ்வோரிடங்களில் உவமையாக வந்துள்ளது. தேரையைக் கொண்டு செல்வ நிலையாமையை இவர் உணர்த்துகிறார்.[136]

வேடர்கள் வழிப்பறி செய்யும் தன்மைக்கு குரங்குகள் வழிச் செல்வோர் பொருள்களைப் பறிக்கும் செயலை உவமையாகக் காட்டுகிறார்.

"முசுக்கள் போற்பல வேடர்கள்

வாழ்முருகன் பூண்டி"[137]

## 1.3.5.2. பறவைகள்

பறவைகளில் மயில் மட்டுமே உவமையாக வந்துள்ளது மகளிரின் சாயலுக்கு நான்கு இடங்களிலும் மகளிர்க்கு ஓரிடத்திலும் மயில் உவமையாக வந்துள்ளது. "நிகரில்மயி லாரிவர்" "மயில் சாய நல்லாள்" என்பன[188] அவற்றுள் சில விலங்குகள் உவமைகளாக இடம் பெறவில்லை.

## 1.3.5.2.3 ஊர்வன

ஊர்வனவற்றுள் பாம்பு மட்டும் உவமையாக வந்துள்ளது. உமையம்மையின் அல்குலுக்கு பாம்பு உவமை யாக ஆறு இடங்களில் வந்துள்ளது. இத்தகையன முன்னிருவர் பாடல்களிலும் காணப் பெறுகின்றன. திருஞான சம்பந்தர் குறிப்பிடுவதுபோலவே இருவரும் பாம்பினை உமையம்மையின் இடைக்கு உவமையாக மூன்றிடங்களில் தம் பாடல்களுள் குறிக்கிறார். குரவ மலரின் வடிவம் அரவத்தைப் போலுள்ளதாக இவரும் குறிப்பிடுகிறார். இவை யாவும் வடிவ உவமைகளாகும். முன்னம் ஒரு படமெடுத்த பாம்பு உவமை பின்னதற்குப் பாம்பு உவமை.

## 1.3.5.2.4 நீர்வாழ்வன

சேல், கெண்டை, கயல் எனும் மீன்வகைகள் மகளிர் கண்களுக்கும் உமையம்மையின் கண்ணுக்கும் உவமையாக இவர் பாடல்களுள் மூன்றிடங்களில் வந்துள்ளது. இவை முன்னவர் பாடல்களிலுமுள. மரபு வழிப்பட்டன ஆகும்.

## 1.3.6 தீயியற்கை

தழல் மட்டும் இங்கு நோக்கப் பெறுகிறது. தழலின் நிறமாகிய செம்மை நிறம் சிவன் திருமேனி நிறத்திற்கு ஒன்பதிடங்களிலும் மழுவின் நிறத்திற்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது. "செந்தீவண்ணர்" "தீவண்ணர்"

என்பன[139] அவற்றுள் சில. இவையாவும் நிறம் பற்றி வந்த உவமைகளாகும். இவையும் மரபு வழிப்பட்டனவே.

### 1.3.7 மணிகள்

நீலமணி, பவளம், முத்து முதலியன உவமைகளாக வந்துள்ளன. நீலமணி சிவபெருமான் திருமிடற்றின் நிறத்திற்கு மூன்றிடங்களிலும் குவளையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது. பவளம் சிவபெருமான் திருமேனி நிறத்திற்கு உவமையாக நான்கிடங்களில் காணப்பெறுகின்றன. முத்து எனும் மணிவகை உமையம்மையின் முறுவலுக்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. இறைவனையே முத்தாகக் காட்டும் இடங்கள் ஆறு உள. அவையன்றியும் திருநீற்றின் நிறத்திற்கு முத்தின் நிறத்தை ஓரிடத்தில் உவமையாகக் காட்டுகிறார்.

மணிகளின் நிறங்கள் மட்டுமே இங்கு உவமைகளாக வந்தன. இவையாவும் நிறவுவமைகள். முன்னர் பாடல்களிலும் இத்தகையன காணப் பெறுகின்றன. இவை மரபின் வழிப்பட்டனவே ஆகும்.

### 1.3.8 முடிவு

இவர்பாடல்களில் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரைக் காட்டிலும் குறைந்த எண்ணிக்கையில் அணிகள் வந்துள்ளன. திருஞான சம்பந்தரைப் போல இயற்கையில் பின்னிருவரும் ஈடுபாடு காட்டவில்லை. திருநாவுக்கரசர் போல உலகியல்புகளை மிகுதியாகத் திருஞான சம்பந்தரும் சுந்தரரும் காட்டவில்லை. நீர் நிலைகளில் இவர் கடலை மட்டுமே குறிப்பிடுகிறார். இவர் உவமைகள் யாவும் முன்னிருவர் குறிப்புகளிலும் காணப்பெறுகின்றன. தேவார மூவர் பாடல்களில் பெரும்பான்மையும் ஒரே வகை உவமைகள் காணப் பெறுகின்றன. பறவைகளில் மயில் மட்டுமே உவமையாக வந்துள்ளது. இவரின் இல்லற வாழ்வையும் இறைவன்மேல்

கொண்ட உரிமையான பக்தியும் இயற்கை ஈடுபாட்டினும் மிகுதியான ஈடுபாட்டை உடையது. அக்காரணமே இதற்குக் காரணமாகலாம்.

## 1.4 மாணிக்கவாசகர் பாடல்களில் அணிநல இயற்கை

### 1.4.1 நிலவகைமை

நிலவகையில் இவரும் மலையை மட்டும் உவமையாகக் குறிக்கிறார்.

இறைவன் தோளுக்கு ஓரிடத்திலும் இறைவனுக்கு மூன்றிடங்களிலும் மாளிகையின் உயரத்திற்கு யானையின் தோற்றத்திற்கும் ஈரிடங்களிலும் மகளிரின் கொங்கைக்கு ஓரிடத்திலும் இறைவன் ஏறும் விடையின் தோற்றத்திற்கு ஓரிடத்திலும் வல்வினைக்கு ஓரிடத்திலும் குற்றங்களின் மிகுதிக்கு ஓரிடத்திலும் மலை உவமையாக வந்துள்ளது.

வல்வினைகள் உயிரைத் தருதற்கு மலைகள் மிக உயர்ந்து பரந்து நின்று வழியைத் தடுக்கும் நிலையை உவமையாக்கிக் காட்டுகிறார். குற்றங்கள் ஒன்றுமேல் ஒன்று சேர்ந்து வளர்ந்த நிலைக்கு மலையை ஒப்புமை செய்கிறார். இவை இரண்டும் இவர்மட்டுமே காட்டும் உவமைகளாகும். தேவார மூவரிடத்தில் இத்தகையன இல்லை. "மாமலை அன்னகே" "குன்றன்ன குற்றங்களே" என்பன 140 அவற்றுள் சில.

மலையின் உயர்ந்த பரந்த தோற்றமும் வலிவும் திரியாதவன்மையும் இங்கு உவமைகளாயின. இவையன்றியும் தன் நெஞ்சுக்கும் கல்லை உவமையாகக் காட்டுகிறார் ஆசிரியர். இத்தகையன இவர் பாடல்களுள் நான்கிடங்களில் காணப்பெறுகின்றன. எதற்கும் உருகாத அதன் தன்மை இங்கு உவமையாயிற்று. சுந்தரர் பாடல்களுள் இத்தகைய உவமைகள் காணப்பெறுகின்றன. தன்னிலை

குறிப்பிடும் இடங்களில் சுழிவிரக்கமாக இவை அமைந் துள்ளன.

காடு : வல்வினையைக் காடாக உருவகப்படுத்தியுள் ளார். முல்லை நிலத்தில் எல்லாவகையான மரஞ்செடி கொடிகள் முளைத்துக் கிளைத்துப் படர்ந்து நிலத்தையே மூடிவிடுகின்றன. அதுபோலவே வினைகள் ஒன்றோ டொன்று சேர்ந்து பெருந்தொகுதியாக மறைத்து விடு கின்றன என்பதை உணர்த்தவே இவ்வாறு.

1. 4. 2. நீர்நிலைகள் :

நீர்நிலைகளுள் கடல், ஆறு ஆகிய இரண்டும் உருவகங் களாக வந்துள்ளன. ஒரு குறிப்பைத் தவிர்த்த பிறயாவும் உருவகங்கள். இவர் துன்பத்தை நான்கிடங்களிலும் ஆனந்தத்தை ஆறிடங்களிலும் அருளையை ஒன்பதிடங் களிலும் கல்வியை ஓரிடத்திலும் பிறவியை ஓரிடத்திலும் பக்தியை ஓரிடத்திலும் காமத்தை ஓரிடத்திலும் வினையை ஓரிடத்திலும் குணத்தை ஓரிடத்திலும் கடலை உருவகப்படுத்துகிறார். தேவாரமுவரைக் காட்டினும் கடல் உருவகமாக வந்த குறிப்புகளும் செய்திகளும் இவரிடத்தில் மிகுதியாகக் காணப்பெறு கின்றன. "துக்கசாகரத்துயர்" "கருணைக்கடல்" "வினைக்கடல்" என்பன[141] அவற்றுள் சில.

இவையாவும் அளவிற்பெரியதாய், அளவிடற்கரிய ஆழமுடையதாய் உள்ள கடலின் தன்மைகள் இவரைக் கவர்ந்திருக்க வேண்டும். இவையே அவர் துன்பம் முதலானவற்றினைக் கடலாக உருவகப்படுத்தத் தூண்டி யிருக்கும்.

இவையன்றியும் உவாக்காலத்துக் கடலையும் ஓரிடத் தில் காட்டுகிறார். "உவாக்காலத்து நள்ளுநீர் உள்ளகந்த தும்ப"[142] என்பதனு, உவாக்காலத்தில் கடலலைகள் மிக உயரமாக எழும். சாதாரண காலத்தைவிட இக்காலத்

தில் எழும் அலைகள் மிகவும் உயரமானவை. அவை கடல் பொங்குவதைப் போலத் தோன்றும். அக்காட்சியே இவ்வுவமை காட்டத் தூண்டியிருக்கும். அக்காலத்துக் கடல் போல உள்ளம் ததும்ப வேண்டும் என்கிறார். மேலும் கடலைப் போல ஆர்த்தார்த்து ஓங்கி ஓலமிடவேண்டும் என்றொரு குறிப்பையும் தருகிறார். "அன்பு என்புருக ஓலமிட்டு—அலைகடல் திரையின் ஆர்த்தாரத் தோங்கி" என்பதது. இத்தகைய இயல்பை உண்மையடியாரிடத்துக் காணமுடியும்.

2. ஆறு : இவர் அன்பையும் ஆனந்தத்தையும் இன்பத்தையும் ஆறாக உருவகப்படுத்தி உள்ளார். ஆற்றின் பெருக்கும் வளமையும் இவ்வுருவகங்களமையக் காரணமாயின. இத்தகையன நான்கு உருவகங்கள் உள. "அன்பெனும் ஆறு" என்பது அவற்றுள் ஒன்று.

3. சுழி : சாதி, குலம், பிறப்பு என்பனவற்றை இரு இடங்களில் சுழியாக - நீர்ச்சுழியாக ஈரிடங்களில் உருவகப் படுத்தியுள்ளார். இவையன்றியும் பள்ளம் செல்புனலையும் சிறை பெறா நீரையும் இரு இடங்களில் குறிப்பிடுகின்றார். பாய்ந்து செல்லும் பொலிவையும் அழகையும் இவர் காட்டுகிறார். தேவார மூவரைக் காட்டிலும் மிகையான உருவகங்களைப் பயன்படுத்துகிறார். இவரின் பக்தி நெறியாகிய ஞானநெறி இதற்குக் காரணமாகலாம். ஞான மார்க்கத்தை சேர்ந்தவராதலால் இவர் பாடல்களில் உருவகங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

### 1.4.3. வானியற்கை :

வான் இயற்கைப் பொருள்களாகிய கதிர், மதி, மேகம், மின்னல், இடி முதலியன உவமைகளாகவும் உருவகங்களாகவும் வந்துள்ளன.

அந்திச் செவ்வான் இறைவன் திருமேனி நிறத்திற்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. "செக்கர் போலுந்

திருமேனி"[143] இத்தகைய குறிப்புகள் தேவார மூவர் பாட லிலும் உள்ளன.

1. கதிர் : கதிரவன் கதிர்கள் இருளை நீக்கும் செய லும் இங்கு உவமையாக வந்துள்ளது. இறைவன் "இருள் கடிந் தெழுந்த ஞாயிறே போன்று"[144] என்ற தொடர் ஞாயிறு இருள் கடியும் செயல் உவமையாக வந்ததாகும். இதுவன்றியும் வீட்டில் நுழையும் கதிரில் நுண் அணுக்கள் இருப்பதைக் காணலாம். அவை இறைவன் எங்கு கலந் துள்ள தன்மைக்கு உவமையாக இங்கே காட்டப் பெற் றுள்ளது. "இல்நுழை கதிரின் துன்னணுப்புரைய சிறிய வாகப் பெரியோன்" என்பதது. கதிரவன் ஒளிக்கதிர் களில் மாசுகள் காணப்பெறுவதுவே இவர் காட்சியில் அமைந்துளது. இது இவர் மட்டுமே காட்டுவது.

2. மதி : மகளிர் நுதலுக்கு ஓரிடத்திலும் முகத்திற்கு ஓரிடத்திலும் நகைக்கு ஓரிடத்திலும் மதி உவமையாக வந் துள்ளது. இடையில் உள்ளதுமட்டும் நிறவுவமை. பிற வெல்லாம் வடிவுவமை. இவை மரபு வழி வந்தன. தேவார மூவர் பாடல்களிலும் உள்ளன.

3. தாரகை : இவர் வானத்து நட்சத்திரங்களைச் சிவன் தன் கழுத்திலணிந்த தலைமாலைக்கு ஒப்புமையாக ஓரிடத்தில் காட்டுகிறார். இவர்மட்டும்தான் இவ்வகை யில் குறிப்பிடுகிறார்.

4. மேகம் : சிவபெருமான் கண்டத்தின் நிறத்திற்கு ஓரிடத்திலும் உமையம்மையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் திருமால் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் மேகத்தின் கரியநிறம் உவமையாக வந்துள்ளது. இவையன்றியும் தேவார மூவரைப் போல இவரும் இறைவனை மேகத்திற்கு ஒப்பிடுகிறார். இறைவனும் மேகமும் பயன் எதிர்பாராது உதவுவன என்பது இவற்றால் உணர்த்தப்பெறுகிறது. "அண்டத்தரும் பெறல் மேகன் வாழ்க"[145] என்பதது. இத்தகையன இருகுறிப்புகள். கரியநிறம் மட்டும்

அல்லாமல் மேகம் தரும் பயனும் இவர்களால் உவமை யாக்கப்பட்டுள்ளது.

5. மின்னல்: மின்னலின் நிறமும் இற்றுப்போன்று தோன்றி மறையும் வடிவமும் இங்கு உவமைகளாயின.

சிவபெருமான் திருமேனி நிறத்திற்கு மூன்றிடங்களி லும் சடையின் நிறத்திற்கு நான்கிடங்களிலும் சிவன். சிரிப்புக்கு (முறுவல்) ஓரிடத்திலும் மின்னலின் நிறம் உவமையாக தந்துள்ளது. "மின்னார் உருவ விகிர்தா" "மின்னையொப்பாய" "மின்னேரனைய" என்பன[146] அவற்றுள் சில.

6. இடி: இடியின் ஓசை மழுவின் ஓசைக்கு உவமை யாக வந்துள்ளது. முழுவம் காரென ஆர்த்தது என்பதது பிறர் யானையின் பிளிறலுக்கோ, விடையின் குரலுக்கோ. கூற்றத்தின் குரலுக்கோ ஒப்பிடுமாறு இவர் காட்டவில்லை,

1.4.4. காலவியற்கை

இருள், மாலை எனும் இருபிரிவுகள் மட்டும் இவரா லும் உவமையாக்கப் பெற்றுள்ளன.

இவர் இருளாக ஆணவமலத்தையும், மாயாமலத்தை யும் நான்கிடங்களில் உருவகப்படுத்தியுள்ளார். "என்னுடைய இருளை"[147] என்பது அவற்றுள் ஒன்று. இத்தகையன திருநாவுக்கரசர் பாடல்களில் காணப் படுகின்றன. திருநாவுக்கரசரும் இவரும் பக்தியில் மிக்கிருந்தவர்கள். ஞானநெறியைப் பின்பற்றியவர்கள். ஆகையால் இத்தகு உருவகங்கள் இவர்களிடம் காணப் பெறுகின்றன.

மாலைக்காலத்து பொன்மயமான மஞ்சள் நிறம் தேவார மூவரைப்போல இவருடைய மனதையும் கவர்ந் திருக்க வேண்டும். இறைவன் திருமேனி நிற அழகையும்,

சடையின் நிற அழகையும் அந்தியின் நிறத்தொடு ஈரிடங்களில் ஒப்பிடுகிறார்.

"அந்தியன்ன சடையவன்" "அந்தியின்வாய் எழில்" என்பன[148] இவரது அழகியலுணர்வைக் காட்டுகின்றன.

1. 4. 5. உயிரியற்கை

1.4.5.1. இயங்கா உயிர்கள்

பொதுவாக மரம் என்பது ஆறிடங்களில் உவமைகளாகவும் உருவகங்களாகவும் வந்துள்ளன.

வற்றல் மரம், நச்சுமரம், பசுமரம், ஆற்றங்கரை மரம், மாமரம் முதலியன உவமையாக வந்துள்ளன. தன்னுடைய நிலைகள் இவை உணர்த்த உவமையாக வந்துள்ளன. பக்தியின் உறுதிப் பாட்டுக்குப் பசுமரத்தில் ஆணி உவமையாகவும் ஐம்புலனின்பம் அழிதல் ஆற்றங்கரைமரம் உவமையாகவும் நச்சுமரமாயினும் கொல்லாததன்மை தன்னிலைக்கு உவமையாகவும் உணர்வற்ற தன்நிலைக்கு மரக்கண் உவமையாகவும் தன்னிலைக்கு வற்றல் மரம் உவமையாகவும் வினைக்கு மரத்தின் வேர் உருவகமாகவும் வந்துள்ளது.

"...தாம்வளர்த்ததோர்
நச்சு மாமர மாய னுங்கொலார்"

என்பதும்

"வாடி வாடி வழியற்றேன்
வற்றல் மரம்போ னிற்பேனோ"

என்பதும் சில.[149]

"பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகா"

என்பதும்

"காருறு கண்ணிய ஏரம்புல
னாற்றங் கரை மரமாய்"

என்பதும்.

1. வேய்: உமையம்மையின் தோளுக்கு ஈரிடமும், மகளிரின் தோளுக்கு ஓரிடமும் வேய் உவமையாக வந்துள்ளது. தன்னுடைய மனம் கோடாத நிலைக்கு உவமையாக மூங்கில் இரு இடங்களில் உவமையாக வந்துள்ளது. "திணியார் மூங்கி லனையேன்" "வேய் தோளுமை" என்பன[150] அவற்றுள் சில. மூவர் உறுப்பு நலன் அழகுக்காக வேயைக்காட்ட இவர் தன்மனத்தின் வன்மைக்காய் இதைக் காட்டுகிறார்.

2. வேர்: பாசத்தையும் பிறவியையும் வேராக இரு இடங்களில் உருவகப்படுத்தியுள்ளார். "பாச வேரறுக்கும்" "பிறவி வேர்" என்பன[151] அவை. அவற்றின் அறுபடாத தன்மை உருவகத்திற்குக் காரணம் ஆனது. சுந்தரரும் இத்தகைய குறிப்புகளைத் தந்துள்ளார்.

3. கொடி: மகளிர்க்கும் உமைக்கும் உவமையாகக் கொடி மூன்றிடங்களில் வந்துள்ளது. தன்னிலைக்குக் கொம்பரில்லாக் கொடியை உவமைப்படுத்துகிறார். இது வன்றியும் உமையம்மையின் இடைக்கும், மகளிர் இடைக்கும் வடிவம்பற்றி உவமையாக வந்துள்ளது.

"கொம்பரில் லாக்கொடி போலல
மந்தனன் கோமளமே"[152]

என்பதொன்று.

4. செடி: கரும்பின் இனிமை உவமையாகப் பல விடங்களில் வந்துள்ளது. இறைவன் அருளின் இனிமைக்கு மூன்றிடங்களிலும், மகளிர் மொழியின் இனிமைக்கு இரண்டிடங்களிலும் கரும்பின் இனிமை உவமையாக வந்துள்ளது.

5. தளிர் : இறைவன் திருமேனியின் நிறத்திற்கு தளிரின் நிறம் உவமையாக இவர்தம் பாடலுள் ஓரிடத்தில் வந்துள்ளது.

"எரிசேர் தளிரன்ன மேனியன்" 153

என்பதது.

இது நிறவுவமையின் பாற்படும். பிறர் உமை, மகளிர் முதலானவர்க்கும் கூற, இவர் இறைவன் திருமேனிக்கு மட்டும் குறிக்கிறார்.

6. அரும்பு : இறைவனை அரும்பாக ஓரிடத்தில் உருவகப்படுத்தியுள்ளார். உமையம்மையின் கொங்கைக்குக் கொங்கின் அரும்பை வடிவம் பற்றி இரு இடங்களில் உவமிக்கிறார். "கோங்கிற் பொலியரும் பேய் கொங்கை" என்பதது. இது வடிவ உவமையாகும்.

7. மலர் : மலர்கள் என்ற பொது உவமையாக வந்துள்ளன. இறைவன் சொல்லால் இருபத்தொன்பது இடங்களில் மலர் உவமையாக வந்துள்ளது. மகளிர் கண்களுக்கு உவமையாக எட்டிடங்களில் மலர் வந்துள்ளது. "பாதமலர்" 'மாமலர்சேவடி," "மாமர்க் கண்கள்" என்பன அவற்றுள் சில. இறைவன் உயிர்களில் கலந்து, மறைந்து காணப்படும் நிலைக்கு உவமையாக மலரின் நாற்றம் உவமையாக மூன்றிடங்களில் வந்துள்ளது.

"பூவின் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும் ஒழிவற நிறைந்து" 154 என்பது அவற்றுள் ஒன்று. இறைவனிருப்பைக்காட்ட இவை பயன்பெறுகின்றன. பக்தி இயக்கத்தில் இத்தகையன ஒரு உத்தியாக ஆளப்பெற்றன. இத்தகையன நாவுக்கரசர் பாடல்களிலும் காணப் படுகின்றன.

தாமரை

தலைவியின் கண்ணுக்கு இருஇடங்களிலும் முகத்திற்கு ஈரிடங்களிலும் இறைவன் திருமேனிக்கு ஈரிடங்களிலும் மகளிரின் வாய்க்கு ஓரிடத்திலும் குவிந்த கரத்திற்கு ஓரிடத்திலும் உவமையாகத் தாமரைமலர் குறிக்கப் பெற்றுள்ளது. மலர்க்கண், செந்தாமரை, முகத்தாமரை என்பன அவற்றுள் சில. இவற்றுள் கரத்திற்கு உவமையாக வந்தன போக பிறயாவும் நிறவுவமையாகும். தாமரையின் செம்மையே இங்கு உவமையாக வந்தது.

சிவன் திருவடிக்கு மலரைக் கூறியதோடு தாமரையையும் சிறப்பாக ஒன்பது இடங்களில் உவமை கூறுகின்றார் அவையும் நிறவுவமையின் பாற்படும்.

"செழுக்கமலத் திரளனநின் சேவடி"[155]

என்பது அவற்றுள் ஒன்று.

இத்தகையன தேவாரமூவர் பாடல்களிலும் காணப் பெறுகின்றன.

குவளை

உமையம்மையின் கண்ணுக்கு ஓரிடத்திலும் தலைவியின் கண்ணுக்குப் பத்திடங்களிலும் சிவன் மிடற்றின் நிறத்திற்கு மூன்றிடங்களிலும் குவளையின் குளிர்ச்சித் தன்மையும் நிறமும் உவமையாக வந்துள்ளன.

"காவியை வெல்லுமிடற்றோன்"

"பொருமலர்க் கண்மைவார் குவளை"

என்பன [156] அவற்றுள் சில.

ஒரு மடுவில் குவளையும் செந்தாமரையும் மலர்ந்து காணப்பெறும் காட்சி இவரைக் கவர்ந்துள்ளது. இவர் ஒரு மெய்ஞ்ஞானி ஆகையால் அக்காட்சி மெய்ஞ்ஞானக்

காட்சியாக அமைந்தது. குவளை நிறம் உமையம்மையின் யின் நிறத்தையும் தாமரையின் நிறம் சிவன் நிறத்தையும் இவர் உள்ளத்தில் காட்டுகின்றன. இவர் அம்மலர்களைக் காணவில்லை. அவற்றை உமையாகவும் சிவனாகவும் காண்கிறார். இது மெய்ஞ்ஞானியின் காட்சியாகும்.

"பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப்
பைம்போதால்...
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்று" 157

என்பதது. இது தேவார மூவரினும் மேலாக அமைந்த காட்சியாகும். இத்தகைய காட்சியை இவர்மட்டுமே காட்டுகிறார்.

செங்கழுநீர்மலர் :

தலைவி சினந்தபோது கண் சிவப்பாகக் காணப் பெறும். அக்கண்ணுக்கு உவமையாகச் செழுங்கழுநீர் மலரின் சிவப்பை உவமையாக்குகிறார். இத்தகையன மூன்றுள்

"காவியங் கண் கழுநீர்ச்செவ்வி
வெளவு கற்றன" 158

என்பதொன்று. இது தேவார மூவர் பாடல்களில் காணப் பெறவில்லை. இவர்மட்டும் இதைக் குறிப்பிடுகிறார்.

செச்சை மலர் ஈரிடங்களில் இறைவன் திருமேனிக்கு நிறம்பற்றி உவமையானது. குமுதமலரைத் தலைவியாகக் காட்டுகிற இடம் ஒன்றுள்ளது.

மலரைப் பிறவற்றிற்கு உவமையாக்குதல் மட்டு மல்லாமல் மலரின் அழகுக்குப் பிறவற்றை உவமையாக்கிக் காட்டுவதில் முதல் மூவரைப் போல இவரும் உள்ளார். ஆயினும் இவர் காந்தளையும் புன்னையையும் மட்டும் மிகச்சில இடங்களில் கூறுகிறார். அவற்றுள் காந்தள் அரவு போல மலரும் வடிவுவமைக் காட்சி இரண்டுள்ளது.

"நாண் போன்றிக் கடிமலர்க் காந்தள்"

என்பதொன்று.

இவர் பெரும்பான்மையும் தலைவியின் உறுப்பு நலன்களுக்கு மிகுதியான இடங்களைத் தருவதன் காரணம் இவரின் திருக்கோவையாராகும். திருக்கோவையார் அகப்பொருள் இலக்கியத்தைச் சார்ந்த நாயகநாயகி பாவத்தில் அமைந்த நூலாகும். அத்தன்மையே இதற்குக் காரணமாகும்.

8. காய்: மாவின் பிளந்த வடுமட்டும் முன்மூவரைப் போலவே இவரும் மகளிர் கண்ணுக்கும் உமையம்மையின் கண்ணுக்கும் உவமையாகக் காட்டுகிறார்.

"மாவின் வடுவகி ரன்னகண்" 159

என்பது அவற்றுள் ஒன்று. இதுமரபுவழி வந்தது.

9. கனி: இறைவன் கனியாக, கனிச்சுவையாக விளங்குகிறான். என ஐந்திடங்களில் குறிப்பிடுகிறார். அவையாவும் உருவகநிலையில் அமைந்தன. கனியின் இனிமைச் சுவைமட்டும் இங்கு உருவகப்படுத்தப் பெறவில்லை. பிரிக்க முடியாத கலந்த தன்மையும் குறியீடாகக் காட்டப் பெற்றது.

"அது பழச்சுவையென" "கனியே"

என்பன 160 அவற்றுள் சில. இவை மரபு வழிப்பட்டதே. திருநாவுக்கரசரும் இதைக் குறிப்பிடுதல் காணலாம். இங்குக் கனி, பழம் எனும் பொதுச்சொல்லால் அமைக்கப் பெற்றுள்ளது.

இறைவன் சாவாமருந்தாய் உள்ள தன்மையை நெல்லிக்கனியின் மூலம் உருவகமாக்கிக் காட்டுகிறார். சுந்தரர் பாடல்களில் இத்தகைய இருகுறிப்புகள் உள்ளன.

"நெல்லிக்கனியை"

என்பது அவற்றுள் ஒன்று.

தொண்டர்களின் நிறம் மகளிரின் வாயிதழ் நிறத்திற்கு உவமை கூறும் மரபு பழையது. இத்தகையன தேவார மூவர் பாடல்களிலும் காணப்பெறுகின்றன. இவர் மூன் றிடங்களில் இத்தகைய உவமையைப் பயன்படுத்துகிறார்.

மனத்தைக் கனிவித்தலாகிய செயலுக்கு வாழைப் பழம் ஒப்புமையாக்கப் பெற்றுள்ளது. "வாழைப் பழத்தின் மனங்கனிவித்து"[161] என்பதது. கனிகின்றதன்மை வாழைப் பழத்திற்கு (விரைவாக) மிகுதியும் உண்டு என்பதைக் காட்டுகிறது. இத்தகைய வாழைக் கனியின் கனியும் இயல்பை உவமையாக்கிய புதுமை இவர் பாடலில் மட்டுமே காணப் பெறுகிறது.

புளியம்பழத்தை ஒப்புமையாகக் கூறும் இடம் ஒன்றுளது. புளியம்பழத்தில் ஓடும் பழமும் ஒன்றை யொன்று தொடாமல் இருக்கும் இத்தகுதன்மையை இவர் தன் இறைவனை சிந்தியாமல் கழிந்ததை எண்ணித் தன் னிலைக்கு உவமையாகக் காட்டுகிறார். "புளியம்பழம் ஒத்திருந்தேனே"[162] என்பதது. திருமுறை ஆசிரியர்களில் இவர்மட்டுமே இத்தகுத்தன்மையை உவமையாகக் காட்டு கிறார். இத்தகைய புதுமையான இயற்கை உவமைகள் இவர் பாடல்களில் சில உள்ளன.

பிறர் பழத்தின் நிறத்தையும் சுவையையும் உவமையாக்க இவர் (கனிதல், ஓடு ஒட்டாதிருத்தல்) அதன்பிற இயல்பை யும் உவமையாகக் காட்டுகிறார்.

10. விதை: தினையும் எள்ளும் இவர் பாடல்களுள் உவமையாக வந்துள்ளன.

தினை அளவிற் சிறிய தன்மைக்கு நான்கிடங்களில் உவமையாக வந்துள்ளது. இத்தகையன மரபு வழிப் பட்டன. தேவார மூவர் பாடல்களிலும் காணப்பெறு கின்றன. "தினையின் பாகமும் பிரியாது"[163] என்பது அவற்றுள் ஒன்று.

நாவுக்கரசர் பாடல்களில் எள் அளவிற் சிறிய தன்மைக்கு உவமையாக வந்துள்ளது. இவர் பாடலில் எள்ளினுள் எண்ணெய் மறைந்திருக்கும் இயல்பு, இறைவன் உயிர்களில் கரந்துள்ள தன்மைக்கு உவமையாக வந்துள்ளது. "எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தையே"[164] என்பதது. பாலில் நெய் போல, விறகில் தீ போல எள்ளில் எண்ணெய் என்ற நிலையில் கரந்து விளங்கும் தன்மையை இவ்வியற்கை மூலம் புலப்படுத்துகிறார்.

12. பஞ்சு : உமையம்மையின் திருவடிகளுக்கும் மகளிர் அடிகளுக்கும் பஞ்சு உவமையாக ஐந்திடங்களில் காணப்பெறுகிறது. பஞ்சின் மென்மையை அடிகட்கு உவமையாகக் கூறுவது பண்டையோர் மரபு.

இயங்கா உயிர்கள் அணிகளில் வந்துள்ள குறிப்புகள் பெரும்பாலும் மரபு வழிபட்டன. அவை திருநாவுக்கரசர் குறிப்புகளோடும், பிற ஆசிரியர்களின் குறிப்புகளோடும் பரவலாக ஒத்துவிளங்குகின்றன.

### 1.4.5.2. இயங்குயிர்கள்

இயங்குயிர்களுள் விலங்கினங்களில் நாய், மான், யானை, யாளி, முதலை, பசு, புலி, புழு, எறும்பு, பாம்பு முதலியன உவமைகளாக வந்துள்ளன. விலங்கு எனும் பொதுச்சொல்லால் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். மனத்தை விலங்காக உருவகப்படுத்துகிறார்.

"விலங்குமனம்"

என்பதது.

நல்லன, தீயன எனப் பகுத்தறிந்து சிந்திக்கும் (பகுத்தறிவு) இயல்பு விலங்கின் மனத்திற்குக் கிடையாது. அத்தகைய மனமாகத் தன்மனத்தை ஆசிரியர் கூறுகிறார்.

"விலங்கொடு மக்கள் அனையர்"

என்ற வள்ளுவர் குறிப்பும் இணைத்துச் சிந்திக்கத்தக்கது.

1. நாய்: தன்னை நாயொடு ஒப்பிட்டுக்காணும் இடங்கள் இவர் பாடல்களில் திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய இருவரைக் காட்டிலும் மிகுதியாகக் காணப்பெறு கின்றன. திருஞானசம்பந்தர் பாடல்களில் நாய் உவமை யாக வரவில்லை. தலைவனை அறியும் இயல்பும், நன்றி யுடையதாக இருத்தல் முதலிய தன்மைகள் நாய் பெற் றிருந்தும், ஆறறிவு பெற்றவராகத் தாமிருந்தும் அவ் வியல்புகள் தனக்கில்லையே என்று அவற்றை எதிர்மறை யாக ஒப்பிட்டுக்காட்டுகிறார். இதுவன்றியும் அசுத்தத்தை உண்ணல், தான் கக்கியதை மீண்டும் உண்ணுதல், நல்லவன் தீயவன் எனப் பகுத்தறியாமையாகிய நாயின் குணங் களிலும் தன் குணங்கள் இழிந்து காணப்பெறுகின்றன என உடன்பாட்டுவகையால் ஒப்பிட்டும் காட்டுகிறார்.

"நாயேற்கு அருளினை"

"நாயடியேன்"

"நாய்க்குத் தவிச்சிட்டு"

என்பன[165] அவற்றுள் சில. பக்தி இயக்க காலத்தில் இத்தகைய கூறுகள் வளரலாயின.

2. மான்: உமைக்கு ஓரிடத்திலும் உவமையின் விழிக்கு ஆறு இடங்களிலும் மகளிர் விழிக்குப் பதினான்கு இடங்களிலும் மானும் மானின்விழியும் தேவார மூவர் பாடல்களிலும் உவமையாக வந்துள்ளன. இத்தகையன இவர் பாடலிலும் காணப்பெறுகின்றன.

"மானமர் நோக்கியர்"

என்பது ஒன்று.

மானின் அழகிய தோற்றமும் மடமையொடு கூடிய பார்வையும் இங்கு உவமையானது.

3. யானை : ஓரிடத்தில் யானையைக் குன்றத்தோடு உவமை செய்துள்ளார். சிவபெருமானால் தோலுரிக்கப் பெற்ற வலிய தோற்றம் கொண்ட யானை எனும் போது யானையைச் சிறப்பிப்பதன் மூலம் சிவபெருமானின் வீரத்தைப் புலப்படுத்துகிறார்.

இதுவன்றியும் அவர் வினையையும் புலனையும் யானையாக இருவிடங்களில் உருவகப்படுத்தியுள்ளார். "களிறெனும் அவர்" "புலவடற்கரி" என்பன 166 அவை. மதம்பிடித்த யானை ஒரு வழியில் நில்லாது பலவழியில் செல்லும். கண்ணில் கண்டவற்றை அழிக்கும்... அவாவும் புலன்களின் இன்பங்களும் அத்தகையன என்பதுணர்த்த இவற்றைக் கூறுகிறார்.

இறைவனுக்கு உவமையாக ஆளியை மூவிடத்திலும் உமையின் கண்களுக்குத் தழலை உவமையாக ஓரிடத்தி லும், பெண்ணின்பத்திற்கு முதலையை உவமையாக ஓரிடத்திலும் கூறுகின்றார்.

4. எறும்பு : தன்னிலையை இருதலைக் கொள்ளி யின் எறும்பின் நிலை மூலமும் எறும்பிடைப்பட்ட நாங்கூழின் நிலை மூலமும் முறையே ஒவ்வோர் இடங்களில் புலப்படுத்துகின்றார்.

"இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு"

"எறும்பிடை நாங்கூழெனப்புல னாளரிப்
புண்டலந்த தமியேன்"

என்பன 167 அவை. இதுவன்றியும் புன்மை கருதி புழுவின் தலையைத் தனக்கு உவமிக்கும் இடம் ஒன்றுளது. இத்தகைய உவமைகளை நாவுக்கரசரும் இரு இடங்களில் குறிப்பிடுகிறார்.

5. பசு : கன்றுடைய பசு இங்குத் தன்னிலைக்கு உவமையாகிறது. "ஊராமிலைக்கக் குருட்டா மிலைத்திங்

குன்தா ளினைபுக்கு"[168] என்பது நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து என்னும் இவரின் சொற் றொடரின் விளக்கமாக அமைந்துள்ளது.

இன்னொரு குறிப்பு ஈன்ற கன்றைக் காணாத பசு கதறும் பதறும் காட்சியை மூன்றிடங்களிலும் உவமை யாக்குகிறார். அத்தகைய மனநிலை உடையவர்கள் இறைவனடியார்கள் என்பதைக் காட்டித் தன் மனநிலை காட்டுகிறார். இரண்டாம் காட்சியை இன்றும் காணலாம். இத்தகைய உவமைத் தொடர் மரபுவழிப்பட்டது, இவர் கொள்ளும் விலங்கு வந்த உவமைகள் விலங்குகளின் செயல்களையே காட்டுகின்றன.

6. பாம்பு: மகளிர் அல்குலுக்கு மூன்றிடங்களிலும் உமையம்மையின் அல்குலுக்கு ஈறிடங்களிலும் மகளிரின் இடைக்கு ஓரிடத்திலும் பாம்பு உவமையாக வந்துள்ளது. இத்தகையன தேவார மூவர் பாடல்களிலும் காணப்பெறும் மரபு வழிவந்த உவமைகளே ஆகும். இவையன்றியும் ஓரிடத்தில் பிறவியை ஐவாயரவமாக உருவகப்படுத்தப் பெற்றுள்ளது. உலகாயத்தைப் பாம்பின் விடமாக ஓரிடத்தில் உருவகப்படுத்துகிறார். பாம்பின் விடம் உயிர்க்குத் தீங்கு விளைவிப்பது போல் உலகாயுதம் உயிர் கட்குத் தீங்கு தருகிறது, என்பதை வன்மையாக உணர்த்த இவ்வுருவகத்தைப் பயன்படுத்துகிறார் ஆசிரியர். இறுதி யில் கூறப்பெற்ற இரண்டும் திருமுறையாசிரியருள் இவர் மட்டுமே கூறுவன.

### 1.4.5.2.2 பறவைகள்

பறவைகளில் மயில், கிளி, குயில், அன்னம், வண்டு, விட்டில், பார்ப்பு முதலானவை உவமைகளாக வந்துள்ளன.

மகளிர் சாயலுக்கு மயில் இவர்தம் பாடல்களில் எட்டிடங்களில் உவமையாக வந்துள்ளது. மகளிர் மொழி

இனிமைக்கு ஆறு இடங்களிலும் உமையம்மையின் மொழிக்கு ஓரிடத்திலும் கிளியின் மழலைமொழி உவமையாக வந்துள்ளது. மகளிரின் குரலினிமைக்கு குயிலின் குரல் ஈறிடங்களிலும் மகளிரின் நடைக்கு அன்னத்தின் நடை ஈரிடங்களிலும் உவமையாக வந்துள்ளது.

"மயிலனையாய்" "கிள்ளையார் வாய்கிளவி" "குயின் மன்னுசொல்" "அனநடை" என்பன அவற்றுள் சில.

உலகியலில் ஆழும் தன்னிலைக்குத் தீயில் விழும் விட்டில் பூச்சியின் நிலையை உவமைப்படுத்துகிறார். இதுவன்றியும் தன்னிலைக்குப் பார்ப்பினைக் கூறும் இடமும் ஒன்றுண்டு.

கிளியின் வாய் சிவப்பு நிறத்திற்கு முருக்க இதழின் நிறத்தை ஓரிடத்திலும் நாவற்கனியின் கருமை நிறத்திற்கு வண்டின் நிறத்தை ஓரிடத்திலும் உவமைகாட்டுகிறார். இவை இவரது அழகியல் உணர்வைக் காட்டுகின்றன.

### 1.4.5.2.3 நீர்வாழ்வன

இவரும் கயல், சேல், கெண்டை எனும் மீனினங்களை மகளிர் கண்களுக்கும் உமையம்மையின் கண்களுக்கும் உவமையாகக் கூறுகிறார். பெண்களின் கண்களுக்கு இவற்றை, உவமையாகக் கூறுதல் தொன்றுதொட்ட மரபினைச் சேரும்.

மகளிர் கண்களுக்குக் கயல் ஏழிடங்களிலும் சேல் ஈறிடங்களிலும் கெண்டை ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளன. உமையம்மையின் கண்களுக்குக் கயல் ஓரிடத்தில் உவமையாகக் கூறப் பெற்றுள்ளது.

"கெண்டையங்கண்ணி"

"கயல்வந்த கண்ணியர்" என்பனவற்றுள் சில.

நீர்வாழ்வனவற்றும் மீன்வகைகள் நீரில் மட்டுமே வாழ்வன நீரிலிருந்து பிரியின் அவை துடிதுடித்துப் போகும், உயிர் வாழாது. இத்தன்மையை இறைவனை நினைக்காமல் பிரிந்த தன்னுடைய நிலைக்கு உவமையாகக் காட்டுகிறார்.

"பெருநீர றச்சிறு மீன்துவண் டாங்கு நினைப் பிரிந்த
வெருநீர்மை யேனை"[169]

என்பதது. திருமுறையாசிரியர்களில் இவர் மட்டுமே இத்தகைய உவமையைப் பயன்படுத்திறார்.

### 1.4.6 தீவியற்கை

சிவன் சடையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் சிவன் திருமேனி நிறத்திற்குப் பத்திடங்களிலும் தீயின் நிறம் உவமையாக வந்துள்ளது. இத்தகையன தேவாரமூவர் பாடல்களிலும் காணப் பெறுகின்றன.

"தீயின் மேனியன்"

"செந்தழல் புரையுந் திருமேனி"[170] என்பன அவற்றுள் சில. இவற்றைக் குறியீடுகளாகவும் கூறலாம். அருளைத் தீயாக ஓரிடத்தில் உருவகமாக்குகிறார். பாவங்கள் அதில் அழிக்கப்படுகிறது.

மணிகள் : மணிகளில் இவர் நித்திலத்தை மட்டும் குறிப்பிடுகிறார். இறைவன் முத்தாக விளங்குகின்றான் என இருபாடல்களில் குறிப்பிடுகிறார். அதுவன்றியும் பெண்களின் நகைப்பிற்கு முத்தினைக் கூறும் மரபை இவரும் பின்பற்றுகிறார். இத்தகையன இவர் பாடல்களுள் இரு குறிப்புகள் உள்ளன.

"ஒண் நித்தில நகையாய்"

"முத்தன்ன வெண்நகையாய்"

என்பன அவை. ஒளிவீசும் தன்மையும் வெண்மை நிறமும் இங்கு உவமையாயின.

### 1.4.7 முடிபுகள்

இவர் உருவகங்களை மிகுதியாகப் பயன்படுத்துகிறார். இவரின் உருவகங்களின் பெரும்பான்மையும் திருநாவுக்கரசரின் உருவகங்களோடு ஒத்து விளங்குகின்றன.

இவர் தன்னைப் பற்றிய நிலைகளுக்கு மிகுதியாக உவமைகளைப் பயன்படுத்துகிறார். இத்தகைய நிலை திருநாவுக்கரசர் பாடல்களில் பெரிதும் காணப் பெறுகின்றன.

உவமைகளாக வருவனவற்றில் பெரும்பான்மை மரபு வழிவந்தனவாக உள்ளன. அவை தேவார மூவர் பாடல்களில் காணப்பெறுகின்றன.

இவர் பக்தி நிலையில் ஓரளவு திருநாவுக்கரசரோடு ஒத்து விளங்கும் தன்மையும் திருநாவுக்கரசர் போல்தான் பலகாலம் இறையை நினையாமல் கழிந்ததற்கு இரங்கும் தன்மையும் அவர்போல உலகியல் யாவும் உணர்ந்த வயது முதிர்ந்த நிலையும் திருநாவுக்கரசர் போல இவர் உவமை உருவகங்கள் அமையக் காரணமாயின எனலாம். இவர் மேலும் மரபுவழியைப் பின்பற்றி உவமை உருவகங்களை அமைத்துள்ளார் எனலாம்.

## திருமாளிகைத் தேவரும் அணிநல இயற்கையும்

### 1.5.1 நில வகை

நிலவகையில் மலை மட்டுமே உவமையாகவும் உருவகமாயும் வந்துள்ளது. திருமாளிகைத் தேவர் பாடல்களில் பதினான்கிடங்களில் மட்டுமே அணிகள் வந்துள்ளன. மலை பதின்மூன்றிடங்களிலும் உருவகமாக உவமையாக வந்துள்ளது. சிவன் தோளுக்கு உவமையாக ஓரிடத்தில்

வந்துள்ளது. 'குணக்குன்றே'[171] என்று சிவபெருமானின் குணங்கள் உருவகப் படுத்தப் பெற்றுள்ளன.

### 1.5.2 வான் இயற்கை

செவ்வானை இறைவன் திருமேனிக்கு ஒப்புமையாகக் கூறும் ஓரிடம் மட்டுமே வானியற்கைப் பொருள் உவமையாக வந்தது. "செக்கர் ஒத்தது" என்பதது. இதைச் சமயக் குரவரும் காட்டுகின்றனர். கதிர், மதி, மேகம், இடி, மின்னல், மழை முதலிய வானியற்கைப் பொருள்கள் உவமைகளாக வரவில்லை.

### 1.5.3 காலவியற்கை

கால வியற்கையில் இருள் மட்டும் ஓரிடத்தில் உவமையாக சிவன் கண்டத்தின் நிறத்திற்கு உவமையாக வந்துள்ளது. அந்தி பற்றிய குறிப்பில்லை.

### 1.5.4 உயிரியற்கை

இயங்கா உயிர்களின் உறுப்புகளில் மலரும் கனியும் உவமையாகவும் உருவகமாகவும் வந்துள்ளன.

சிவன் திருவடிக்கு மலரை ஈரிடங்களிலும் முகத்திற்கு ஓரிடத்திலும உவமையாகக் காட்டுகிறார். முகத்திற்கு உவமையாகக் கூறுவது மட்டும் தாமரையாகும் சிவன் அருளைக் கனியாக ஓரிடத்தில் உருவகப் படுத்தியுள்ளார்.

பிற ஏதுமில்லை.

இயங்குயுர்களில் நாய் மட்டும் வந்துள்ளது. "வெண்ணீறத்தாடும் நமர்களை நணுகாநாய்கள்"[172] என்பதது பிற விலங்குகள் அணிகளாக வரவில்லை.

நீர் வாழ்வனுற்றுள் கயல் மீன் மட்டும் உமையம்மையின் கண்ணுக்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது.

சிவன் வாயின் நிறத்திற்குப் பவளத்தை ஒப்பிடும் இடம் ஒன்றுளது. சிவனைத் தேனாக இரு இடங்களில் காட்டுகிறார்.

சமயக் குரவர் நால்வர் பாடல்களில் காணப்பெறுமள விற்கு மிகையரசவும் சிறப்பாகவும் இவர் பாடல்களுள் இயற்கைப் பொருள்கள் அணிகளாக வரவில்லை. அவர்கள் பாடல்களுள் காணப்பெறும் நோக்கிலேயே இயற்கைப் பொருள் சிறிய அளவில் இவர் பாடலுள்ளும் வந்துள்ளன. இவருடைய நோக்கம் இறை பெருமை பற்றியதும், தில்லை பற்றியதும், இசைப்பாவாக அமைத்தல்—பற்றியதுமாகை யால் இயற்கைப் பொருள்கள் மிகையாக, அணிகளாக வர வில்லை.

## 1. 6. சேந்தனாரும் அணிநல இயற்கையில் இயற்கைப் பொருள்களும்

### 1. 6. 1. நிலவகை.

மலை என்று தனியாக இல்லை. மாணிக்க மலை என்ற குறிப்பொன்றே உள்ளது. இறைவனை மாணிக்க மலையாக உருவகப்படுத்தியுள்ளார். மலையின் தோற்றம் சிவன் தோற்றத்திற்கு ஒப்பானாலும் நிறம் பற்றி மாணிக்கத்தைச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார்.

இதுவன்றியும் தன்மனத்தைக் கல்போன்றதெனை ஒரிடத்தில் குறிப்பிடுகிறார். "கற்போல் மனம்"[173] என்பது. இத்தகைய குறிப்பு சுந்தரர் பாடல்களிலும் மாணிக்க வாசகர் பாடல்களிலும் காணப்பெறுகின்றது. உணராத, உருகாத, நிலைமாறாத தன்மைகளுக்கு கல் உவமையாக வந்துள்ளது.

### 1. 6. 2. நீர் நிலைகள்

நீர் நிலைகளில் கடல் உருவகமாக வந்துள்ளது, சிவ னுடைய அருளையும், குணத்தையும் கடலாக உருவகப்

படுத்தியுள்ளார். "கருணைக் கடல்" "குணக்கடல்" "இன்ப வெள்ளம்" என்பன அவை. கடலின் அளவிற் பெரிய தன்மையும் அளவிற்கரிய ஆழமும் இங்கு உருவக மாக அமையக் காரணமாயின.

### 1. 6. 3. உயிரியற்கை

#### 1. 6. 3. 1. இயங்கா உயிர்கள்.

இயங்கா உயிர்களில் வேய் எனும் மரமும், தாமரை மலரும், பொதுவாகக் கனியும் உவமையும் உருவகமுமாக வந்துள்ளன.

உமையம்மையின் தோளுக்கு வேய் ஓரிடத்தில் உவமை யாக வந்துள்ளது. "வேயிருந் தோள் உமை" என்பதது. இது வடிவ உவமை.

சிவபெருமான் திருவடிக்குத் தாமரை மலர் உவமை யாக ஓரிடத்தில் வந்துள்ளது. இறைவன் கனியாக ஓரிடத் தில் (உருவகமாக) வந்துள்ளான்.

#### 1. 6. 3. 2. இயங்குயிர்கள்

நாய், களிறு, மடங்கல் (சிங்கம்) ஆகிய மூன்று விலங்கு கள் அணிகளில் வந்துள்ளன.

தன்னுடைய பாடல்களைப் பற்றிக் கூறுகையில் "அடி நாய் செப்புரை" என குறிப்பிடுகிறார். சிவனை ஓரிடத்தில் களிறாகவும், முருகனை ஓரிடத்தில் மடங்கலாகவும் ஓரிடத் தில் குருளையாகவும் உருவகப்படுத்தியுள்ளார். களிறு சிங்கம், சிங்கக்குட்டி என்பன அவர்களின் வீரத்தைக் குறிக்கவென வந்தன.

இவையன்றியும் தேனாகவும், பாலாகவும் இறைவனை ஓரிடத்தில் உருவகப்படுத்துகிறார். சிங்கத்தை முன்னவர் கள் குறிப்பிடவில்லை. இவர் மட்டுமே குறிப்பிடுகிறார்.

இவர் பாடல்களிலும் இயற்கைப் பொருள்கள் அணிக ளாக மிகவும் குறைவான இடங்களிலேயே வந்துள்ளன. இவரும் முன்னுள்ள திருமுறையாசிரியர்களைப் போலவே மரபு வழிப்பட்டனவற்றையே குறிப்பிடுகிறார். இறைவனைப் புகழ்வதிலும் பண்ணமைப்பிலுமே இவர் தனி ஈடுபாட்டைச் செலுத்தியமை இதற்குக் காரண மாகும்.

## 1. 7. கருவூர்தேவர் பாடல்களுள் அணிநலங்களாக வந்த இயற்கைப் பொருட்கள்

### 1. 7. 1. நிலவகை :

குன்றாகச் சிவபெருமானை சரிடங்களில் உருவகப் படுத்துகிறார் சேந்தனார். மாணிக்கக் குன்றாக உருவகப் படுத்துகிறார். இவர், வெள்ளிக் குன்றாகவும், பவளக் குன்றாகவும் உருவகப்படுத்தியுள்ளார். சிவன் திருமேனி நீறணிந்தது, இல்லாதது அவை நிறம் பற்றி வந்தன. ஓரிடத்தில் கல்லலை மனத்திற்கு உவமையாக்குகிறார். இத்தகைய குறிப்புகள் சுந்தரர், மாணிக்கவாசகர், சேந்த னார் பாடல்களில் காணப்பெறுகின்றன.

### 1. 7. 2. நீர் நிலைகள்

கடல், அருவி எனும் இருவகையன மட்டும் உருவகங் களாக வந்துள்ளன. வினையும், பாசத்தையும் கடலாக ஓரிடத்தில் உருவகப்படுத்தியுள்ளார். கண்களிலிருந்து விழும் கண்ணீரை அருவியாக உருவகப் படுத்தியுள்ளார். தோற்றம் மேலிருந்து நீர்த்தாரை விழும் அமைப்பு நோக்கி அது உருவகமாகக் கூறப்பெற்றது. இவை மரபு வழிப்பட்டன. ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்களில் இவர் மட்டுமே அருவியைக் குறிப்பிடுகிறார். கண்ணீரைத் தாரையாக இல்லாமல் துளித்துளியா விழுவதையும் இவர் காட்டுகிறார். அதைக் கண்பனி அரும்ப என்று குறிப்பிடு

கிறார். பனித்துளியானது இலைகளிலிருந்தும் மலர்களி லிருந்தும் விழுவதை இவர் கண்ணீர்த் திவலைக்கு ஒப் பாக்குகிறார். இவரது இயற்கை ஈடுபாட்டை இது காட்டுகின்றது.

## 1. 7. 3. விண் இயற்கை

விண்ணியற்கைப் பொருள்களில் கதிரவன், மின்னல், இடி முதலியன உவமையாக வந்துள்ளன.

### 1. கதிரவன்

சிவனுக்கும் சிவன் சடைக்கும் கதிரவன் செந்நிறம் உவமையாக சரிடங்களில் வந்துள்ளது. இங்கு நிறம் ஒப்புமையாகச் சிவன் சடைபற்றிக் கூறும்போது வருகிறது. மற்றொன்றில் கதிரவன் ஒளி இருளைப் போக்கும் செயல் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. "அவனி ஞாயிறு போன்றருள் புரிந்து"[174] என்பது அவற்றுள் இரண்டாமது ஆகும். இத்தகைய உவமையைத் திருஞான சம்பந்தரும் மாணிக்க வாசகரும் பயன்படுத்துகின்றனர்.

### 2. மின்னல்

மாளிகைக்கு மாளிகையின் நிறத்திற்கு உவமையாக—நிற ஒப்புமையாக ஓரிடத்திலும், மகளிர் புருவத்திற்குக் கீற்றுப் போன்ற வடிவ ஒப்புமையாக ஓரிடத்திலும் மின்னல் உவமையாக வந்துள்ளது. மகளிரின் புருவத்திற்கு உவமையாக மின்னலைத் திருமுறையாசிரியர்களில் இவர் மட்டுமே குறிப்பிடுகிறார்.

### 3. இடி

முழவம் ஒலி செய்தல் இடியின் பேரோசை போன்றுளது என்னும் ஒரு குறிப்பு மட்டும் காணப்பெறு கிறது. திருஞான சம்பந்தரும் மாணிக்க வாசகரும் இத் தகைய குறிப்பைத் தந்துள்ளனர்.

### 1.7.4. கால இயற்கை

கால வியற்கையில் அந்தி மட்டும் ஈரிடங்களில் உவமை யாக வருகின்றது. சிவபெருமான் திருமேனியின் நிறத்திற்கு அந்தியின் நிறம் உவமையாகிறது. "அந்தி போல் உரு" 'அந்தி போன்றொளிர்திரு மேனி"[175] என்பன அவை

இவற்றை முன்னுள்ளோரும் பயன்படுத்துகின்றனர். இவை இவரது அழகியல் உணர்வைச் சுட்டுகின்றன.

### 1.7.5. உயிரியற்கை

#### 1.7.5.1. இயங்குயிர்கள்

இயங்குயிர்களில் நாயும் எருமைக்கடாவும் இரு இடங் களில் தனித்தனியே உவமைகளாக வந்துள்ளன. இவ் விலங்குகள் இரண்டும் அவருடைய தலைவன் மேல் அன்பில்லா நிலைமைக்கும், தலைவன் பற்றிய உணர்வின்றி இருந்த நிலைமைக்கும் முறையே ஒப்புமையாயின. எருமைக்கடா உணர்வின்மை பற்றி வந்த உவமையாகும். எருமைக்கடாவை இவர் மட்டுமே குறிப்பிடுகிறார்.[176]

#### 1.7 5 2. இயங்கா உயிர்கள்

மரம், செடி, கொடிகளாகிய தாவர உறுப்புகளின் மலர்களும் கனிகளும் இவர் தம் பாடலில் அணிகளாக வந்துள்ளன.

1. மலர் : சிவன் திருவடிக்கு நான்கிடங்களிலும் மகளிர் கண்களுக்கு ஓரிடத்திலும் மலர் உவமையாக வந்துளது. இவர் இவ்விடங்களில் "மலர்" எனும் பொதுச் சொல்லையே பயன்படுத்துகின்றார்.

சிவன் வாய்க்குக் குமுத மலரும், முகத்திற்குத் தாமரை மலரும், கண்களுக்குத் தாமரை மலரும், கண்டத்திற்குக் குவளை மலரும் உவமையாக முறையே ஒவ்வோரிடங்

களில் வந்துள்ளன. பெண்களின் கண்களுக்கும் குவளை மலர் உவமையாக ஓரிடத்தில் வந்துளது. பெண்களின் சிவந்த இதழுக்கு இலவ மலரின் செந்நிறம் உவமையாக ஈரிடங்களில் வந்துள்ளது. இவையாவும் நிறமும் பொலிவும் பற்றி வந்தன. இதயத்திற்குத் தாமரையின் மொட்டு கூறப் பெற்றுள்ளது. இது வடிவம் பற்றி வந்தது ஆகும்.

இவையன்றியும் "நீ ரோங்கி வளர்கமலம் நீர் பொருந்தாத் தன்மையன்றோ"[177] எனத் தாமரையின் இயல்பும் ஓரிடத்தில் உவமையாக வந்துள்ளது. ஒன்பதாம் திருமுறையாசிரியர்களுள் இவர் மட்டுமே மலர்களை அணி நலங்களில் மிகுதியாகப் பயன்படுத்துகிறார். இவையாவும் மரபு வழிபட்டனவே.

2. கனி : "கனியுமாம்" "கனியர்" எனுமிரு உருவகங்களே இவரால் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இறைவன் பழத்தின் இனிய சுவை போன்று இனிப்பவன் என்பதை அவை காட்டுகின்றன.

## 1.7.6. தீ இயற்கை

சிவபெருமான் திருமேனி நிறத்திற்குத் தீயின் நிறத்தை ஒப்பாக ஒரே இடத்தில் காட்டுகிறார். "தீவணன் றன்னை" என்பதது.

## 1.7.7. மணிகள்

சிவபெருமான் கண்டத்திற்கு நீலமணியின் நிறம் ஓரிடத்திலும் திருவாயின் நிறத்திற்குப் பவளத்தின் நிறம் மூன்றிடங்களிலும், முறுவலுக்கு முத்தின் நிறம் ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளன. இத்தகையன தேவார மூவராலும் குறிக்கப் பெற்றுள்ளன. இவை நிறம் பற்றி வந்த உவமைகளாகும். ஒன்பதாம் திருமுறையாசிரியர்களில் இவரே மிகையான இயற்கைப் பொருள்களை அணிகளாகப் பயன்படுத்தியுள்ளார்.

## 1.8. பூந்துருத்தி நம்பி காடவ நம்பி

இவர் தம் பாடல்களும் இயற்கைப் பொருள்கள் அணி களாக இரு இடங்களில் மட்டுமே வந்துள்ளன. "அளகமதி நுதலார்" "முத்தே" என்பன அவை. ஒன்று உவமை "பிறிதொன்று உருவகமாகும்", நுதலுக்கு பிறை மதி உவமையாக வந்துள்ளது. புதியன ஏதும் இல்லை. ஒன்பதாம் திருமுறையாசிரியர்களில் மிகக் குறைவான குறிப்புகளைத் தந்தவர் இவரேயாவார். தில்லையம் பெருமானையே பாடுதல் இவரின் குறிப்பாதலால் இவர் மிகையாக உவமைகளைப் பயன்படுத்தவில்லை.

## 1.9. கண்டராதித்தன்

விண்ணியற்கையில் மின்னலை ஓரிடத்தில் சிவ பெருமான் திருமேனிக்கு ஒப்புமையாகக் காட்டுகிறார். பிற குறிப்புகள் ஏதுமில்லை.

இயங்கா உயிர்களில் தாவரங்களில் இலைமட்டும் ஓரிடத்தில் வேலின் வடிவத்திற்கு உவமையாக வந்துள்ளது.

விலங்குகளில் மானின் பார்வை உமையம்மையின் பார்வைக்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. அவர் தன்னிலைக்கு நாயை ஓரிடத்தில் உவமையாகக் காட்டு கிறார். இத்தகையன முன்னர்கள் காட்டியனவே ஆகும். ஒன்பதாம் திருமுறையில் மிகக்குறைந்த குறிப்புகள் தந்த வருள் இவரும் ஒருவர் ஆவார். காலவியற்கை, தீவியற்கை முதலானவை ஏதும் வரவில்லை.

## 1.10 வேணாட்டிகள்

இவர் விலங்குகளில் பசுவையும் நாயையும் குறிப்பிடு கிறார். கன்றைப் பிரிந்த பசு கதறிப்பதறுகின்ற காட்சியைத் தன் நிலைக்கு ஒப்பாக ஓரிடத்தில் காட்டு கிறார். இத்தகைய உவமையை மாணிக்கவாசகர் குறிப்

பிடுகிறார். தன்னிலையை — இறைவனை தலைவனை உணராத தன்னிலையைக் கண்டு, தன்னை நாயினுங் கடையவனாக ஒப்பிடுகிறார். இது பக்தி இலக்கிய மரபாகக் கூறலாம். இவரும் இத்திருமுறையில் மிகக் குறைந்த குறிப்புகளைத் தந்தவருள் ஒருவராவார்.

வாழையின் இலையையும் வேம்பின் இலையையும் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். அவற்றின் கசப்புத்தன்மை இங்கு உவமையாக வந்துளது.

## 1.11. திருவாலிய முதனார்

பதித்த மணிக்கு இரவியின் கதிர் ஓரிடத்தில் உவமையாக வந்துள்ளது. இது ஒன்றே விண் இயற்கை பற்றியதாகும். இது நிறம் பற்றி வந்ததாகும். இயங்குயிர்களுள் பறவைகளில் அன்னத்தின் நடையும், குயிலின் குரலும், முறையே ஒவ்வோர் இடங்களில் மகளிரின் நடைக்கும், மொழிக்கும் உவமையாக வந்துள்ளன.

தாவர இயற்கையில் கொடியும், மலரும், கனியும் உவமைகளாக வந்துள்ளன. மகளிரின் இடைக்குக் கொடி ஓரிடத்திலும், மகளிரின் வாயிதழ் நிறத்திற்குத் தொண்டைக் கனியின் நிறம் ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளன. மலர் என்று பொதுவாக மட்டுமே இவர் குறிப்பிடுகிறார். சிவபெருமான் திருவடிக்கு உவமையாக நான்கிடங்களிலும் மகளிரின் கண்களுக்கு ஓரிடத்திலும் மலர் உவமையாகக் கூறப்பெற்றிருக்கிறது. பவளத்தின் நிறமும், தழலின் நிறமும் ஒவ்வோரிடங்களில் சிவபெருமான் திருமேனி நிறத்திற்கு உவமையாயின. வெண்ணீறு பூசிய திருமேனிக்கு பால்நிறம் உவமையாகக் கூறப்பெற்றுள்ள இடம் ஒன்றுளது. இவருடைய பாடலின் இனிமைக்குப் பாலை உவமையாக ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். உணவொடு மருந்தாம் தன்மை பாலுக்குண்டு எனும் தன்மை இங்குக் கருதத்தக்கது.

## 1.12. புருடோத்தம நம்பி

உயிரியற்கையில் இவர் இயங்கா உயிர்களை மட்டும் குறிப்பிடுகிறார். அவற்றுள்ளும் மலர்கள் மட்டுமே உள்ளன. சிவபெருமான் திருவடிக்கு உவமையாக மலரை ஈரிடங்களினும், கண்களுக்கு ஓரிடத்திலும் தன்னுடைய/வாசகம்/சொல்லுக்கு ஓரிடத்திலும் மலர் உவமையாக வந்துள்ளது. மேலும் தாமரை மலர் சிவன் முகத்திற்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. "பங்கயம் புரை முகம்" என்பதது. முகத்திற்கு உவமையாக வாய்க்குக் கனியின் நிறம் ஓரிடத்தில் உவமையாக வந்துள்வது அனைத்தும் மரபு வழிப்பட்டனவே ஆகும்.

இயங்குயிர்களில் கயல் மீன் மட்டும் ஒரே இடத்தில் மகளிரின் கண்களுக்கு உவமையாக வந்துளது. "செங்கயல் புரைகண்ணிமார்கள்" என்பதது.

## 1-13 சேதிராயர் :

ஒன்பதாம் திருமுறையாசிரியர்களுள் மிகக் குறைந்த அணிகளைத் தந்தவருள் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவர்/தலைவிக்குக் கொடியையும் இளம்பிடியை உவமை யாக்கிக் கூறுகிறார். பிற எக் குறிப்பும் காணப் பெற வில்லை.

## 1. 14 திருமூலர் :

1. 14. 1. நிலவகையில் பசுமண், சுட்டமண், ஆற்றில் ஏற்பட்ட மேடு, கடல் மணல் முதலியன உவமைகளாக வந்துள்ளன.

நிலவகைமை

மண் : பசு மண்கலம் நீரில் விழுந்தால் மீண்டும் மண்ணாக மாறுகிறது. சுட்ட மண்கலமனால் நீரில் விழுந்தால் அது அழியாது நிற்கும். பசுமண் மழைநீரால் கரைந்து

மீண்டும் மண்ணாகும். என்பதைத் திருவருள் வழிநில்லாத உடம்பு மீண்டும் மீண்டும் பிறப்பெடுக்கிறது எனும் கருத்துக்கு உவமையாகக் கூறியுள்ளார்.

ஆறிடுமேடு : ஆறிட்ட நுண்மணலை ஆறே சுமக்கும் நிலையை ஓரிடத்தில் இவர் வினைப் பயன்களை அவரவர் களே நுகர்வர் என்பதற்கு உவமையாகக் கூறியுள்ளார்.

"ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை"179

என்பதது. கடல் மணலை ஓரிடத்தில் அண்டங்கள் அளவில்லாதன என்னும் அளவிடற்கரிய எண்ணிக்கையை உணர்த்த உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.

"பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகடல் ஏழின் மணல்அள வாக"180

என்பதது. மண்ணின் கரையும் இயல்பும், மணல் அளவிடற்கரிய தன்மையும் இங்கு உவமையாக்கப் பெற்றுள்ளன.

### 1. 14. 2. நீர்நிலைகள்

1. கடல் : இறைவன் ஆற்றல், பேரின்பம், அருள் முதலியனவற்றையும் துன்பம், நரகம், பாவம், வினை, ஆசை, உள்ளத்தின் அன்பு, வஞ்சனை, காமவெகுளி ஆகியனவற்றையும் மயக்கங்களையும் இவர் கடலாகக் காட்டியுள்ளார்.

இறைவனருளை மூன்றிடங்களிலும், இறைவனை ஓரிடத்திலும், பேரின்பத்தை ஈரிடங்களிலும் துன்பத்தை ஓரிடத்தும் வினையை நான்கிடங்களிலும் நரகத்தை ஓரிடத்தும் பாவத்தை ஓரிடத்தும், ஆசையை ஓரிடத்தும் உள்ளத்தின் அன்பை ஓரிடத்தும், வஞ்சனையை ஓரிடத்தும் காமவெகு மயக்கங்களாகிய குற்றங்களை ஓரிடத்தும்,

பிறவியை ஈரிடங்களிலும் கங்கையை ஓரிடத்தும் கடலாக உருவகப்படுத்தியுள்ளார். திருமுறையாசிரியர்களில் இவரே கடலை மிகுதியான இடங்களில் உருவகமாகக் காட்டுகிறார்.

உவாக்காலத்துக்கடலை ஊழிக்காலத்துப் பெரு வெள்ளத்திற்கு ஓரிடத்தும், திருமாலின் நிறத்திற்குக் கடலின் நிறத்தை ஓரிடத்தும் உவமையாகக் கூறியுள்ளார். உலகமான குடும்பத்தையும் ஓரிடத்தில் கடலாக உருவகப் படுத்தியுள்ளார்.

பிறவியைக் கடலாக உருவகப்படுத்துவது மட்டுமில்லா மல் ஓரிடத்தில் கடலலையாகவும் உருவகப்படுத்தியுள் ளார், மீண்டும் மீண்டும் தோன்றுதலாகிய நிலை மீண்டும் மீண்டும் தோன்றும் பிறவிக்கு ஒப்புமை யானது. கடலின் கரை ஓரிடத்தில் இறைவன் திருவடியாக உருவகப்படுத்தப்பெற்றுள்ளது. கடல் உப்பும் ஓரிடத்தில் உயிர் சிவத்துள் அடங்கும் உண்மையை உணர்த்த உவமை யாயிற்று. கடலின் வலிமை நீர்நிறைவால் வலியால் அமைவ தாகும். இது மதியின் வலியால் அமையும் மானுடர் வாழ்க்கைக்கும் ஓரிடத்தில் உவமையாகக் காட்டப் பெற் றுள்ளது.

"மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை
நிதியின் பெருவலி நீர்வலி தானே"[181]

கடலில் அகப்பட்ட கட்டை கடலலையில் அலைவது உடலை உண்மையென உணர்வோரின் நிலைக்கு உவமை யாக ஓரிடத்தில் கூறப்பெற்றுள்ளது.

"உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள் ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே"[182]

என்பதது. கடலின் நிறம், கடலை, கடல் நீர்வளம், கடலாழம் அவிழற்கரிய பரப்பு, கடல் உப்பு, நிறைமதி

நாளின்கண் கடலின் நிலை எனும் இவையாவும் இவரால் உவமையாகவும் உருவகமாகவும் வந்துள்ளன. மிகப் பல வகை வகையில் கடலை முழுமையாக நோக்கியவர் திருமுறையாசிரியர்களில் இவர் ஒருவரே எனலாம். இவர் கடலின் நிறத்தைக் காட்டிலும் பிறவற்றிலேயே தன் கவனத்தை மிகுதியும் செலுத்தியுள்ளார். இன்ப துன்பம், பிறவி, அருள் முதலியவற்றிற்கே அவற்றை ஒப்புக்காட்டு கிறார்; உருவகப்படுத்துகிறார்.

2. ஆறு: சிவபெருமானின் அருளை / திருவடியின் பத்தை ஆறெனக் கூறுகிறார். கழுமணியாறு என அதைக் குறிப்பிடுகிறார். ஆயினும் இல்பொருள் உவமையாக கூறப்பெற்றுள்ளது. ஆற்றின்கண் காணப்பெறும் நுரை மாசு, தோன்றுமிடம், புகுமிடம், கரை முதலியன இல்லாதது என இவ்வாற்றின் தன்மையைக் குறிப்பிடு கிறார். இது குறியீடாக அமைந்துள்ளது.

"நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை எந்தை கழுமணி யாறே"[182]

என்பதது.

3. அருவி: "மலையார் சிரத்திரை வானீர் அருவி..."[183] என்பது அருவி பற்றியது. இங்கு மலை நடுநாடியாகும். அருவி, அமுதத்தாரையாகும். இதுவும் குறியீட்டுச் சொற்களால் அமைந்தது. அருவியை அமுதப் பெருக்காகக் காட்டும் இடம் இவர் பாடல்களுள் இரண்டுள. அருவியின் மேலிருந்து இழியும் நீரொழுக்கு இங்கு உருவக மாகக் காட்டப் பெறுதற்குக் காரணமாயிற்று. யோக நெறியை உணர்த்துபவராதலால் இத்தகையன இவர் பாடல்களுள் காணப் பெறுகின்றன.

4. குளம்: கருக்குழியையும் (2 இடங்கள்) குறிப் பால் பிறப்பு ஆசை நிறைந்த மனத்தையும் இவர் பாசி நிறைந்த குளமாக உருவகப்படுத்தியுள்ளார். ஆசை

என்பதோடு அங்கு காம வெகுளி மயக்கங்களும் ஒன்றாகச் சேர்த்துக் கூறப்பெற்றுள்ளது. உள்ளத்தை பிறிதோரிடத்தில் குளமாக உருவகப்படுத்தியுள்ளார்.

கடலருகிலுள்ள நன்னீர்க் கிணறு ஓரிடத்தில் கூறப் பெற்றுள்ளது. உடலில் காணப்பெறும் அமுதநீரை (சிவக்குடிநீர்) அவ்வாறு உருவகப்படுத்துகிறார். அருள் திருமேனியுடையாரை சிவஞானத்தேன் நிறைந்த கூவலினையும் குளத்தையும் ஒப்பர் என்றொரு குறிப்பும் உளது. அமுதாரை தங்குமிடம் கழுத்து என்று கூறுவதோடு அதைக் கிணறு என உருவகப்படுத்துகிறார். பெரும் பான்மையும் மிக நுண்ணிய நோக்கில் அமைந்தன. இவற்றை உருவகங்கள் என்பதினும் குறியீட்டுச் சொற்க ளால் அமைந்தன என்று கூறுவது பொருத்தமானது.

5. நீர்ச்சுழி :

பிறவியைச் சுழியாக ஓரிடத்தில் உருவகப்படுத்தியுள் ளார். பிறர் தன் மனையாளிடம் பெறும் இன்பத்திற்குச் சுனை நீரையும் பிறமனையாளிடம் பெறும் தவற்றொழுக் கத்திற்குச் சுனைநீர்ச்சுழியையும் ஓரிடத்தில் உவமையாகக் கூறியுள்ளார். நீர்ச்சுழியிலகப்படுவார் நீந்துதல் அறிந்தா ராயினும் தப்புதல் அரிது; பிறரும் தப்பவித்தலரிது. அது துன்பமே விளைக்கும். அத்தன்மையே இங்கு பிறன்மனை விழைவுக்கு உவமையானது—அதற்கான பாடல்,

"மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போல் சுழித்துடன் வாங்கும்
கனவது போலக் கசிந்தெழும் இன்பம்
நனவது போலவும் நாடவொண் ணாதே" 184

6. நீர்க்குமிழ் : நீரில் தோன்றி நீரில் அழியும் நீர்க் குமிழி, உடலானது திருவருளால் அண்டத்தமைந்துள்ள மெய்யாகிய தத்துவங்களின் இனமாய்த் தோன்றுவதால்

அவ்வம்மெய்களில் அடங்கிவிடும் என்னும் கொள்கைக்கு உண்மைக்கு உவமையானது. உடல் நுண்மையமாய்ப் பிரிந்து நுண்மெய்க்கண் அடங்குதலை இவ்வுவமை தெளிவு படுத்துகிறது. பெரும்பாலும் நீர்க்குமிழி நிலையாமைக்கே உவமையாகக் கூறப் பெறுகின்றது. இவர் மட்டும் நீரில் தோன்றி நீரில் மறையும் தன்மையை ஒப்புக்காட்டு கின்றார். அப்பாடல்,

"அழிகின்ற சாய புருடனைப் போலக்
கழிகின்ற நீரில் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே" 185

நீரில் எழுத்து இவர் பாடல்களுள் இரு இடங்களில் உவமையாக வந்துள்ளது.

## 6.7 உலகியற்சுட்டுப் பொருள்

அழிவது என்பதையும், சிவனருளின் மெய்ம்மை ஆயினும் சிவவுணர்வின் சிறப்பினை அறியானாயின் அவையாவும் அழியும் என்பதையும் இவ்வுவமை விளக்கு கின்றது.

நீர்நிலைகள் பற்றிய செய்திகளில் யாவும் உவமை உருவமாக வந்த இயற்கைப் பொருள்களை இவர் குறியீட்டு நிலையில் பயன்படுத்தியுள்ளார் எனலாம். அனைத்தும் இறையுண்மை, உலகியல் உண்மை உணர்த்து வனவாக உள்ளன. யோக நிலை பற்றியனவற்றையும் இவ்வகை அமைப்பில் விளக்குகிறார். இவருடைய யோகப் பயிற்சியும் யோக நெறியும் இதற்குக் காரணமாகலாம்.

## 1.14.3 விண் இயற்கை

1. வான் : சிவனுடைய திருமேனி நிறத்திற்கு வானை சரிடங்களில் உவமைப்படுத்துகிறார்.

வளி, மேகம், மின்னல், வானவில், இசை முதலியன வானத்தில் தோன்றுகின்றன. இவற்றிற்கெல்லாம் வானம் இடம் கொடுக்கிறது. அவ்வாறு இடம் கொடுப்பினும் அவற்றைத் தொடக்குறாது வான் தனித்தே நிற்கிறது. வானின் இத்தன்மை இறைவன் உயிர்களில் கலந்திருப்பினும் அவற்றின் வேறாய் நின்று பேரொளியாய் விளங்குகிறான் என்னும் உண்மைக்கு ஒப்புமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. இறையியல்பை இது உணர்த்துகிறது. இவரே இத்தகைய உவமையைப் பயன்படுத்தியுள்ளார்.

"வளிமேக மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பில் திகழ்தரு வாறுபோல்
களிமொளி யாறுங் கலந்துடன் வேறாய்
ஒளியுரு வாகி ஒளித்துநின் றானே"[186] என்பதது.

2. கதிரவன் : அனைத்து ஒளிக்கும் ஒளிதரும் சூரியனாகச் சிவப் பேரொளியை ஈரிடங்களில் குறிப்பிடுகிறார். சிவன் மேனிக்கு கதிரவன் ஒளியை ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். சூரியன் ஒளி இருளை நீக்கும் செயல் சிவன் மலத்தை நீக்கும் செயலுக்கு ஒப்புமையாக ஐவர் ஐந்திடங்களில் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

கதிரவன் காலையில் தோன்றி மாலையில் மறையும் செயல் உயிரது நிலையாமைக்கு ஒப்புமையாகக் காட்டப் பெற்றுள்ளது. கண்ணனையும் கதிரோனையும் ஒரு பாடலில் ஒப்பிட்டுள்ளார்.

தற்குறிப்பேற்ற வகையில் சூரியனை ஆசிரியர் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். சூரியன் மேருமலையை வலம் வருவது சிவபெருமானிடமிருந்து ஞானொளி பெறுதற் பொருட்டே ஆகும் என்று தன் குறிப்பை அதற்கு ஏற்றிச் சொல்கிறார். சிவபெருமான் எல்லா ஒளிப் பொருள்களுக்கும் ஒளி தருகிறான் என்பதைச் சிறப்பிக்க இக் குறிப்பைக் காட்டுகிறார்.

உவமையாகக் காட்டியுள்ளாமல் இவரது கூர்த்த நோக்கை உணர்த்துகிறது.

6. மழை : இவர் மழையை அமுதொடு ஒப்பிடுகிறார். மழையால் விளையும் பயன் உலக உயிர்களைக் காத்தல் பற்றி இக்கருத்து எழுந்தது. சிவன் திருவருளை பேரின்பத்தை மூன்றிடங்களிலும் கண்ணீரை மழையொடு ஒப்பிட்டுக் காட்டியுள்ளார்.

இவை யாவும் மழை விளைபயன் பற்றி பயன் கருதாது வழங்கல் பற்றி எழுந்த உவமைகள் எனலாம்.

## 1.14.4. காலவியற்கை :

இறைவன் திருமேனி நிறத்திற்கு அந்திக் காலத்தையும் சக்தியின் திருமேனி நிறத்திற்கு இருளையும் முறையே ஓரிடத்தும் ஈரிடங்களிலும் ஒப்புமையாகக் காட்டியுள்ளார்.

இவையன்றியும் மறப்பு, அறியாமை, மலங்களை இவர் இருள் எனப் பத்திடங்களில் உருவகப்படுத்தியுள்ளார். இவை யாவும் பக்தி இலக்கிய மரபே ஆகும். அந்தியின் நிறத்தைத் தாமரை நிறத்துக்கு ஒப்பிடும் குறிப்பு ஒன்று மட்டுமே அந்தியியற்கையைக் குறித்தாகும்.

## 1. 14. 5. தீ இயற்கை :

சிவன் திருமேனி நிறத்திற்கு தழலின் நிறத்தை ஒப்பிடுதல் பழங்காலந்தொட்டு வரும் மரபு. இவரும் அம்மரபைத் தொடர்கிறார். இத்தகையன இவர்தம் பாடல்களுள் ஆறிடங்களில் காணப்பெறுகின்றன.

1. 14. 6. உயிரியற்கை :

1. இயங்கா உயிர் :

1. மரம் : வேய் மட்டும் ஒரே ஒரு இடத்தில் உமை யம்மையின் தோளுக்கு உவமையாக வந்துள்ளது.

2. வேர் : இவர் பாசத்தை ஓரிடத்தும், மூலாதா ரத்தை ஓரிடத்தும் வேராக உருவகப்படுத்தியுள்ளார். வேரின் தன்மையாகிய ஊன்றிநிற்றலும் பரவலுமாகிய தன்மைகள் இத்தகைய உருவகத்திற்குக் காரணமாயின.

3. கொம்பு, கொடி : உமையம்மையைக் கொம் போடு உவமைப்படுத்தும் இடமொன்றுளது. உமையைக் கொடியாய் உருவகமாக்கிக் கூறும் இடம் ஐந்திடங்கள் உள்ளன. உமையம்மையின் இடைக்கு கொடி ஈரிடங்களில் உவமையாகக் காணப்பெறுகின்றது. இவையாவும் சங்க இலக்கிய மரபைச் சார்ந்தன.

4. தளிர் : இப்பாடலுள் ஓரிடத்தில் உவமையின் மேனி தளிரொடு ஒப்புக்காட்டப் பெற்றுள்ளது.

தளிரைக் கொண்டு இவர் உடம்பின் நிலையாமையை ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். தளிரின் வாடும் செயல் பிறிதொரு இடத்தில் துன்பமுறும் செயலுக்கு ஒப்புக் காட்டப் பெற்றுள்ளது.

இவர், அழகில் ஈடுபடுவதிலும் அவற்றின் வாழ்வில் நுணுக்கமாக ஈடுபடுதலை இது காட்டுகிறது.

5. அரும்பு : மகளிரின் முலைக்கும் சக்தியின் முலைக்கும் ஈரிடங்களில் இது உவமையாக வந்துள்ளது. இவர் மேலும் திருவருள் தோன்றுதலுக்கு மொட்டை உருவகமாக்கிறார். இது தோன்றுதல், பின் மலர முன் வளர்தல் எனுமியல்புக்குப் பின் பயனின் முன் அடிப் படைக்குப் பொருந்துவதாக உள்ளது.

6. மலர் : நெஞ்சை மலராக நான்கிடங்களிலும் கையை ஓரிடத்தும், மலராக உருவகப்படுத்தியுள்ளார். மலர், போது, பூ எனும் சொற்களால் இவர் நெஞ்சைக் குறிப்பிடுகிறார். மேலும் இறைவியை மலராக ஓரிடத்து உருவகப்படுத்தியுள்ளார். பூவின் வண்ணத்தை அம்மையின் வண்ணத்திற்கு ஒப்பாகக் கூறும் இடமொன்றும் உள்ளது.

இவையன்றி மலரும் மணமும் ஒன்றியொன்று கலந்துள தன்மை இவரால் உயிர்களில் இறைவன் விளங்கும் இயல்புக்கு ஒன்பதிடங்களில் உவமை கூறப்பெற்றுள்ளது. இத்தகையன மரபு வழியாக பக்தி இலக்கியத்தில் சிறப்பாகக் கூறப்பெறுவன ஆகும்.

தாமரை : இதன் நிறத்திற்கு அந்திக் காலத்தின் செம்மை நிறத்தை இவர் ஒப்பிடுகிறார். இது இவரது அழகியலுணர்வுக்கு ஓர் சான்றாகும்.

தாமரை மலர் சிவன் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்தும் முகத்திற்கு ஓரிடத்தும் உவமையாக வந்துள்ளது.

சிவபெருமான் திருவடியாக ஏழிடங்களிலும் அன்பர்களில் நெஞ்சாக பதினொரு இடங்களிலும் தாமரை மலர் உருவகமாகக் கூறப்பெற்றுள்ளது. அவை யாவும் மரபு வழிப்பட்டதே.

ஆறு ஆதாரங்களை இவர் தாமரையாக உருவகம் செய்துள்ளார். யோகநெறி நின்ற இவர் மட்டும் இவ்வுவமையைப் பயன்படுத்துகிறார்.

குவளை : முக்தியின் கண்களுக்குக் குவளை உவமையாக வந்துள்ள இடம் ஒன்று மட்டும் உள்ளது. மலரும் மணமும் கொண்டு இறையியல்பை முன்னர் மலர் எனும் பொதுச்சொல் வழி உணர்த்திய இவர் குவளை மலரும் மணமும் கொண்டு உணர்த்துகிறார், பொதுவாக திருமுறை

யாசிரியர்கள் மலர் எனும் பொதுச் சொல்லால் மட்டும் இவ்வியல்பை உணர்த்துகின்றனர். இவர் மட்டுமே அவ்வியல்புக்கு குவளை மலரையும் மணத்தையும் பயன் படுத்தியுள்ளார்.

இலவம் : பெண்ணின் வாயிதழின் நிறத்திற்கும் உமையம்மையின் திருமேனி நிறத்திற்கும் இலவ மலரின் நிறம் உவமையாக வந்துள்ளது. உமையின் திருமேனி நிறத்திற்குச் செம்மை நிறத்தை இவர் குறிப்பிடக் காரணம் சிவனொடு கலந்ததாகும். குமுதமலர், முத்து மணியின் நிறத்திற்கு உவமையாக வந்துள்ளது.

இயற்கைப் பொருட்கு இயற்கை உவமையாக வந்த தாக இதைக் குறிப்பிடலாம், இத்தகைய குறிப்பு இது வொன்றே காணப்படுகிறது.

காயாம்பூ நிறத்தைச் சக்தியின் நிறத்திற்கு ஓரிடத்தில் உவமையாக இவர் காட்டியுள்ளார். காயாம்பூவின் கரிய நிறம் இங்கு ஒப்புமையாகக் கரட்டப்பட்டுள்ளது.

இவர் பெரும்பாலும் மலரை நெஞ்சம், இறைதிருவடி ஆகிய இவற்றுக்கு உருவகப்படுத்துவன மிகுதி. நிற உவமைகளும் பல வந்துள்ளன.

7. கனி : இவர் பொதுச்சொல்லால் அஞ்செழுத்தைக் கனியாக இரு இருடங்களில் உருவகப்படுத்தியுள்ளார். கனிதரும் பயன்பற்றி இங்கு அது உருவகமாக வந்தது.

எட்டிக்கனி : நல்லறம் செய்யார் செல்வத்துக்கும் மகளிரின்பத்தின் இழிவுக்கும் உலக இன்பங்களின் (இச்சைகளின்) இழிவுக்கும் இக்கனி ஒப்புமையாகக் காட்டப் பெற்றுள்ளது. காண்பதற்குக் காட்சியளவில் இக்கனி அழகாய் இருப்பினும் கசப்பாம் தன்மையும் உடலுக்குத் தீங்குதரும் இயல்பையும் பெற்று விளங்குவதால் இக்கனி அம்மூன்று செய்திகளுக்கு உவமையாயிற்று. ஈயார் செல்வத்துக்கு எட்டியைக் கூறுதல் பழமரபு.

மனைவிதரும் இன்பத்திற்குப் பலாப்பழமும் பிறன் மனையாளிடத்துப் பெறும் இன்பத்திற்கு ஈச்சம்பழமும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. இவை அன்றியும் முறையே அவற்றுக்குத் தேமாங்கனியும், புளிமாங்கனியும் உவமை கூறப்பெற்றுள்ளன. இனிமையும் புளிப்பும் முறையே அவற்றுக்குக் காரணமாயின.

சிவபெருமானை விளாம்பழமாக ஓரிடத்தில் கூறியுள்ளார். அதன் உணவுத் தன்மையும் மருந்தாம் தன்மையும் கருதி, அது உருவகமாகச் சிவபெருமானுக்குக் கூறப்பெற்றுள்ளது. விளாம்பழமே அன்றி நெல்லிக்கனியாகவும் ஓரிடத்தில் உருவகப்படுத்தியுள்ளார். அதன் அமுதத் தன்மை நோக்கி அவ்வாறு அது உருவகப்படுத்தப் பெற்றுள்ளது.

கனிகளின் இனிமையும் பயனுமாகிய செய்திகள் இங்குப் பெரும்பான்மையும் உருவகத்திற்குப் பயன் பெற்றன. இத்தன்மையன்றி புளியம் பழத்தின் இயல்பும் கூறப்பெற்றுள்ளது. புளியம்பழம் பிறபழங்களிலும் வேறுபட்டது. அதில் ஓடும் பழமும் ஒன்றையொன்று தொடாததாகக் காணப்பெறும். இவ்வியல்பு உலகியலில் பற்றின்றியிருக்கும் மெய்யடியார் இயல்புக்கு உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.

இவ்வுவமையும் உருவகங்களும் இவரின் கூர்த்த நோக்கினை உணர்த்துகின்றன.

வித்து : இறைவனை இரு இடங்களில் வித்தாக உருவகப்படுத்தியுள்ளார். வித்துதான் மரம், செடி, கொடி முதலானவற்றின் ஆதாரமாகும். உயிர்களின் ஆதாரமாய் விளங்குபவன் சிவன் என்பதை உணர்த்த அவ்வாறு உருவகங்கள் வந்துள்ளன.

நெல் : நெல்லின் உறுப்புகளாகிய உமி, தவிடு, முளை என்பன முறையே ஆணவம், மாயை, கன்மம் என்பனவற்

றிற்கு உவமையாயின. ஆருயிர் தன்னை உணரின் சிவப் பேறு பெறலாம். தன்னை உணர வேண்டில் ஆணவம் முதலான மலங்கள் நீங்குதல் வேண்டும். இதை உணர்த்த உமி, தவிடு, முளை ஆகிய இவை நீங்கி அரிசி வெளிப் படுதல் இங்கு உவமையானது. பலநெல்லாம் விளைவுகள் ஒரு நெல்லில் அடங்கியிருத்தல் போல உயிர்கள் எல்லாம் சிவத்தில் அடங்கியுள்ளன. இது புதிய உவமை.

சிறிய அளவினைக் குறிப்பதற்காக இவர் பாடல்களில் தினை, எள் மிளகு, எனும் மூன்று பொருள்கள் தனித்தனி யாக மூன்றிடங்களில் உவமையாக வந்துள்ளன. தினையையும், எள்ளையும் திருமுறையாசிரியர்கள் பெரும் பான்மையோர் அளவிற் சிறியத் தன்மைக்கு உவமையாகப் பயன்படுத்தியுள்ளார். இவர் மட்டுமே மிளகை அத் தன்மைக்கு உவமையாகக் காட்டுகிறார்.

நெருஞ்சிலைத் துன்பநெறிக்கு உவமையாக இவர் குறிப்பிடுதல் இவர் மட்டுமே காட்டும் புதிய செய்தியாகும். நெருஞ்சில் உடலைக் குத்தித் துன்புறுத்தும் இயல்பு இங்கு உவமையாக்கப் பெற்றுள்ளது.[187]

"நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெருஞ்சில்முட் பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாயகி லாவே"[187]

என்ற பாடலில் அக்கருத்து விளக்கம் பெறுகிறது.

இங்கும் எல்லா உவமைகளும் அவ்வவற்றின் இயல்பு களை நுண்ணிதின் உணர்ந்து எழுந்ததாகும். இவையும் அவரது கூர்த்த நோக்கைப் புலப்படுத்துகின்றன.

1. பறவைகள் ; பறவைகளில் குயில், மயில், கருடன், சிலந்தி, வண்டு, விட்டில்பூச்சி கொக்கு, கிளி, காக்கை, தேனி, அன்னம், ஈ, ஆடு என்பன அணிநலங்களில் வந்துள.

இவையன்றி வரும் பறவைகள் குறியீட்டுச் சொற்களாக அமைந்துள்ளன. உவமை, உருவகம் முதலிய அணிகளில் வருவனவே இங்கு ஆய்வு கொள்ளப் பெறுகின்றன.

மகளிர் மொழிக்குக் குயிலும், பாதத்தின் மென்மைக்கு மயிலின் இறகும் முறையே ஒவ்வோரிடங்களில் உவமைக ளாக வந்துள்ளன. இவர் பாடல்களில் அளவிற் சிறிய தன்மைக்கு ஈயின் தலை உவமிக்கப் பெற்றுள்ளமை புதிய தாகும்.

"இரவலர்க் கீத்தலை யாயினும் ஈயா"[188]

என அதைக் குறிப்பிடுகிறார்.

2. கருடன் : நெஞ்சத்தாமரையில் சிவனிருந்தும் நினையாதவர்க்குப் பனையின் கண் இருக்கும் பருந்து உவமையாக வந்துள்ளது. அது பனம்பழத்தை நினையா மல் வேறு கீழேயுள்ள இருந்த பொருள்களை விரும்புகிறது. அத்தன்மையே இங்குஉவமையானது.

"பனையுள் இருந்த பருந்தது போல
நினையா தவர்க்கில்லை நின்இன்பந்தானே"[189]

என்ற பாடலில் அவ்வுவமை வந்துள்ளது.

கருடன் உருவினைக் கருதும் அளவிலேயே விடம் தீர்தல் என்னும் செயல் சிவகுருவின் முன் மலம் மறையும் செயலுக்கு ஒப்புக்காட்டப் பெற்றுள்ளது. மற்றொரு இடத்தில் கருடனது நோக்கு சிவனுக்கு ஒப்பிடப் பெற் றுள்ளது.

விண்ணிடை மிகச் சேய்மையினின்றும் மண்ணிடை மிக நுண்ணிய பொருளையும் குறிக்கொண்டு நண்ணிக் கைக் கொள்ளும் தன்மை இங்கு ஒப்புமையானது.

கருடனது செயல்களே இங்கு உவமையாக வந் துள்ளன.

சிலந்தியும் இறைவனோடு ஒப்புசெய்யப்பெற்றுள்ளது. சிலந்தி வலையமைத்து அதிலிருந்து கொண்டே அதில் விழும் பூச்சிகளை உண்ணுதல், சிவபெருமான் உயிர்களுக்கு உடம்பளித்து அவ்வுடம்பிலிருந்து கொண்டே ஐம்புலனின் பங்களை அழிக்கின்ற செயலுக்கு ஒப்புமையானது இதுவும் புதிய உவமையாகும்.

மலர்களிலிருந்து தேன்தேடும் வண்டின் இயல்பினை அதன் முயற்சியினை ஓரிடத்தில் காட்டுகிறார். அன்பர்கள் பெருந்தேனாகிய இறையடி தேனை நுகர்தற்கு ஒப்புமையாயிற்று.

இருவினைத் துன்பத்தினை அறியார், அதனுள் அழுந்தி அழியும் இயல்புக்கு விட்டில்பூச்சி தீயில் விழும் செயலை ஒப்புமை காட்டியுள்ளார்.

மடைவாயில் கொக்கு எவ்விதச் சலனமும் இன்றி தன் கருத்தையே முன் வைத்துக் காத்திருத்தல் யோகப் பயிற்சியில் புருவ நடுவாகிய இடைவாசலை இனி நோக்கியிருக்கும் செயலுக்கு ஒப்பு காட்டப்பட்டுள்ளது. மிக நுண்மையான உவமை.

"கடைவாச லைக்கட்டி காலை எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயில் கொக்குப்போல் வந்தித் திருப்பார்க்கு
உடையாமல் ஊழி இருக்கலு மாமே"190

என்ற பாடலில் அதைக் காணலாம்.

சிவபெருமானை மூவர்க்கும் தலைவனாக எண்ணாது, அவருள் ஒருவனாய் எண்ணுவார் பெறும் மிக்க துன்ப நிலைக்குப் பூனையால் கிழிக்கப்பெறும் கிளியின் நிலையை ஒப்பிடுகிறார்.

சிவன் உயிர்களைத் தந்தையிடத்தும் தாயிடத்தும் புகுத்தலை குயிற்குஞ்சு தன் முட்டையைக் காக்கைக் கூட்டில் இடும் செயலொடு ஒப்பிடுகிறார். இவ்வுவமை உயிர்களெல்லாம் இறைவன் மக்களே என்பதை இது தெளிவுபடுத்துகிறது.

"குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட் டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்"191

என அவ்வுவமையைப் பாடுகிறார் அவர்.

உயிர்கள் செல்வத்தையும் உடம்பையும் அரும்பாடு பட்டுப் பாதுகாத்தல் தேனீ பாடுபட்டுத் தேடித் தொடுத்த தேன்கூட்டை உவமையாகக் காட்டுகிறார் தேன்கூட்டில் உள்ள தேனை அத்தேனீக்களே உண்பதில்லை. வலியார் பிறரே கொள்கின்றனர். அதுபோல உடம்பும் செல்வமும் அழிவனவே என்பதை உணர்த்துகிறார்.

"பாலினின்றும் நீரைப் பிரிக்கும் அன்னத்தின் இயல்பு உயிர்களினின்றும் மலங்களைப் பிரிக்கும் சிவன் இயல்பு ஒப்புமையாகக் கூறப்பெற்றுள்ளது.

குயிலின் குரலும் மயிலிறகின் அழகும், ஈயின் தலையும் தவிர்த்த பிறயாவும் பறவைகளின் செயல்கள் ஆகும்.

கருடன் பார்வை விடம் நீக்கும் இயல்பு, சிலந்தி பூச்சிகளைக் கொல்லுதல், விட்டில்பூச்சி தீயில் விழுதல், தேனீ தேனைச் சேகரித்தல், வண்டுகள் தேன் தேடுதல், கொக்கு செவ்வி பார்த்திருத்தல், பூனை பறவைகளை அழித்தல், குயில் தன் முட்டையைக் காக்கைக் கூட்டிலிடுதல் அன்னம் பால் மேவ நீரைப் பிரித்தல் ஆகிய செயல்கள் உவமைகளாக வந்துள்ளன. பறவைகளின் அழகில் ஈடுபடுவதிலும் செயல்களில் ஈடுபடுவன மிகையாக உள்ளன. இவை இவரது பறவை வாழ்விற் கண்ட கூர்த்த நோக்குகளைக் காட்டுகின்றன.

இவை யாவும் உலகியல்பு, இறையியல்பு உணர்த்து தற்காக இவ்வுவமைகளிருந்தமையும் இதற்கு காரணம். எனலாம் திருமுறையாசிரியர்கள் இவரே மிகுதியான புதிய உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார்.

1. 16. 6. 2. நீர்வாழ்வன

மகளிரின் கண்களுக்கு உவமையாகக் கயல்மீன் ஐந்திடங்களில் குறிக்கப் பெற்றுள்ளன. கயல்மீனின் மாறிமாறிப் பிறழுந் தன்மையை உலகம் மாறி மாறி பிறக்குந் தன்மைக்கு உவமை காட்டியுள்ளனர். இவர் மட்டுமே காட்டும் செய்தியாகும்.

"கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்" 192

என்ற பாடல் தொடரால் அறிய முடிகிறது.

மீன்கள் புதுநீரின் வரவை எண்ணியிருக்கும் தன்மையும் ஓரிடத்தில் அதுபோல தவம் செய்வோர் உலக அனுபவங்களில் அழுந்தி நின்றாலும் சிவனை விட்டகலாத் தன்மைக்கு உவமையாகக் காட்டுகிறார். மீனினங்களில் செயலைக்கூட இவர் மிகவும் நுண்மையாகக் கண்டிருக்கிறார் உயிர்களின் வாழ்வியல் இவரால் பெரிதும் பேசப் படுகின்றன.

1. 16. 2. 3. விலங்குகள்

பசு, யானை, நாய், குதிரை, குரங்கு, முதலை, கரடி கழுதை, மான், ஆடு, பல்லி, ஆமை முதலிய விலங்குகள் வந்துள்ளன.

மானின் கண் மூன்றிடங்களில் மகளிர் கண்களுக்கு உவமையாகின்றன.

பசு : ஆண்கன்று பசுவைத் தேடியழைக்கும் செயல் இரண்டடிகளில் உவமையாக வந்துள்ளது. இது

திருமுறையாசிரியர்கள் பலரிடம் காணப்பெறுகின்றது. இறைவனுக்கு ஆவினையும் உயிருக்குக் கன்றையும் உவமைப் படுத்தியுள்ளார். பசு கன்றைத் தேடியழைத்தல் ஓரிடத்து வந்துள்ளது. இறைவனை அழைத்தால் கன்றீன்ற பசு, கன்றைத்தேடி வருதலைப் போல வருவான்.

ஒழுக்கமும் நோன்பும் இல்லாதவர்க்கு வறட்டுப் பசு விற்குத் தழை முதலியன கொடுத்துப் பேணிக்காத்துப் பால்கறப்பதற்கு எண்ணுவதை இவர் மட்டும் குறிப்பிடு கிறார்.

ஐம்புலன்களை யானையாக ஐந்திடங்களிலும், பறவை களாக ஈரிடங்களிலும், காக்கையை ஓரிடத்தும், பசுவை ஓரிடத்தும் உருவகப் படுத்தியுள்ளார், யானையையும், பறவையையும் உருவகப்படுத்துவது தொன்மை மரபு. பிற இவர் மட்டுமே பயனபடுத்துவனவாகும். இதுவன்றியும், ஓரிடத்தில் மாதர் நடைக்குப் பிடி நடையை உவமித்துள்ளார்.

உயிர் ஒருடம்பைவிட்டு மற்றோர் உடம்பை எடுத் தாலைப் பாம்பு தோலுரிக்கும் செயலுக்கு ஒப்பிடுகிறார்.

"நாக முடலுரி போலுநல் லண்டச
மாக நனாவில் கனாமறந் தல்லது
பேகலுமாம்" 193

என்பதது.

ஆமை தன்னுடைய ஓட்டிற்குள் ஐந்துறுப்புகள் அடக்குதல் உயிர்களின் புலனடக்கத்திற்கு உவமையாகக் காட்டுகிறார். இதற்கு 'ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக் கல்' எனும் குறளை ஒப்பாகக் கூறலாம்.

'பருவுடலை விரும்பி சிவநெறி விரும்பாதவர்கள் எலும்பு, இறைச்சி இல்லாத சைவமடத்தை நாடும் நாயும்.

மெய்யுணர்வுகள் இல்லாதவர்க்கு வீணே கத்தித்திரி யும் கழுவடி நாயும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.

குரைக்கும் நாய்கள் கடிக்காது, வீணாகக் கத்தும் நாய்களை திருவடியின்பரம் பக்தியினைப் பாழாக உகுத்த அறிவிலார் பயனின்றி மறைமொழிதலுக்கு உவமையாகக் கூறுகிறார்கள்.

நால்விரல் மூச்சினை குதிரையாகவும் எண்விரல் மூச்சினைப் பாம்பாகவும் உருவகப்படுத்தியுள்ளார். மனத்தைக் குரங்காகக் (உருவகமாக) குறிப்பிட்டுள்ளார் கரடியும் முதலையும் உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளன.

நோற்றுத்தவம் செய்யாது பிற பிறப்பிற்கு அஞ்சாது சோற்றுக்கு அலைகின்றவர் நிலை, ஆற்று முதலைக்கு அஞ்சி,கரடிக்கு எதிர்ப்பட்டது உவமையானது இவைதரும் துன்பங்கள் இங்கு உவமையாயின

"ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப் போய்
ஈற்றுக் கரடிக் கெதிர்பட்ட தன்னொக்கும்
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே" 194

என்ற பாடலால் அறியலாம்.

தவநெறி பேணாமல் அவநெறி பேணும் வீணர்களைப் பிறர் வெறுக்கும்படி குரலெழுப்பிக் கத்தும் கழுதைக்கு ஒப்பாகக் குறிப்பிட்டுள்ளார்.

"கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்"

என்பதது.

பல்லியைப் பொறாமைக்கு ஒப்பாகக் காட்டுகிறார்.

புலியை ஓரிடத்தில் தன் நாட்டைக், காப்பாற்றாதவனுக்கும் மிகுதியாக அழியுமாறு கேடு விளைவிப்பவனுக்கும் உவமையாகவும், புலியை நாடிகளாகவும் ஓரிடத்தில் உருவகமாகவும் பயன்படுத்தியுள்ளார்.

பறவைகளை இந்திரியங்களாக மட்டுமில்லாமல் காமம், வெகுளி முதலான அறுவகைப் பகைகட்கும் உருவக மாக்கியுள்ளார்.

பன்றியின் தோல்வி, பாம்பின் சீற்றம், பசுவின் அடக்கம், குரங்கின் அடங்காமை ஆகியனவற்றை இங்கு உருவகப்படுத்தியுள்ளார்.

பெரும்பான்மையும் இவர் விலங்குகளைக் குறியீட்டுச் சொற்களாகவே பயன்படுத்துகிறார். விலங்குகளின் தோற்றம், உறுப்பு பற்றிய செய்திகள் இல்லை. உவமை யாக வந்த அனைத்தும் விலங்குகளில் செயல்களாக உள்ளன. பறவைகளின் இயங்கங்கள் செயல்களைப் போலவே விலங்குகளின் இயக்கங்களே அவரால் பெரிதும் பேசப் பெறுகின்றன.

மனிதர்கள், இறைவன், அரசன், முதலியோர்களின் செயல்களைக் குறிப்பிடுவதால் உவமைகள் பெரிதும் விலங்கின் செயல்களாகவே அமைந்தன எனலாம்.

திருமுறை ஆசிரியர்களில் இத்தகு உவமைகளை இவரே மிகையாகப் பயன்படுத்துகிறார். இவ்வுவமைகளி லிருந்து இவர் விலங்குகள் பற்றிய அறிவினைப் பெரிதும் பெற்றிருந்தார் எனலாம்.

பதினொன்றாம் திருமுறையில்,

1. திருவாலவாயுடையார் : திருவாலவாய் இறைவ னான சிவபெருமான் எழுதியதாகக் கூறப்பெறும் திருமுகப் பாசுரத்தில் மூன்று குறிப்புகள் இயற்கைப் பொருள்கள் உவமைகளாக வந்தன உள்ளன.

சேரனுடைய குடையின் வடிவத்திற்கும் நிறத்திற்கும் உவமையாக மதி ஓரிடத்தில் கூறப்பெற்றுள்ளது. இது மரபு வழியாகக் கூறப்பெறுவதே!

"குருமா மதிபுரை வேவிய குடை"[196] என்பதது.

மேகம் தரும் பயனை உவமையாகக் கூறும் இடம் ஒன்றுளது.

"பருவங்கொண்மூ படியென... உதவி"[197] என்பதது.

கைம்மாறு கருதாது அருளும் தன்மை இங்கு உவமை யாக வந்துள்ளது. இதுவும் மரபு வழிப்பட்டதே.

இவையிரண்டும் விண்ணியற்கையில் அடங்குவன.

அன்னப்பறவையின் சிறகின் நிறத்திற்குப் பால் உவமையாகக் கூறப் பெற்றுள்ளது. இதுவும் மரபு வழிப் பட்டதே. நிறம், வடிவு, பயன் எனும் மூன்று வகையுள் அடங்கினவாக அவ்வுவமைகள் உள்ளன.

## 1. 18. காரைக்காலம்மையார் பாடலில் அணிநல இயற்கை :

### 1. 18. 1. நீர்நிலைகள் :

நீர்நிலைகளால் கடல் மட்டும் உருவகமாக இரு இடங் களில் இவர் பாடல்களுள் வந்துள்ளது. "துன்பவெள்ளக் கடல்" "வினைக்கடல்" என்பன அவை.

கடலின் ஆழமும் பரப்பும் இங்கு உருவகிக்கப் பெற்றன. இவை யாவரும் கூறப்பெறும் மரபு வழிப் பட்டனவே.

### 1. 18. 2. வானியற்கை :

வானியற்கைப் பொருளிலும் வான், மேகம், மின்னல் ஆகியனவும் உவமைகளாக வந்துள்ளன.

1. வான் : செம்மை நிறங்கொண்ட அந்திவான், சிவபெருமான் சடைக்கு உவமையாக சுரிடங்களில் வந்துள் ளது. "செக்கர் அவ்வானமே ஒக்குந்திருவடி"[198] என்பது அவற்றுள் ஒன்று. இத்தகையன திருமுறையாசிரியர்கள் பெரும்பான்மையோர் கூறுவனவே.

2. மேகம் : உமையம்மையின் நிறத்திற்கு உவமையாக ஓரிடத்திலும் சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு ஓரிடத்திலும் கருமேகத்தின் கரிய நிறம் உவமையாக வந்துள்ளது. மேலும் சிவன் ஏறும் விடையின் வெண்மை நிறத்திற்கு ஓரிடத்தில் வெண்மேகத்தின் நிறம் உவமையாக வந்துள்ளது. இவை நிறவுவமையாகும். இவை யாவும் மரபு வழிப்பட்டனவே.

3. மின்னல் : சிவபெருமான் செஞ்சடையின் நிறத்திற்கு ஈரிடங்களிலும் சிவபெருமான் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் மின்னல் உவமையாக வந்துள்ளது. இவை மரபு வழிவந்த நிறவுவமையாகும்.

1. 8. 3. காலவியற்கை :

காலை, நண்பகல், மாலை, இருள் எனும் சிறுபொழுது உவமைகளாக வந்துள்ளன. இவை ஒரே பாடலிலேயே வந்துள்ளன. காலைப்பொழுது சிவன் திருமேனி நிறத்திற்கும், நண்பகற்பொழுது திருநீறு பூசிய மேனி நிறத்திற்கும் மாலைப்பொழுது சடையின் நிறத்திற்கும், இருள் மிடற்றின் நிறத்திற்கும் உவமைகளாக வந்துள்ளன.

"காலையே போன்றிலங்கும் மேனி"[199]

என்பது அவற்றுள் ஒருகுறிப்பு.

இதுவன்றியும் இரவுக்காலத்து நீரின் நிறமும் ஓரிடத்தில் சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு உவமையாக வந்துள்ளது.

"இரா நீர் இருண்டனைய கண்டத்தர்"[200]

என்பதது. இத்தகைய உவமையை இவர் மட்டுமே பயன்படுத்துகிறார்.

வானியற்கைப் பொருள்கள் யாவும் இவர் இப்பாடல்களுள் நிறம்பற்றியே உவமையாக வந்தன. அவை சிவ

பெருமான் உறுப்புகளின் நிறத்திற்கே வந்தன என்பதி லிருந்து சிவபெருமான் அழகில் இவரின் ஈடுபாடு மிக்கி ருந்தன என்பது புலப்படுகிறது.

1. 18. 14. உயிரியற்கை :

உயிரியற்கையில் இயங்கா உயிர்களாகிய தாவரங் களின் உறுப்புகள் மட்டும் இங்கு உவமைகளாக வந் துள்ளன.

தாளிப்பனையின் இலை ஓரிடத்தில் பேய்களின் தலை மயிர்கட்கு உவமையாக வந்துள்ளது. "தாளிப்பனையின் இலைபோல மயிர்சட் டழல்வாய் அழல்கண்பேய்"[201] என்பதது. அவ்விலையின் விரிர்து பரந்த தோற்றம் இங்கு உவமையாக வந்திருக்கிறது. இத்தகைய உவமையை இவர் மட்டுமே பயன்படுத்துகிறார்.

மலர்களில் தாமரைமட்டும் சரிடங்களில் சிவன் திருவடிக்கு உவமையரக வந்துள்ளது. உமையம்மையைக் கொம்பாக ஓரிடத்தில் கூறுகிறார். இதுவன்றியும் உமை யம்மையின் கண்ணுக்கு மாவடு ஓரிடத்தில் உவமையாக வந்துள்ளது. இவையாவும் மரபு வழிப்பட்டனவே.

இவர் பாடல்களுள் இயற்கைப்பொருள்கள் உவமை யாக வந்த இடங்கள் மிகக்குறைவு.

இவ்வுலக வாழ்வில் வெறுப்பும் மேலுலக வாழ்வில் விருப்பும் இவர் கொண்டமை காரணமாகும்.

1.19. ஐயடிகள் காடவர்கோன்

இவர்தம் பாடல்களுள் இரு இடங்களில் மட்டுமே இயற்கைப் பொருள்கள் உவமையாக வந்துள்ளன.

"வஞ்சியன் நுண்ணிடை" "குயிலொத்திருள் குஞ்சி கொக்கொத்து" என்பன[202] அவை.

இடைக்கு வஞ்சிக்கொடியை கூறுதல் மரபு வழி வந்ததே. கரிய தலைமயிர்க்குக் குயிலின் நிறத்தையும் நரைமுடிக்கு வெண்ணிறக் கொக்கின் நிறமும் கூறுவது புதுமையான ஒன்று. இதை இவர் மட்டுமே கூறுகிறார்.

திருமுறையாசிரியர்களால் இவர் மிகக் குறைந்த குறிப்புகளைத் தந்தவராவார். இவரது பாடல்கள் காலத்தை வீணே போக்காமல் பலதலங்களிலும் உள்ள இறைவனை இறைஞ்சுங்கள் என்ற நோக்கில் அமைந்தன வாகக் காணப்பெறுகின்றன. அந்நோக்கே இவர் பாடல் களுள் இயற்கைப் பொருள்கள் அணிகளாக வந்த இடம் குறைவாக இருந்ததற்குக் காரணமாகும்.

1. சேரமான் பெருமாள் நாயனார்

1.20.1 நிலவகைமை

நிலவகைமையில் மலையும் மணலும் உவமைகளாக வந்தன. மலை மூன்று இடங்களில் தலைவியின் கொங்கைக் கும் வெதும்பைப் பருவப் பெண்ணின் கொங்கைக்கும் உவமைகளாக வந்துள்ளன. இதுவன்றி மலையைச் சிவனாக குணக்குன்றமே என உருவகப் படுத்துமிடம் ஒன்றுளது. இது குணமென்னும் குன்றேறி நின்றார்" எனும் திருக்குறளில் வரும் உருவகத் தொடரை ஒத்துளது. இவர் மனத்தைக் கல்லாக உருவகப்படுத்தும் இட மொன்றுமுளது.

மங்கையின் கரிய கூந்தலுக்கு அறலை உவமையாகக் கூறும் இடம் ஒன்றே மண்ணைப் பற்றியதாக உள்ளது. இது மரபு வழி வந்தது.

1.20.2. நீர் நிலைகள்

ஆற்றுநீரையும் நீர்ச்சுழியையும் இவர் இரு இடங் களில் உவமைப்படுத்துகிறார்.

"கங்கைச்சுழியனைய உந்தியாள்"[203] எனும் தொடர் மங்கைப் பருவப் பெண்ணை உந்திக்கு உவமையாகக் கங்கை ஆற்றின் சுழி உவமையாகக் கூறப் பெற்றதைக் காட்டுகிறது. இது வடிவ உவமையாகும். நீர்ச்சுழியை உந்திக்கு ஒப்பிடுதல் மரபு வழிப்பட்டதே.

தலைவியின் கண்ணீர் பெருகி வழிவதற்குக் கங்கை நீரை ஒப்புக்காட்டுகிறார். ஆற்றொழுக்கு இங்கு உவமையானது. இதுவும் மரபை ஒட்டியதே. பேரிளம் பெண்ணுக்குக் கடலை உவமையாகக் கூறும் இடம் ஒன்று முளது. அது காரணத்தொடு அமைந்துளது.

### 1.20.3 வானியற்கை

வானியற்கைப் பொருள் வானும் கதிரவன், மதி, விண்மீன், மேகம், மின்னல், இடி முதலியனவும் அணிகளாக வந்துள்ளன.

1. வான் : அந்திச் செவ்வான் மூன்றிடங்களில் உவமையாக வந்துள்ளது. தெரிவைப் பருவப்பெண் அழகுக்கும் அரிவைப் பருவப்பெண் முகத்திற்கும் சிவ பெருமான் திருமேனிக்கும் அந்திச் செவ்வான் உவமை யாக்கப் பெற்றுள்ளது. அந்திவான் காட்டும் அழகினான் என்பது அவற்றுள் ஒன்று. செம்மை நிறத்தொடு விளங்கும் அழகு இங்கு உவமையாகும். மாலைவானில் அழகு எல்லாப் புலவர்களையும் கவர்ந்துள்ளது.

2. கதிரவன் : சிவன் திருமேனி நிறத்திற்கும், செஞ்சடையின் நிறத்திற்கும் ஒப்புமையாக ஈரிடங்களில் கதிரவன் உவமையாக வந்துள்ளது. விடையின் மேல்வரும் சிவன் தோற்றத்தை விலங்கல் மேல் வரும் ஞாயிற்றின் தோற்றத்தோடு ஒப்பிடும் இடம் ஒன்றும் உள்ளது. ஞாயிற்று கதிரொளியின் நிறமும் பொலிவுமே இங்கு

உவமையாயின. அதன் அழகில் மட்டுமே இவர் ஈடுபட்டவராகத் தெரிகிறார்.

3. மதி : பெதும்பை, மடந்தை, தெரிவை ஆகிய பருவப் பெண்களின் முகத்திற்கும் தலைவியின் முகத்திற்கும் நாலிடங்களில் இவர் பாடல்களுள் மதி உவமையாக வந்துள்ளது. இவையன்றி திருநீற்றின் நிறத்திற்கு மதியின் நிறத்தை ஒப்பிடும் இடமொன்றுமுளது. இவை யாவும் பொலிவான குளிர்ச்சியான மதியின் அழகிய நிறம் உவமையாகிறது. இவையும் இவரது உணர்வைக் காட்டுகிறது.

1. விண்மீன்கள் : மடந்தைப் பருவப்பெண் அணிந்துள்ள முத்தாரத்திற்கு விண்மீன்கள் உவமையாக ஓரிடத்தில் கூறப் பெற்றுள்ளன.

"உருவுடைய நாண்மீன்சூழ் தார்போற்-பெருகொளிய முத்தாரம்"[204] என்பதது. முகத்துக்களுக்கு விண்மீன்கள், ஒளி, நிறம், வடிவு முதலியவை வடிவு பற்றி உவமையாயின. இதுவும் இவரது அழகியல் உணர்வைக் காட்டுகிறது.

5. மேகம் : சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு கருமேகத்தின் கருமையை ஓரிடத்திலும் வெண்ணீற்றுக்கு வெண் மேகத்தின் வெண்மையை ஈரிடங்களிலும் உவமையாக்கப் பெற்றுள்ளது. இவையும் அழகியல் பற்றி வந்தன. நிறவுவமைகளே மரபு வழிவந்தனவே. சிவபெருமான் சடையின் நிறத்திற்கு ஓரிடத்தில் மின்னல் உவமையாக வந்துள்ளது. முரசத்தின் ஒலி இடியின் ஓசையொடு ஒப்பிட்டுக் காட்டுமிடம் இரண்டுளது. இவையாவும் மரபு வந்தனவே ஆகும்.

**காலவியற்கை**

பெரும் பொழுதில் இளவேனில், சிறு பொழுதில் இருளும் விடியலும் உவமையாக வந்துள்ளன.

இளவேனில் ; தெரிவைப் பருவப் பெண்ணின் அழகிற்கு ஒப்புமையாக இளவேனில் ஓரிடத்தில் கூறப் பெற்றுள்ளது. காரணத்தொடு ஒப்புமை காட்டப் பெற்றுள்ளது.

"மாந்தளிர் மேனி முருக்கிதழ்வாய் ஆதலால்
வாய்ந்த இளவேனில் வன்மையாள்" 205

என்பதது. பெண்ணின் அழகை இயற்கை அழகொடு ஒப்பிட்ட அழகியல் உணர்வுபற்றி எழுந்தது.

விடியல் : அதே தெரிவைப் பருவப் பெண்ணை விடியலுக்கும் ஓரிடத்தில் ஒப்பிடப் பெற்றுள்ளது.

"இருள்தீர் புலரியே ஒப்பாள்" 206

என்பதது. விடியலின் குளிர்ந்த தன்மையும் ஒளியின் மென்மையும் இப்பெண்ணுக்கு உவமையாயின.

இவை இரண்டும் திருமுறையாசிரியர்களால் இவரால் மட்டுமே கூறப்படுவன ஆகும். இவை இவரது அழகியல் உணர்வைக் காட்டுகின்றது.

இருள் : தலைவி கூந்தலின் கருமைக்கும் சிவன் மிடற்றின் கருமைக்கும் நான்கிடங்களில் இருள் உவமை யாக வந்துள. அவற்றுள் ஓரிடத்தில் இருள் உவமேயமாக வந்துள்ளது. இவையும் நிறம்பற்றி வந்த மரபு உவமைகளே.

உயிரியற்கை

இயங்கா உயிர்கள்

இயங்கா உயிர்களாகிய மரம், கொடி, செடியும் அவற்றின் உறுப்புகளும் அணிகளாக வந்துள்ளன.

மரம் : மரம் எனும் பொதுச் சொல்லால் ஓரிடத்தில் மரத்தைக் குறிப்பிடுகிறார் அது இறைவன் புகழ் கேட்காத

செவிக்கு உவமையாக வந்துள்ளது. மடந்தைப் பருவப் பெண்ணின் தொடைக்கு வாழை மரத்தின் தண்டு ஓரிடத்திலும் பேரிளம் பெண்ணின் தோள்களுக்கு வேய் ஓர் இடத்திலும் உவமையாக வந்துள்ளன. வாழைத் தண்டை உவமையாக்குவது.[207] இவரது பாடல்களில் மட்டுமே உண்டு.

கொடி : பெண்களின் இடைக்கு கொடியை ஒப்பிடுவது சங்க இலக்கியந் தொட்டு வருவதாகும். இவர் பல பருவங்களைச் சேர்ந்த பெண்களின் இடைக்குக் கொடியை எட்டு இடங்களில் உவமையாகக் கூறினார். இவை வடிவம் பற்றியனவாகும்.

தளிர் : இலையின் வளர்ச்சியில் முதல் நிலையைத் தளிர் என்பர். தெரிவைப் பருவப் பெண்ணின் மேனிக்கும் அங்கைக்கும் அடிகளுக்கும் தளிரை உவமையாகக் கூறும் இடங்கள் இவர் பாடல்களும் சரிடங்களில் இவற்றுள் மாந்தளிரைக் குறிப்பாக இவர் மட்டுமே காட்டுகிறார் தாவரங்களின் துளிர்கள் கண்களுக்குப் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். தளிரின் அழகும் நிறமும் குவளை கவர்ந்தமை இவரது அழகியலுணர்வைக் காட்டுகின்றது.

மொட்டு : மடந்தைப் பருவப் பெண்ணின் கொங்கைக்குத் தாமரையின் மொட்டு உவமையாக இவர் தம் பாடல்களில் வந்துள்ளது.

"கொங்கை... தாமரை மொட்டும்"[208]

என்பது அவற்றுள் ஒன்று. இவை வடிவ உவமையின் பாற்படும்.

மலர் : தாமரை, குவளை, இலவம், கொன்றை, அல்லி, தோன்றி முல்லை முதலான மலர்கள் உவமைகளாக வந்துள்ளன. மலர் என்னும் பொதுச் சொல்லால் இரு வேறிடங்களில் வந்துள்ளன.

மலரைச் சிவபெருமானின் கண்ணுக்கு ஒரு இடத்தில் உவமைப்படுத்தியுள்ளார்.

தாமரை மலரை மகளிர் அடிகட்கு ஐந்திடங்களிலும் சிவபெருமான் திருவடிகட்கு ஓரிடத்திலும் மகளிர் முகத்திற்கு மூன்றிடங்களிலும் சிவன் திருமேனிக்கு ஓரிடத்திலும் மகளிரின் கைகட்கு ஓரிடத்திலும் உவமையாகக் காட்டுகிறார். தாமரை மலரின் அழகும், நிறமும் இவரைக் கவர்ந்ததின் விளைவாக இவ்வுவமைகள் மிகையாக எழுந்தன.

மகளிரின் பசலை நிறத்திற்குக் கொன்றையின் நிறத்தை உவமையாகக் காட்டுதல் சங்க இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. அத்தகையவற்றை இவரும் தம் பாடல்களுள் நான்கிடங்களில் குறிப்பிடுகிறார்.

“கொங்கைக்குத் தேமலர்க் கொன்றை நிறம் பணித்தான்” என்பது அவற்றுள் ஒன்று. கொன்றையின் நிற அழகில் தேவார மூவர்களைப் போலத் தனியாக சிறப்பாக ஈடுபாடு இல்லையெனினும் அதன் நிறத்தைக் காட்டுதல் மட்டும் உள்ளன. அகப்பொருளமைப்பில் இவை அமைந்தனவாகையால் இவ்வுவமைகள் இவ்வாறு அமைந்தன.

தோன்றியின் நிறம் இவரைப் பெரிதும் கவர்ந்தது போலும். “தோன்றித்தீத் தோன்ற”[209] என்பது தோன்றியின் சிவப்பு நிறம் தீயின் சிவப்பு நிறம் போன்றது என்பதை இவர் உணர்ந்தார்.

முல்லையை பெண்களின் எயிற்றுக்கு உவமையாக்கும் இடம் ஒன்றுளது இது மரபை ஒட்டியதே. இது நிறம் பற்றி வந்ததே.

பெண்ணின் துயரைக் குறிப்பிட நெருப்பில் விழும் மலரை ஒப்புக்காட்டுகிறார். இங்கு அல்லி மலரைக்

குறிப்பிடுகிறார். நெருப்பில் விழும் மலர் வாடியழிதல் இங்கு மகளிரின் மேனி வாடலுக்கு உவமையானது.

மலரின் செம்மை, பொன்மை கலந்த மஞ்சள், வெண்மை முதலிய நிறங்கள் பெரிதும் பேசப் பெறு கின்றன. மலரின் மென்மையும் இவரால் குறிப்பிடப் பெறுகின்றன.

8. கனி : சிவனைக் கனியாகக் காட்டும் இடம் ஒன்றுள்ளது. நெல்லிக்கனியாகவும் ஓரிடத்தில் சிவன் காட்டப்பெறுகிறார். தொண்டைக் கனியின் நிறம் மகளிரின் வாயின் நிறத்திற்கும் உவமையாக இரண்டிடங் ளில் வந்துள்ளது. கனியின் பயனும் சுவையும் கலந்து பிரியாத் தன்மையும் கனியின் நிறமும் இங்கு உவமை களாயின.

## 1. 20. 4. இயங்குயிர்கள்

இயங்குயிர்களில் மான், முதலை, பாம்பு. புழு முதலியன அணிகளாகி வந்தன.

மானின் கண் மகளிரின் கண்களுக்கு ஈரிடங்களிலும் மகளிருக்கு மான் ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளன. முதலையைக் கேவலரின் நிலைக்கு ஓரிடத்தும் உவமைப் படுத்துகிறார். புழுவைத் தன்னுடைய இழிந்த தன்மைக்கு ஒப்பிடுகிறார். இவை யாவும் மரபு வழிப்பட்டனவே. பசுவின்பால் திருநீற்றுக்கு நிறம் பற்றியும் பரத்தை மொழிக்கு இனிமை பற்றியும் ஈரிடங்களில் உவமை யாயின.

தலைவி, தெரிவை ஆகியோரின் குரல் இனிமைக்கு குயிலின் குரலினிமை ஈரிடங்களிலும் அரிவை, தெரிவைப் பருவ மகளிர் நடைக்கு அன்னத்தின் நடை ஈரிடங்களிலும் பெதும்பைப் பருவப் பெண்ணின் சொல்லினிமைக்குக் கிளியின் குரல் ஓரிடத்திலும் மகளிரின் சாயலுக்கு மயில்

ஐந்திடங்களிலும் உவமையாக வந்துள்ளன. பறவை குரல், நடை முதலிய இயக்கங்கள், அழகு முதலியன இங்கு உவமையாயின. இவை யாவும் மரபு வழி வந்தன.

மீனினங்களில் கயலும் கெண்டையும் பெண்களின் கண்களுக்கு மூன்றிடங்களில் உவமையாக வந்துள்ளன. நீரில் பிறழும் அதன் அழகே இங்கு அணிகளாயின.

1. 20. 5. மணிகள்

பவளம், முத்து, நிலம் ஆகிய மணிகள் அணிகளாக வந்துள்ளன. சிவன் திருமேனி நிறத்திற்கு ஓரிடத்திலும் மங்கை மடந்தை பேரிளம் பெண் ஆகிய மூன்று பருவத்தினர் வாயிதழின் செம்மைக்கு மூன்றிடங்களிலும் பவளத்தின் செம்மை உவமையாக வந்துள்ளது.

இவையாவும் திருமுறையாசிரியர்கள் பெரும்பான்மையோர் பாடல்களில் பயில்வனவே.

மங்கைப் பருவப்பெண்ணின் முறுவலுக்கும் மடந்தைப் பருவப் பெண்ணின் எயிற்றுக்கும் முத்தின் வெண்மை உவமையாக வந்துள்ளது.

சிவன் திருமிடற்றின் நிறத்திற்கு நீலமணி ஓரிடத்தில் உவமையானது.

மணிகளின் செம்மை, வெண்மை, கருநீலம் ஆகிய நிறங்கள் இங்கு உவமைகளாயின.

இயற்கைப் பொருள்களில் வானியற்கைப் பொருள்களும் இயங்கா உயிர்களாகிய தாவர இயற்கைப் பொருள்களும் இவரைப் பெரிதும் கவர்ந்தன.

இவரின் பாடல்களில் நிறம் பற்றிய உவமைகளே பெரிதும் பேசப் பெறுகின்றன. இவரின் மூன்று நூல்களுள்

உலாவாக ஒன்றும் கோவையாக ஒன்றும் பிறதொன்றில் நாயக நாயகி பாவம் அமைந்த பாடல்கள் மிகுதியாக அமைந்தும் உள்ளதால் மகளிர் பற்றிய உவமைகள் மிகுதியும் காணப்பெறுகின்றன.

## 1.21 நக்கீர தேவநாயனார்

1. மலை : இவர்தம் பாடல்களில் சிவபெருமானை "மால்வரையாக உருவகப்படுத்தும் தோற்றம் பற்றி எழுதும் உவமை ஒன்றில் மலை இயற்கையைச் சாரும்.

2. கடல் : திருமாலின் நிறத்திற்குக் கடலின் நிறத்தை ஒப்பிடும் ஒரு குறிப்பு மட்டுமே கடல் பற்றிய குறிப்பிலடங்கும். பிறவியை நெடுஞ்சுழியாக ஓரிடத்தில் உருவகப்படுகிறார். இவர்தம் பாடல்களுள் மலை முதலான நிலவகைமையும் கடல் முதலான நீர்நிலைகளும் பெரிதும் அணிகளாகக் காணப் பெறவில்லை.

## 1.21.3 விண் இயற்கை

கதிரவன், மதி, விண்மீன், முகில், மின்னல் இடி முதலிய வானியற்கைப் பொருட்கள் அணிகளாக உள்ளன.

கடலின் கண் காலை தோன்றும் கதிரவனின் அழகிய காட்சி இவரைப் பெரிதும் கவர்ந்துள்ளது. அக்காட்சியை முருகனொடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். இவருடைய பாடல்களில் மாலைக் காலம் பற்றிய அழகிய குறிப்புகள் காணப்பெறவில்லை. காலைக்காட்சியே இவரைக் கவர்ந்தது எனலாம். இதுவன்றியும் கதிரவன் ஒளியால் இருள்விலகும் செயலை முருகன் ஒளியொடு ஒப்பிடுகிறார். இவையிரண்டும் அழகிய உணர்வைக் காட்டினாலும் அதற்கு மேலும் அறியாமை இருளை முருகப்பெருமான் ஓட்டுதலைக் குறியீடாக உணர்த்தவெழுந்தன எனலாம். இத்தகையனவே மதி பற்றிய ஒரு குறிப்புமாகும்.

விண்மீன் தேவர்களின் தோற்றத்திற்கு உவமையாக ஓரிடத்தில் காட்டப்பெற்றுள்ளது.

சிவபெருமான் கண்டத்திற்கு உவமையாக கருமுகில் ஓரிடத்தில் வந்துள்ளது. முகிலே உவமேயாக நின்று கார் [கார்முகில் உவமேயாக] நின்ற இடமும் ஒன்றுளது.

அவற்றைப் போன்றே மின்னல், சிவன் செஞ்சடைக்கு உவமையாக ஓரிடத்தில் வந்தாலும் உவமேயமாக ஆறு இடங்களில் வந்துள்ளன. இவை யாவும் "காரெட்டு"[2] எனும் நூலுள் வந்தவை ஆதலால் காரின் சிறப்புகளை இவ்வாறு மரறியமைந்தன.

மின்னல் சிவபெருமானின் கோபத்திற்கும் ஓரிடத்தில் ஒப்புக்காட்டப் பெற்றுள்ளது. முரசின் ஒலிக்கு இடியின் பேரோசை ஓரிடத்தில் உவமையாக்கப் பெற்றுள்ளது. தேவர்களின் குரலுக்கு இடியும் செலவுக்கு வளியும் ஈரிடங்களில் உவமையாக வந்துள்ளன.

பேரோசைக்கு இடியும் விரைவுக்குக் காற்றும் உவமையாக வருதல், பண்டு தொட்டு வரும் மரபாகும்.

### 1.21.4 காலவியற்கை

சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு மூன்றிடங்களிலும் கடலின் நிறத்திற்கு ஓரிடத்திலும் இருள் உவமையானது. இவை மரபு வழிப்பட்டன. அந்தி முதலான பிற பிரிவுகள் பற்றிய குறிப்பேதுமில்லை.

### 1.21.5 உயிரியற்கை

#### 1.21.5.1 இயங்கா உயிர்

வேய் ஓரிடத்தில் உமையம்மையின் தோளுக்கும் கொடி ஓரிடத்தில் வள்ளியின் இடைக்கும், மாவின் தளிர் மகளிர் மேனிக்கு ஓரிடத்திலும் உவமையாயின.

1. மலர் : மகளிர் கொங்கைக்கு அரும்பு இரு இடங்களில் உவமையாயின. சிவபெருமான் திருவடி கட்கும் கைக்கும் ஈரிடங்களில் மலரை உவமையாக்குகிறார் இவையிரண்டும் மலர் எனும் பொதுச்சொல்லால் அமைந்தன.

மகளிர் கண்களுக்குக் குவளை மலர் ஈரிடங்களில் உவமையாக வந்துள்ளது. மேலும் ஓரிடத்தில் சுனையில் பூத்த குவளை மலரின் அழகு இவரைக் கவர்ந்தது எனலாம். மகளிர் கண்ணைப்போல சுனையில் குவளை மலர் பூத்துக் காணப்பெறுகின்றது என்கிறார். கொன்றை மலர் பொன்னைக் கொடுக்கின்ற காட்சியும் காந்தள் மலர்கள் மகளிர் கைகளைப் போல் மலர்ந்துள்ளன எனும் குறிப்பும் மலர்களின்மேல் இவர் கொண்ட ஈடுபாட்டைக் காட்டுகின்றன.

செங்காந்தள், முருக்கமலர் ஆகியவற்றின் செம்மை நிறத்தை மயக்க அணி வகையுள் சாரும். இரு பாடல்களில் தெளிவுபடுத்துகிறார். காந்தள் மலரில் வண்டிருப்பதை தீ மூழ்கிற்று என அஞ்சுவதாகக் காட்டும் இடமும் இலவப் போதைக் கொள்ளி என மயங்கும் இடமும் அத்தகையன. "முல்லை நகும்" எனும் குறிப்பும் முல்லை மலரின் வெண்மையை உணர்த்துகின்றன. இவையாவும் மலர்கள் மேல் இவர் கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகின்றன.

காய் பற்றிய செய்திகள் இல்லை. கனிவகையுள் கொவ்வைக் கனி மட்டும் ஓரிடத்தில் குறமகளிர் வாய்க் குவமையாக வந்துள்ளது. தாவரங்களும் அவற்றின் உறுப்பு களும் இவர் பாடல்களுள் பெரிதும் நிறம் பற்றியே உவமை யாக வந்துள்ளன.

### 1.21.5.2 இயங்குயிர்

மான், குரங்கு, ஆடு, பசு, எலி, பாம்பு முதலியன வந்துள்ளன.

முருகனுக்கு உவமையாகக் களிற்றை ஓரிடத்திலும் இராவணன் கயிலை மலையில் கையகப்பட்டுக் கிடந்த காட்சிக்கு (எலிப் பொறியில்) கிடாரில் அகப்பட்ட எலியை ஓரிடத்திலும் சிந்தனையும் அறிவும் இன்றி ஒருவர் ஒருவரைப் பின்பற்றும் மக்களுக்கு ஆட்டை ஓரிடத்திலும் காந்தள் மலர்ந்த வழுவின் அழகுக்குப் பாம்பை ஓரிடத்திலும் உவமையாகக் கூறுகின்றார்.

களிற்றின் பீடுநடையும் வலிமையும், எலியின் துயரும், ஆட்டின் கூடி ஓடும் நிலையும், பாம்பின் தோற்றமும் இங்கு உவமைகளாயின. கண்ணப்பன் இறைவன் மீது கொண்ட அன்பின் நிலை (இறைவனை உண்பித்தல் அல்லது தானுண்ணா அன்பின் நிலையை) "தாய்க்கண் கன்றெனச் சென்று"210 என்னும் உவமை மூலம் விளக்குகிறார். கன்றைப் பிரிந்த தாய்ப்பசுவின் பதற்றத்தின் மூலம் காட்டும் அன்புநிலையை இவர் இத்தகு உவமை மூலம் சிறிது மாற்றி விளக்குகிறார். விலங்குகளிடை காணப் பெறும் அன்பு (பாசமும்) இவரைக் கவர்ந்துள்ளது.

பறவைகளில் மயில், குயில் முதலியன மட்டும் அணி களாக வந்துள்ளன. மகளிரின் மடநடைக்கு மயிலின் நடை ஓரிடத்தும் உமையம்மையின் குரலுக்கு குயிலின் குரலின் இனிமை ஓரிடத்தும் உவமைகளாயின. இவை மரபு வழிப்பட்டன. இந்திர கோபப் பூச்சியின் நிறம் காவி உடையின் நிறத்திற்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. முயல், காக்கை, மின்மினிப்பூச்சி முதலியன பழமொழி களில் வந்துள்ளன.

### 1. 21. 6 மணி

மணிகளில் பவளம் மட்டும் மகளிரின் வாயின் செம்மைக்கு உவமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. இறைவன் திருமேனி நிறத்திற்குத் தழல் உவமையாக

ஓரிடத்தில் வந்துள்ளது. முனிவர்களின் நரைமுடிக்குச் சங்கின் வெண்மை உவமையானது. வெண்ணீற்றுக்குப் பாலின் நிறம் உவமையாக ஓரிடத்தில் காட்டப் பெற்றுள்ளது. இவை யாவும் நிறம் பற்றி வந்தன; மரபு வழிப்பட்டன.

இவர் பாடல்களில் பெரும்பான்மையும் நிறம் பற்றிய குறிப்புகள் வந்துள்ளன, விலங்குகளின் இயக்கம் பெரிதும் பேசப் பெறுகின்றன. பறவைகள் உவமைகளாக வந்துவை மிகவும் குறைவாக உள்ளன. யாவும் மரபு வழிப்பட்டன வாகவே உள்ளன.

1. 22 கபிலதேவநாயனார்

1. 22. 1. நிலவகைமை

யானையை மலைக்கு ஒப்பிட்ட ஒரு குறிப்பு மட்டுமே மலை உவமையாக வந்தது ஆகும். சிவபெருமான் வீரத்தைச் சிறப்பிக்க அவரால் தோலுரிக்கப்பெற்ற யானை, மலையைப் போன்றது என்று உவமிக்கப்பெற்றது.

1. 22. 2 நீர்நிலைகள்

பிறவியைக் கடலாக உருவகப்படுத்தும் குறிப்பு ஒன்று மட்டுமே நீர்நிலைகளில் கடல் அணியாக வந்ததாகும். இது தொன்று தொட்டு கூறப்பெறும் மரபைச் சார்ந்தது.

1. 22. 3 விண்ணியற்கை

1. வான் : அந்திச் செவ்வான் மட்டுமே. இது சிவன் திருமேனிக்கு ஓரிடத்திலும் சிவன் சடையின் நிறத்திற்கு ஓரிடத்திலும் உவமையாக வந்துள்ளது.

இதைத் திருமுறை ஆசிரியர்களில் பெரும்பாலோர் குறிப்பிடுகின்றனர்.

2. மதி : சிவபெருமான் திருமேனிக்கு ஓரிடத்திலும் முகத்திற்கு ஓரிடத்திலும் மதி உவமையாக வந்துள்ளது.

உவாக்காலத்து மதி உவமையாக சிவன் முகத்திற்குக் கூறப் பெற்றுள்ளது. முழுமையான ஒளி, குளிர்ச்சி நிறம் பற்றி இது உவமையாக வந்திருக்க வேண்டும். கதிரவன் உவமை யாக வரும் குறிப்புகள் ஏதுமில்லை.

3. இடி: விடையின் குரலை இடியொடு ஒப்பிடும் குறிப்பு ஒன்றுளது. இது திருமுறை ஆசிரியர்களால் பெரிதும் பேசப்படுகிற ஒன்று.

தேவார மூவரைப் போல மேகம், இடி, மின்னல், மழை பற்றி குறிப்புகள் ஏதுமில்லை.

### 1. 22. 4 காலவியற்கை

சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு இருளை ஒப்பிடும் ஒரு இடம் மட்டும் இவ்வகையைச் சாரும். இது பக்தி இயக்க இலக்கிய மரபாகும்.

### 1. 22. 5 உயிரியற்கை

#### 1. 22. 5. 1 இயங்கா உயிர்கள்

1. மரம்: மகளிர் தோள்களுக்கு வேய் உவமையாக இரு இடங்களில் வந்துளது. இவ்வொரு குறிப்பு மட்டுமே உளது. இது மரபு வழிப்பட்டது.

2. மலர்: மலர் என்ற பொதுச் சொல்லால் வழங்கப் பெறுமிடம் இரண்டு. அவை சிவபெருமானின் திருவடிகட்கு உவமையாக வந்துள்ளன. சிவபெருமான் வாயின் செம்மைக்கு ஆம்பல் மலர் ஒரிடத்திலும் மிடற்றின் நிறத்திற்குக் குவளை ஒரிடத்திலும் திருமேனி நிறத்திற்குத் தாமரை மலர் ஒரிடத்திலும் திருவடிகட்கு ஒரிடத்திலும் உமையம்மையின் கைகட்குத் தாமரை மலர் ஈரிடங்களிலும் உவமையாக வந்துள்ளன. இவை யாவும் நிறவுவமைகளே. மரபு வழிப்பட்டனவே. மலரின் அழகில் சிறந்த ஈடுபாடு கொண்டவராக இவரைக் கூறயியலாது.

3. கனி : விளங்கனி மட்டும் ஓரிடத்தில் உவமை யாக வந்துள்ளது. "களிறுண்ட வெள்ளில் போன்று உள்ளம் வெறிது"211 என்பது. இவர், யானை நோய் உற்ற விளங்கனியைக் குறிப்பிடுகிறார். இதில் வெறும் ஓடு மட்டும் இருக்கும். உள்ளே சதைப்பற்றிருக்காது. அத்தகைய உள்ளொன்றிலாத வெறுமையான உள்ளத் திற்கு உவமையாக இது குறிக்கப்பெற்றது. திருமுறை யாசிரியர்களுள் இதை இவர் மட்டுமே குறிப்பிடுகிறார்.

4. இயங்குயிர் : இயங்குயிர்களில் பறவையும் மீனினம் மட்டும் அணிகளாக வருகின்றன.

தலைவிக்குக் கிளி ஒப்புமையாக ஓரிடத்தில் வந்துள்ளது. இவ்வொரு குறிப்பே பறவை வகையைச் சாரும்.

உமையம்மையின் கண்ணுக்குக் கயல்மீனை உவமை யாக ஓரிடத்தில் இவர் குறிப்பிடுகிறார். வேறு குறிப்புகள் இல்லை.

தீ இயற்கை : சிவன் திருமேனி நிறத்திற்கும் சடை யின் நிறத்திற்கும் உவமையாகத் தீ இரு இடங்களில் காணப்பெறுகின்றது. இத்தகைய மரபு பக்தி இலக்கியங் களில் மிகுதியாகக் காணப்பெறுகின்றன.

## 1. 23. பரணதேவர்

நில வகைமை—நீர்நிலைகள் உவமைகளாக வந்தன ஏதும் இவர் பாடல்களில் காணப்பெறவில்லை.

வானியற்கையாக இரு குறிப்புகளைச் சுட்டலாம்.

"வானின் உருவானவர்"

"மாலை ஒளியானை"

என்பன 212 அவை.

சிவபெருமானுக்கு பிறர் உவமையாகக் கூறும்,

அந்திச் செவ்வானையே குறிப்பிடுகின்றார். பிற ஏதுமில்லை. தீயியற்கையில் சேரும் "தழலுருவர்" எனும் குறிப்பும் அவரின் நிறம்பற்றியன.

உயிரியற்கையில் இயங்குயிர்கள் உவமைகளாக ஏதும் வரவில்லை. திருவடிகட்கு உவமையாக வந்துள்ளது.

திருநீற்றின் நிறத்திற்கு ஒப்புமையாகப் பாலின் நிறமும் முத்தின் நிறமும் மூன்றிடங்களில் குறிப்பிடப் பெறுகின்றன.

இவர் குறிப்பிடுவன யாவும் மரபு வழிப்பட்டனவே ஆகும். திருமுறையாசிரியர்களுள் மிகக் குறைந்த உவமைகளைத் தந்தவருள் இவர் குறிப்பிடத்தக்கவராவார்.

இவருடைய நோக்கம் இறைவன் திருத்தலங்களைக் கூறி அவற்றை வணங்க வேண்டும் என்பதாகையால் இயற்கைப் பொருள்கள் இவர்தம் பாடல்களுள் அணிகளாகப் பெரிதும் வரவில்லை.

## 1..24. இளம்பெருமானடிகள்

### நிலவகைமை

"வரையின் திரள் போல் மேனி" என்றொரு குறிப்பு மட்டும் சிவபெருமானின் தோளுக்குத் தோற்றத்தாலும் வலிமையாலும் உவமையாக வந்துள்ளது. இப்படி மரபு வழிவந்த இதைத் தவிர பிற ஏதுமில்லை.

துன்பத்தைக் கடலாக உருவகப்படுத்தும் ஒரே உருவகம் மட்டும் கடல் பற்றியதாகும்.

நீர் நிலைகளிலும் சிறப்பாக குறிப்புகள் ஏதுமில்லை.

இயங்குயிர்களில் மான் கண் மட்டும் உமையின் கண்ணுக்கு உவமையாக ஒரேவொரு குறிப்பில் வந்துள்ளது.

இயங்கா உயிர்களில் தாமரை மலர் மட்டும் ஒரிடத்தில் சிவபெருமான் திருவடிகட்கு உவமையாக வந்துள்ளது.

சடையின் நிறத்திற்குத் தீயின் நிறத்தை ஓரிடத்திலும் நீற்றின் நிறத்திற்கு முத்தின் நிறத்தை ஓரிடத்திலும் உவமையாக்குகிறார்.

இவர் குறிப்பிடும் சில உவமைகளும் மரபு வழி வந்தனவே ஆகும். இவர் இயற்கை மீது கொண்ட குறைந்த ஈடுபாட்டைக் குறிக்கின்றன. திருமுறை ஆசிரியர் களில் குறைந்தளவில் இயற்கைப் பொருள் உவமைகளைத் தந்தவருள் இவரும் குறிப்பிடத்தக்கவராவார்.

## 1. 25. அதிராவடிகள்

இடும்பையைக் கடலாக உருவகப்படுத்தும் ஓரிடமும் யானை மதம் பொழியும் காட்சிக்கு "அருவி விலங்கல் மிசை இழிவதொக்கும்" என்று உவமை காட்டும் ஓரிடமும் நீர் நிலை வகையைச் சாரும்.

"கிளிபெற்ற வேழக்கன்று"

என்ற தொடரில் கிளியாக உமையம்மையும் வேழக்கன்றாக விநாயகனும் உருவகப்படுத்தப் பெற்றுள்ளது. உயிரியற்கை யில் இவை தவிர பிற ஏதுமில்லை.

திருமுறையாசிரியர்களில் மிகக்குறைந்த குறிப்புகள் தந்தவர் இவரே ஆவார். அச்சிலவும் மரபு வழி வந்தனவே ஆகும். இயற்கை மீது அவ்வளவாக ஈடு பாடின்மையை இது காட்டுகிறது.

## 1. 26. பட்டினத்தார்

### 1. 26. 1 நிலவகைமை

பவள மால் வரையாக விநாயகப் பெருமானை ஓரிடத் தில் இவர் குறிப்பிடுகிறார். இது உருவகமாக வந்துள்ளது.

மாடத்திற்கும் மலைக்கும் சிலேடையாக இவர் ஓரிடத்தில் அவற்றின் ஒப்புமையை விளக்குகிறார்.

இதுவன்றியும் மனத்தைக் கல்லாக் உருவகப்படுத்தும் இடமொன்றுளது. பிற குறிப்புகள் ஏதுமில்லை.

1. 26. 2. நீர்நிலைகள்

பிறப்பையும் வினையையும் காமத்தையும் ஞானத்தை யும் இறை அருளையும் இவர் கடலாக உருவகப்படுத்தி யுள்ளார், இத்தகையன திருநாவுக்கரசர், மாணிக்க வாசகர், திருமூலர் பாடல்களில் மிகையாகக் காணப்பெறு கின்றன. மரபு வழிப்பட்டன.

நிலமடந்தைக்கு கடலை ஓரிடத்தில் மேகலையாகவும் ஓரிடத்தில் உடையாகவும் குறிப்பிடுகிறார். நெல் நடு வோர் ஒலி, நெல் குவிப்போர் ஒலி, கருப்பாலை ஒலி ஆகியன கடலொலி போல் ஒலிக்கின்றன எனக் கடல் ஒலியை ஒப்புமையாகக் காட்டியுள்ளார்.

கடலின் விரிந்து பரந்த அளவிடற்கரிய பரப்பு, அளவிடற்கரிய ஆழம் உருவகப்படுத்தப் பெற்றன. கடலின் ஒலியும் இங்கு ஒப்புமையாக வந்துள்ளது.

அவையன்றியும் இறைவன் தன்மையும், உலக உயிர் களின் பிறப்பு இறப்பாம் தன்மைகளைப் பற்றியும் கடலை உவமைப்படுத்துவதின் மூலம் தெளிவுபடுத்துகிறார்.

நுரை, திரை முதலானவை கடலில் தோன்றிக் கடலி லேயே அடங்குவது போல் உலக உயிர்கள் யாவும் இறைவ னிடமிருந்து தோன்றி இறைவனிடத்திலேயே அடங்கு கின்றன என்று குறிப்பிடுகிறார். கடலலைகள், கடல்நுரை தோன்றி மறையும் காட்சி இவரைக் கவர்ந்தது. இத்தகைய மெய்யுணர்வைத்தரும் கருத்தை எழுவித்தது. மேலும் உடலைக் கடலாகவும் ஓரிடத்தில் காரணங்களோடு உருவகப்படுத்தி உள்ளார்.[213]

இவை இறையுணர்வுப் பகுதியில் விளக்கமாக உள்ளன.

அருவி : கண்ணீரை அருவியாக உருவகப்படுத்தும் இடம் ஒன்றுளது. உள்ளன்போடு வணங்கும் பக்தர்களின் கண்ணீரைக் குறிப்பிடுகிறார். தாரை தாரையாக விழும் கண்ணீரின் தோற்றத்திற்கு இது உவமையானது.

வாவி. இதயத்தை வாவியாக ஓரிடத்தில் உருவகப் படுத்தி உள்ளார். அங்கு அன்பாகிய நீர் நிறைந்துள்ள தாகக் குறிப்பிடுகிறார்.

1. 26. 3. உயிரியற்கை

1. 26- 3-1 இயங்குயிர்கள்

1. நாய் : இவர் தன்னை நாயொடு ஒப்பிட்டுரைக் கும் இடங்கள் இவர் தம் பாடல்களுள் ஐந்திடங்கள் உள. தன் இழிநிலையை குறிப்பதற்கு நாயை ஒப்புமையாகக் காட்டுகிறார். தலைவன் மேல் அன்பு, நன்றி மறவாமை முதலிய இல்லாமை, சிற்றின்ப வேட்கை, அசுத்தங்களை தின்னல், முதலானவை இருத்தல் பற்றித் தன்னை அவ்வாறு கூறுகிறார். உடன் பாட்டு வகையாலும், எதிர் மறை வகையாலும் நாயின் குணங்கள் உவமையாகின்றன. இத்தகு குறிப்புகள் நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் பாடல்களில் காணப் பெறுகின்றன.

2. யானை : தன் மனதை யானை போல் உள்ள தாகக் குறிப்பிடுகிறார். "ஆசையாம் பரிசத்தியானை போல்"[214] என்பது இதுவும் தன்னிலை பற்றி எழுந்ததே.

3. மான் : உமையம்மையை மானாக இரு இடங் களில் உவமைப்படுத்துகிறார். உமையம்மையின் கண் ணுக்கு ஓரிடத்தில் மகளிர்க்கண்ணுக்கு ஓரிடத்தும் மானின் கண் உவமையாக வந்துள்ளது. இவை மரபு வழிபட்டனவே ஆகும்.

4. பசு : கறவை நினைந்த கன்றென இரங்கி
"...அடியார்க்கு
அருள்சுரந் தளிக்கும் அற்புதக் கூத்தன்"[215]

என்னும் குறிப்பில் இறைவனோடு பசுவும் அடியார்களைக் கன்றோடும் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

இத்தகைய தாய்ப் பசுவும் கன்றும் வந்த உவமைகள், நக்கீரதேவர் பாடல்களில் காணப்படுகிறது.

தன்னிலை உணர்த்துவன அதிகம். பெரும்பாலும் பிறர் கூறியனவே வந்துள்ளன.

1.26.3.2. இயங்கா உயிர்

1. மரம் : உமையம்மையின் தோளுக்கு உவமையாக வேய் ஓரிடத்தில் உவமையாக வந்துள்ளது. இது மரபு வழி வந்ததே.

2. கொம்பு : தலைவிக்கு உவமையாக கொம்பு ஓரிடத்திலும் வந்துள்ளன. இதுவும் மரபுவழி பட்டனவே.

3. தளிர் : தலைவியின் அடிகளுக்கு ஈரிடங்களிலும் தலைவியின் மேனிநிறத்திற்கு ஓரிடத்திற்கும் உவமையாக வந்துள்ளன. இவையன்றிக் கருணையை இளந்தளிராக உருவகப்படுத்தும் இடமொன்றும் உள்ளது. இத்தகு உருவகத்தை இவர் மட்டுமே பயன்படுகிறார். பெரும்பாலும் பிறர் கருணையைக் கடலாகவும் கனியாகவும் உருவகப்படுத்தியுள்ளனர். பொதுவாகத் தளிர் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

4. மலர் : மலர் எனும் பொதுச் சொல் வந்த இடங்கள் மூன்றாகும். இறைவன் திருவடிக்கு ஈரிடங்களிலும், நெற்றிக் கண்ணுக்கு ஓரிடத்திலும் மலரை உவமைபடுத்துகிறார்.

தாமரை : சிவன் திருவடிகட்கு ஆறிடங்களிலும், முகத்திற்கு ஓரிடத்தும் கண்களுக்கு ஓரிடத்தும், உமையம்மையின் முகத்திற்கு ஓரிடத்திலும் கைகளுக்கு ஓரிடத்தும் தாமரை உவமையாக வந்துள்ளது. இதுவன்றியும் சிந்தையைத் தாமரையாக ஓரிடத்தில் உருவகமாகச் செய்துள்ளார். இவை யாவும் மரபு வழி வந்தனவே. அழகு, நிறம் பற்றி உவமைகளாக வந்துள்ளன.

5. ஆம்பல் : மகளிர் வாய்க்கும் உமையம்மையின் வாய்க்கும் இம்மலர் மூன்றிடங்களில் நிறம் பற்றி உவமிக்கப் பெற்றுள்ளது செவ்வாம்பலே இங்கு குறிக்கப் பெறுவதாகும்.

6. குவளை : உமையம்மையின் கண்களுக்கு மூன்றிடங்களிலும் தலைவியின் கண்களுக்கு ஈரிடங்களிலும் இம்மலர் உவமையாக வந்துள்ளது. இவையும் நிறம் பற்றி வந்தனவே.

7. அனிச்சமலர் : இம்மலரை இவர் மட்டுமே குறிப்பிடுகிறார். இத்தகு உவமை சங்க இலக்கியங்களில் காணப்பெறுகின்றன. சிவபெருமானின் இடப்பால் திருவடிக்கு உவமையாக இம்மலர் கூறப்பெற்றுள்ளது மென்மைத் தன்மை இடப்பால் திருவடிக்கு உவமிக்கப் பெற்றுள்ளது. இடப்பால் திருவடி உமையின் திருவடியாகையால் அனிச்சமலர் உவமையானது. இம்மலரோடு பஞ்சும் குறிக்கப் பெற்றுள்ளமை மென்மை கருதியதே ஆகும்.

8. இலவமலர் : தலைவியின் இதழ்களின் நிறத்திற்கு இலவமலரை உவமையாக ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். இது சங்கமரபு, செம்மை நிறம் ஒப்புமை காட்டப் பெற்றுள்ளது.

9. கொன்றை : கொன்றை நிலம் பொன்னோடு ஒப்புமை காட்டப்பெற்றுள்ளது. அதன் மஞ்சள் நிறம்

சங்கப் புலவர்களையும் திருமுறையாசிரியர்களையும் பெரிதும் கவர்ந்துள்ளது.

"பொன் அலர்ந்த கொன்றை"216

என்பது இவரது தொடராகும்.

மலர்களின் மென்மையும், அழகும், நிறமும் இங்கு உவமைகளாக வந்துள்ளன.

10. கனி : கருணையும் முத்தியையும் கனியாக ஈரிடங்களில் உருவகப்படுத்தியுள்ளார். அதன் பயன் கருதி உருவகமாக அவை அமைந்தன எனலாம். எட்டிக் கனியை விரும்புதலை ஒத்தது என்றார். அக்கனியின் கசப்பும் உடலுக்குத் தீங்குதரும் தன்மையும் இங்கு ஒப்புமையாயின. சைவ சித்தாந்தத்தை நெல்லிக்கனி யாகக் காட்டுகிறார்.

11. விதை : 'எள்ளுக்குள் எண்ணெய் போல' என்னும் உவமைத் தொடர் பரத்தையரின் போகத்திற்கு உவமையாக வந்துள்ளது. பிற குறிப்புகள் ஏதும் இல்லை.

1.26.3.2 பறவைகள்

அன்னம், கிளி, குயில், மயில், விட்டில்பூச்சி, புள், வண்டு முதலிய பறவைகள் அணிகளாக வந்துள்ளன.

அன்னம் உமையம்மைக்கு ஓரிடத்திலும் கிளியின் குரல் உமையம்மையின் மொழிக்கு ஓரிடத்திலும் குயிலின் குரலினிமை உமையம்மையின் குரலின்மைக்கு மூன்றிடங் களிலும் குயிலின் சாயல் உமையம்மையின் சாயலுக்கு நான்கிடங்களிலும் குயிலின் சாயல் உமையம்மையின் சாயலுக்கு நான்கிடங்களிலும் உவமைகளாகக் காட்டப் பெற்றுள்ளன. இவை யாவும் சங்க இலக்கியந்தொட்டு வரும் மரபாகும்.

தன்னிலைக்குக் காட்சியால் கெடும் விட்டிலையும் புள்ளையும் மோந்தலால் கெடும் வண்டையும் உவமைப்படுத்துகிறார்.217 இவை யாவும் உறுவது உணராது செல்வழிச் சேர்வன. அத்தகு நிலையில் தானும் உலக இச்சைகளில் தொடர்பு கொள்வதாகக் குறிப்பிட்டுள்ளார்.

நீர வாழ்வனவற்றுள் சேலை மட்டும் தலைவியின் கண்களுக்கு ஓரிடத்தில் உவமையாகக் கூறியுள்ளார். பிறபு ஏதுமில்லை. பாம்பு மகளிர் இடைக்கும் அல்குலுக்கும் ஈரிடங்களில் உவமையாக வந்துள்ளது. இதுவன்றியும் பாம்பின் வாய் தேரையைக் காட்டிலும் உலகியலை உணர்த்தும் குறிப்பு ஒன்றுள்ளது.

### 1.26.4 விண் இயற்கை

கதிரவன், மதி, முகில், மின்னல், இடி ஆகியன உவமைகளாக வந்துள்ளன.

1. கதிரவன் : சிவபெருமான் நெற்றிக் கண்ணாகக் கதிரவன், மதி, தீ ஆகிய முச்சுடர் உருவகப்படுத்தப் பெற்றுள்ளன. இதுவன்றியும் முகம் கதிரவன் ஒளியொடு ஒப்புமைப்படுத்தப்பெற்ற பிறிதோரிடம் உளது.

இவை இறைவனின் படைப்புத்தன்மையையும் மாசறுக்கும் செயலையும் குறிப்பால் உணர்த்துகின்றன.

2. மதி : மங்கையர் நுதலை ஓரிடத்தும் மங்கையர் புன்னகையை ஓரிடத்தும் மதியொடு உவமைப்படுத்துகிறார். நுதலுக்கு வடிவாலும் நகைப்புக்கு ஒளியாலும், குளிர்ச்சியாலும் மதி ஒப்புமையுடையதாகின்றது. இத்தகையன சங்க இலக்கிய மரபு.

3. முகில் : இறைவனுக்கும் அருளுக்கும் ஈரிடங்களிலும் இறைவன் திருமிடற்றினுக்கு ஈரிடங்களிலும் மேகத்தை உவமைப்படுத்துகிறார். மிடற்றுக்கு நிறத்தால்

மேகம் உவமையாகிறது. இறைவனுக்கும் அருளுக்கும். மேகம் ஒப்பாதல் கைம்மாறு கருதாது பயன் தருதல் பற்றியதாகும். கைம்மாறு கருதாத உதவிக்கு மேகம் ஒப்பாகக் கூறப்பெறுதல் பண்டைய மரபின் வழி வந்தது.

"பயிரார் புயல்பெற்றதென்ன... தம்மரும்[218]

என்பது அவற்றுள் ஒன்று.

4. மின்னல் : மின்னலைச் சிவபெருமானுக்கு ஓரிடத்தும், சிவன் சடைக்கு மூன்றிடங்களிலும் மகளிரின் இடைக்கு ஈரிடங்களிலும் உவமையாகக் காட்டுகிறார். சிவபெருமானுக்கு மின்னல் உவமையாதலால் குறியீடாகும் இடைக்கு உவமையாதல் நிறம் பற்றியதாகும். இடைக்கு உவமையாதல் வடிவு பற்றியதாகும்.

இவையன்றியும் "மின்னின் அனைய செல்வம்"[219] மின்போல் பிறப்பும் என்னும் வனம் இயற்கை மூலம் நிலையாமையை உணர்த்துகின்றார். இவை அவ்வியலில் விரிவாக நோக்கப் பெறும்.

5. அடி : சிங்கத்தின் குரலுக்கும் ஏற்றின் குரலுக்கும் இடியின் பேரோசையை உவமையாக இவர் இரண்டிடங்களில் கூறுகிறார். இவை மரபு வழிபட்டன.

1. 26. 5. மணி :

சடையின் நிறத்திற்குப் பவளத்தின் நிறம் ஓரிடத்தும் மகளிர் நகைப்பிற்கு முத்தின் நிறம் ஓரிடத்தும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளன. இவை இரண்டும் நிறம் பற்றி வந்தவை. மரபு வழிப்பட்டவை.

1. 26. 6. காலவியற்கை

இருள் மட்டும் இவர் பாடல்களுள் உவமையாகவும் உருவகமாகவும் வந்துள்ளது. துன்பத்தை இருளாக ஈரிடங்

களில்[220] உருவகப்படுத்தியுள்ளார். மயக்கத்தையும் இருளாக—உருவகமாகக் காட்டியுள்ளார். இருளைப் பிறிதொரு இடத்தில் அந்தகனாக உருவகப்படுத்தியுள்ளார். தலைவியைத் துன்புறுத்தும் நாயக நாயகி பாவச் செய்யுளின் பொருட்டாகும். இருளை அந்தகனாகக் காட்டுதலும் பழமரபே ஆகும். இவையன்றியும் ஓரிடத்தில் சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு உவமையாக இருளைக் கூறியுள்ளார்.

## 1. 26. 7. தீயியற்கை

சடைக்கு உவமையாக ஓரிடத்தில்-தீயைக் கூறியுள்ளார். இது பக்தி இலக்கிய மரபாக வந்து விட்டது,

## 1. 27. நம்பியாண்டார் நம்பி

### 1. 27. 1. நிலவகைமை

மலைமட்டும் அணியாக வந்துள்ளது.

மலை : சிவபெருமானை மாலையாக ஓரிடத்தில் உருவகமாகக் கூறுகிறார். திருஞான சம்பந்தரின் தோளுக்கு உவமையாக மலையைக் குறிப்பிடுகின்றார். மேலும் யானைக்கு மலையை உவமையாக கூறும் இடங்கள் இரண்டுள. மலையின் தோற்றமும் வலிமையும் நிலையிற்றிரியா தன்மையும் இங்கு உவமைகளாயின.

### 1. 27. 2. நீர் நிலைகள்

நீர் நிலைகளில் கடல், அருவி ஆகிய இரண்டும் அணி நலன்களில் வந்துள்ளன.

#### 1. கடல்

அருளையும் பிறவியையும் கடலாக உருவகப்படுத்தியுள்ளார். அருளை ஓரிடத்தும் பிறவியை நான்கிடத்தும்

உருவகப்படுத்தியுள்ளார் இது மிகப் பழைய மரபு. பக்தி இலக்கியங்கள் யாவற்றிலும் இம்மரபு பெரிதும் காணப் பெறுகிறது. பொய்ம்மைகளின் மிகுதியைக் காட்டுவதற் காகவும் அதை ஓரிடத்தில் மலையொடு உவமிக்கிறார்.

"கடலன்ன பொய்ம்மைகள்"221

என்பது அவ்வுவமை அளவிற் பெரிய பரப்பு அளவிற்கரிய ஆழம் நோக்கி, கடல் இங்கு உவமையாகவும் உருவகமாக வும் அவற்றுக்கு அமைந்தன.

2. அருவி

"கண்களிலிருந்து நீர் பெருகுவதை இவர் கண்ணருவி சொரிந்தரும்" என்று குறிப்பிடுகிறார். தொடர்ந்த நீர் ஒழுக்கின் தோற்றமே இங்கு உவமையானது.

1. 27-3. விண் இயற்கை

மேகம், மின்னல் எனுமிரண்டு மட்டும் அவரால் உவமைகளாகப் பெற்றுள்ளன.

1. மேகம் : திருமாலின் நிறத்திற்கு மேகத்தை ஒப்பிடல் சங்க காலந் தொட்டு வருகின்ற மரபு. இதை இவர் மூன்று இடங்களில் குறிப்பிடுகிறார். கைம்மாறு கருதாத தன்மைக்கும் மேகத்தைக் குறிப்பிடல் பழமரபு. அத்தகைய மரபை இவரும் பின்பற்றுகிறார்.

"புயலரர் தருகையினான்"222

என்பது அது.

2. மின்னல்

தலைவியின் இடைக்கு வடிவளவில் ஓரிடத்தும் தலைவியின் நகைக்கு ஒளியளவில், நிறவளவில் ஓரிடத்தும் சிவபெருமானின் சடைக்கு செந்நிற ஒளியளவில் ஓரிடத்தும்

உவமையாக மின்னல் காணப்பெறுகிறது. இவை மரபு வழிப்பட்டன.

காலவியற்கை : சிவன் திருமேனி நிறத்தை அந்திச் செம்மேனி எனக் குறிப்பிடுகிறார். மாலைக்கால அழகினை இவரும் குறிப்பிடுகிறார். இருள் முதலான பிற பிரிவுகள் பற்றிய குறிப்பில்லை.

1. 27. 4. உயிரியற்கை

1. 27. 4. 1. இயங்கா உயிர்கள்

1. மரம் :

இவர் இவ்வகையில் பனை, ஒதியம் எனும் மரங்களைக் குறிப்பிடுகிறார். யானை முகன் கைக்குப் பனையை உவமையாகக் கூறுகிறார். தூதிக்கைக்குப் பனையைக் குறிப்பிடல் பழைய மரபே ஆகும்.

தலைவி தோளுக்கு வேய் உவமையாக வந்துள்ளது. ஒதிய மரம், முருங்கை மரம் போன்ற மரங்கள் சிறிய பளு விலும் ஒடிந்து விழும் தன்மை உடையன! காழியினை நினைக்காதவர் ஒதியம்பனை போல விழுவர் என்று ஓரிடத் தில் குறிப்பிடுகிறார். ஒதிய மரத்தின் இவ்வியல்பினை உவமையாகக் கூறும் தன்மை இவரிடத்து மட்டுமே காணப் பெறுகிறது. இவருடைய கூர்ந்த நோக்கை இது உணர்த்து கின்றது.[223]

2. கொடி, கொம்பு

உமையம்மை இடைக்கும் வள்ளியம்மை இடைக்கும் மகளிர் இடைக்கும் பூம்பாவை இடைக்கும் கொம்பு, கொடி என்பனவற்றை உவமையாகக் கூறுகிறார். இவை வடிவு, பற்றி வந்த உவமைகளாகும். இத்தகையன ஆறு இடங்களில் காணப் பெறுகின்றன. இவற்றுள் இரு இடங் களில் சிறப்பாக வஞ்சிக் கொடியைக் குறிப்பிடுகிறார். இவையாவும் பழமரபுகளே ஆகும்.

3. தளிர்

சிவன் திருவடிகளைத் தளிரொடு ஓரிடத்தில் ஒப்பிட்டுக் காட்டுகிறார். மென்மையும் பொலிவும் கொண்ட தளிரின் தன்மை இங்கு உவமை ஆயின.

4, மலர்

சிவபெருமான் திருவடிக்கும் பக்தர், மகளிர் கைகட்கும் கண்களுக்கு மலரை உவமையாகவும், உருவகமாகவும் இவர் எட்டு இடங்களில் இவர் குறிப்பிடுகிறார். இவை யாவும் மலர் எனும் பொதுவகையில் அமைந்தன.

தாமரை : சிவபெருமான் திருவடிகட்கு ஐந்திடங்களி லும் திருவடிக்கு ஓரிடத்தும் உமையம்மையின் கொங்கைக்கு ஓரிடத்தும் தாமரை உவமையாக வந்துள்ளன. இவை யாவும் மரபு வழிப்பட்டனவாகும்.

சிவபெருமான் நகைக்குக் குருந்த மலரும் உமையம்மை யின் நகைக்கு முல்லையும் முறையே ஒவ்வோரிடங்களில் வந்துள்ளன. குருந்த மலரை நகைக்கு ஒப்பிடுவது இவர் மட்டுமே கூறும் குறிப்பாகும்! அம்மலர்களின் வெண்மை நிறமே இங்கு ஒப்பாகும்.

தலைவியின் வாய்க்கு, இதழுக்கு இலவமலரும் பூம்பாவை கண்களுக்கு குவளை மலரும் தலைவியின் கைகட்குக் காந்தள் மலரும் முறையே ஒவ்வோர் இடங் களில் உவமைகளாக வந்துள்ளன. இவற்றுள் காந்தள் மட்டும் வடிவம் பற்றி உவமையாக வந்துள்ளது.

பிறவற்றிற்கு மலர்களை ஒப்பிடுவது மட்டுமல்லாமல் இவரும் தேவார மூவர்களைப் போல மலர்களுக்குப் பிறவற்றை ஒப்பிடுகிறார். கொன்றை, தோன்றி, காந்தள் என்பன அவ்வகையில் வருகின்றன. பொன் போல மலர் கின்ற கொன்றையை ஈரிடங்களிலும் தீயெனப்பூத்த தோன்றியை ஓரிடத்திலும் மகளிர் கைகளைப் போல

மலர்ந்த காந்தளை ஓரிடத்திலும் இவர் குறிப்பிடுகிறார். இவை மலர்களின் நிற அழகையும் வடிவ அழகையும் சிறப்பிப்பன. மேலும் சங்க இலக்கியந் தொட்டே இத்தகையன பயின்று வந்துள்ளன.

5. காய் : மாவின் வடு தலைவியின் கண்ணுக்கு உவமையாக ஓரிடத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. குடும்பையை தலைவி கொங்கைக்கு ஒப்பிடும் இடமும் ஒன்றுளது. இவையும் சங்க மரபை ஒட்டியதே ஆகும்.

6. கனி : இவர் களங்கனியை மட்டும் உவமையாக ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு உவமையாக அதன் கரிய நிறம் வந்துள்ளது. இவர் மட்டுமே திருமுறையாசிரியர்களில் இவ்வுவமையைப் பயன்படுத்துகிறார்.

7. பஞ்சு : தலைவியின் அடிகளுக்கு பஞ்சு ஓரிடத்தில் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. மென்மைத்தன்மை இங்கு உவமையானது.

1. 27. 4. 2. இயங்குயிர்கள்

1. 27. 4. 2. 1 விலங்குகள்

மான், களிறு, சிங்கம், நாய், யானை, முதலிய விலங்குகள் அணிகளாக வந்துள்ளன.

1. மான் : உமையம்மையாக ஓரிடத்து மான் உருவகப்படுத்தப் பெற்றுள்ளது. உமையம்மையின் கண்ணுக்கு ஈரிடங்களிலும் தலைவி கண்ணுக்கு ஓரிடத்தும் சிறுமியர் கண்ணுக்கு ஓரிடத்தும் மானின் கண்கள் உவமைகளாயின. இது பழமரபு.

விநாயகனை யானையாக வடிவம்பற்றி உருவகப் படுத்துகிறார். மேலும் முருகனை ஓரிடத்தும் திருஞான சம்பந்தரை ஈரிடங்களிலும் சிங்கமாக உருவகப்படுத்தி

யுள்ளார். திருநாவுக்கரசர் மாணிக்கவாசகர் பட்டினத்தார் போன்று இவரும் தன்னிலை பற்றிக் கூறும்போது நாயை உவமைப்படுத்துகிறார். இத்தகைய குறிப்பு ஓரிடத்தில் மட்டும் காணப்பெறுகின்றது.

1. 27. 4. 2. 2 பறவைகள்

தலைவியைக் கிளியாக ஓரிடத்திலும் உமையம்மையை மயிலாக ஓரிடத்திலும் உருவகப்படுத்தியுள்ளார். இவை மரபுவழி. பறவைகள் பற்றிய குறிப்புகள் மிகச் சில வாகவே இவருடைய பாடல்களில் காணப்பெறுகின்றன.

1. 27. 4. 2. 3 நீர்வாழ்வன

மகளிர் கண்களுக்கு கயல், சேல், கெண்டை முதலான மீன்வகைகளை இவர் உவமையாக்குகிறார். கயல் நான்கு இடங்களிலும் கெண்டை ஈரிடங்களிலும் சேல் ஓரிடத்தும் மகளிர் கண்களுக்கு உவமைகளாக வந்துள்ளன. இவை மரபு வழிப் பட்டனவே ஆகும்.

1. 27. 5 மணி

இவர் பாடல்களுள் மகளிர் நகைக்கு முத்தை ஓரிடத்தும் வாயின் செம்மைக்கு பவளத்தை ஓரிடத்தும் உவமைப்படுத்தப் பெற்றுள்ளது.

1. 27. 6 பிற

தேன் : மகளிர் மொழியையும் உமையம்மையின் மொழியையும் தேனோடு ஒப்பிட்டுக் காட்டும் இடங்கள் இரண்டுள. இனிமைகருதி தேன் உவமையாயிற்று. சிவனைத் தேனென ஈரிடங்களில் இவர் உருவகப் படுத்தி யுள்ளார். இனிமை தருதலொடு இன்மருந்தாதலும் இங்குக் கருத்தாகும். இனிமைக்கு ஒப்பாக மற்றுமொரு

இடத்தில் சிவனுக்குக் கரும்பின் இனிமையைக் காட்டுகிறார்.

"கரும்பினும் இனியன்"[224]

என்பது இவையும் மரபு வழிப்பட்டதே ஆகும்.

பதினோறாம் திருமுறையில் சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரதேவநாயனார், பட்டினத்தடிகள் ஆகியோர்க்கு அடுத்த நிலையில் மிகையான அணிகளில் இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தியவர் இவர் ஆவார். இவருடையன பற்றிய பல தேவார மூவர்கள் பாடல்களிலும் சங்க இலக்கியத்திலும் காணப்பெறுகின்றன. இயங்கா உயிர்களில் ஈடுபாடு காட்டிய அளவு இவர் இயங்குயிர்களில் ஈடுபாடு காட்டவில்லை.

## 2. 8. சேக்கிழார் பாடல்களில் அணிகளாக வந்த இயற்கைப் பொருள்கள்

### 1. 28. 7 நிலை வகைமை

நிலை வகையில் மணல், மலை எனுமிரண்டு மட்டும் அணிகளாக வந்துள்ளன.

1. மணல் : இது அறல் எனக் குறிக்கப் பெற்றுள்ளது மகளிர் கூந்தலுக்கு அறலை உவமையாகக் கூறுதல் சங்க காலந்தொட்டு வருகின்ற இலக்கிய மரபு ஆகும். இவரும் மகளிர் கூந்தலுக்கும் திருநீலகண்டர் மனைவியின் கூந்தலுக்கும் உவமையாக ஈரிடங்களில் அறலை உவமையாகக் கூறுகிறார். கருமணலே இங்கு உவமையாகக் கொள்ளத்தக்கதாகும். இது நிறவுவமை வகையின் பாற்படும்.

2. மலை : மலையின் தோற்றம் இங்கு இவர் பாடல்களில் உவமையாக வந்துள்ளது. சேரமான் பெருமாள் நாயனார், புகழ்ச்சோழர், கருவூர் மன்னன், கண்ணப்பர்,

கண்ணப்பரின் தந்தை நாகன், ஏயர்கோன் ஆகியோர்களின் தோள்களுக்கு மலையை ஆறிடங்களில் உவமையாகக் குறிப்பிடுகிறார். மலையின் தோற்றமும், நிலையிற்றிரியா இயல்பும் வலிமையும் இங்கு உவமாகக் கூறப்பெற்றன. "பருவரைத் தடந்தோள் மன்னன்" என்பது அவற்றுள் ஒன்று. மன்னர்களின் தோள்களுக்கு வலிமை கருதித் தோள்களை உவமையாகக் கூறுதல் சங்க இலக்கியந் தொட்டு வருகின்ற மரபாகும்.

மேலும் யானைக்கு உவமையாக ஏழிடங்களில் மலை உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. இதுவும் தொன்று தொட்டு வரும் மரபை ஒட்டியதே ஆகும். "மைத் தடங் குன்று போலும் மதக்களிறு" என்பது அவற்றுள் ஒன்று. இவையும் தோற்றம் பற்றி வந்தனவே ஆகும்.

இன்னும் மாடமாளிகைகட்கு இவர் மலையை ஐந்திடங்களில் உவமையாகக் கூறுகிறார். 'இமலிய எடுத்த நெடு வரைகள் போல இலங்குசுதைத் தவள மாளிகை' என்பது அவற்றுள் ஒன்று. இவையும் தோற்றம் பற்றி எழுந்தனவே. மாளிகைகளின் உயரம் பற்றியும் இதைக் கூறலாம்.

இவையன்றியும் பாலையரின் முலைகட்கு ஓரிடத்தும் பிணக்குவியலுக்கு ஓரிடத்திலும் மலை உவமையாக வந்துள்ளது. இவை யாவும் தோற்றம் பற்றி எழுந்தனவே.

### 1. 28. 2. நீர்நிலைகள்

நீர் நிலைகளில் இவர் பாடல்களில் கடல், ஆறு, அருவி, வாவி முதலியன உவமைகளாகவும் உருவகங்களாக வும் வந்துள்ளன.

1. கடல்: அருள், மாயம், தவம், அன்பு, துன்பம், குணம், ஆனந்தம் (இன்பம்) பிறவி, போர், போரில் ஓடும் குருதி, சுற்றம், புலவி ஆகியனவற்றை இவர் கடலாக

உருவகப்படுத்தியுள்ளார். இவை யாவும் மரபு வழிந்தனவே.

"குணப் பெருங்கடல்
மாயப் பெருங்கடல்"

என்பன அவற்றுள் சில.

இவை இரண்டும் இறைவனைக் குறிக்கவென வந்தன. 'கடலே' இறைவனைக் கடலாக உருவகப் படுத்திய இடமொன்றும் உளது. அன்பு பெருகுதலை இவர் பொங்கோதத்திற்கு ஒப்பிடுகிறார்.

கடல் அவர் பாடல்களில் ஐந்திடங்களில் படைக்கு உவமையாகக் கூறப் பெற்றுள்ளன. தொண்டர் கூட்டங் களின் மிகுதியைக் குறிப்பிடவும் அவர் கடலை உவமைப் படுத்துகிறார். இத்தகையன மூன்றிடங்களில் காணப் பெறுகின்றன.

ஆற்று நீரின் மிகுதியைக் குறிப்பிட இவர் கடலை ஈரிடங்களில் உவமையாக்கிறார். பெண்களின் கூட்ட மிகுதியைக் குறிப்பிடும் ஓரிடத்தில் இவர் கடலை உவமைப் படுத்துகிறார், இவை யாவும் கடலின் தோற்றம் பற்றி எழுந்தன.

யானையின் பிளிறலுக்கும் தொண்டர் கூறும் அரகர வெனும் ஓசைக்கும் சின்னம், சங்கு முதலிய இன்னிசை இயங்களின் ஒலிக்கும் கடலொலி நான்கிடங்களில் உவமை யாகக் கருதுகிறார். இவை கடலின் ஒலி பற்றி எழுந்தன.

கடலின் தோற்றம் ஆழம், பரந்த பரப்பு, ஒலி முதலிய இயல்பும் உவமையாகவும் உருவகங்களாகவும் வந் துள்ளன.

2. ஆறு : ஆறு உவமையாக வந்துள்ள இடமாகும். அவருடைய படை களிந்தி கன்னிக்கு ஒப்பிடப்பெற் றுள்ளது.

3. அருவி : முன்னர் யானைக்கு மலையை ஒப்புமை கூறுவர். யானை மதத்திற்கு மலை வீழருவியையும் உவமை யாகக் கூறுகிறார். இத்தகைய மூன்றிடங்களில் வந்துள் ளன. 'வாரும் மும்முதத் தருவி வெள்ளானை' மலையி லிருந்து வரும் அருவியின் நீரொழுக்கு இங்கு உவமையாக வந்துள்ளது. இது தோற்றம் பற்றியது.

கண்ணீரை அருவியாக உருவகப்படுத்தும் மரபு மிகப் பழமரபாகும். இத்தகையன தேவாரமூவர் பாடல்களிலும் காணப்பெறுகின்றன. இவர் தொண்டர்களின் கண்ணீரை அருவியாக பத்தொன்பதிடங்களில் உருவகப்படுத்தி உள்ளார்.

'கண்ணருவி பாய்ந்து' என்பது அவற்றுள் ஒன்று. அருவி நீரொழுக்கே இங்கும் உருவகமாக அமையக் காரண மானது.

4. குளம் : இவர் வாவி எனும் சொல்லால் இதைக் குறிப்பிடுகிறார்.

'இருகண் பம்பு தாரைநீர் வாவியிற்
படிந்தெழும் அடியார்[225]

எனும் ஒரு குறிப்பு. கண்ணீரை வாவியாக உருவகப் படுத்தியதாகும். நாவுக்கரசரின் கண்ணீர் இங்கு வாவி யாக உருகப்படுத்தப் பெற்றுள்ளது. கண்ணீரின் மிகுதி யைக் குறித்த தோற்றம் பற்றியது இது.

5. வெள்ளம் : இவையன்றி 'வெள்ளம்' என்ற சொல்லால் இவர் பல இடங்களில் நீரைக் குறிப்பிடு கிறார்.

பள்ளத்தை நோக்கிச் செல்லும் நீரின் இயல்பை இறைவன் மீதெழும் அன்புக்கு ஈரிடங்களில் உவமைப் படுத்துகிறார். கருணையைக் கடலாக உருவகப்படுத்திய இவர் வெள்ளமாகவும் ஈரிடங்களில் உருவகப்படுத்தி

உள்ளார். இன்பத்தையும் அவ்வாறே ஓரிடத்தில் கடலாக உருவகப் படுத்துகிறார். அணையை நோக்கிச் செல்லும் நீரின் இயல்பை (ஆற்றலை) இறைவன் மீதெழும் காதலுக்கு உவமைப்படுத்துகிறார். அன்பின் பெருக்கினைக் குறிக்க நீரின் ஆற்றல் உவமையாக வந்துள்ளது. இவை யாவும் நீரின் ஆற்றல் பற்றியனவே ஆகும்.

கடலின் விரிந்த பரப்பு, அளவிடற்கரிய ஆழம் முதலிய இயல்புகளும், அருவியின் நீரொழுக்கும், வாவியின் நீர் நிறை தன்மையும் தோற்றம் பற்றியன. கடலொலி ஒலி பற்றிய செவிப் புலனாக வந்தது. நீரின் ஆற்றல், செயல் அல்லது இயல்பு பற்றி எழுந்தது எனலாம். நீரின் ஆற்றலைத் திருமுறை ஆசிரியர்களில் இவர் மட்டும் குறிப்பாக அணையை தூக்கிச் செல்லும் வெள்ளத்தை உவமையாகக் காட்டுகிறார். பிற யாவும் பெரும்பாலும் திருமுறையாசிரியர்கள் குறிப்பிடுவனவே. மரபு வழி வந்தனவே ஆகும்.

## 1.28.3. விண் இயற்கை

வான், கதிரவன், திங்கள், மேகம், மின்னல், இடி மழை முதலிய விண் இயற்கைகள் உவமைகளாகவும், உருவகங்களாகவும் இவர் பாடல்களுள் வந்துள்ளன.

1. வான் : உயர்ந்த, நிறைந்த மகிழ்ச்சிக்கு வானை ஓரிடத்தில் இவர் உவமையாகக் கூறியுள்ளார். 'வானளவு நிறைந்த பெருமன மகிழ்ச்சி' என்பது வானின் உயர்ச்சியும் அகன்ற பரப்பும் ஆகியன இங்கு உவமையானது. இவ்வொரு குறிப்பு மட்டும் வான் உவமையாக வந்துள்ளதாகும். இத்தகைய குறிப்பை இவர் மட்டுமே தருகிறார்.

2. கதிரவன் : கதிரவன் இருளைப் போக்கும் செயல் சரிடங்களில் உவமையாக வந்துள்ளது. அகவிருள் போக்கும் பெரிய புராணத்தின் தன்மைக்கும், மருணீக்கியார் பிறப்புக்கும் ஒப்புமையாக இச்செயல் கூறப்பெற்றுள்ளது.

வினையுவமாக, இவ்விரண்டையும் கொள்ளவேண்டும். அங்கும் ஞானசம்பந்தரை சுடர்க் கொழுந்தாக உருவமாக்கிக் காட்டும் குறிப்பும் இவ்வகையிலேயே உள்ளது.

கதிரவன் ஒளியின் அழகுத் தோற்றம் மூன்று இடங்களில் உவமையாகக் குறிப்பிடுகிறார். அதிபத்தர் வலையிற் பட்ட பொன் மீனுக்கும், மனுநீதிச் சோழன் மனைவிக்கும் வெண்பட்டின் நிறத்திற்கும் உவமையாக முறையே ஒவ்வோரிடங்களில் உவமையாக கதிரவன் ஒளியைக் குறிப்பிடுகிறார்.

கதிரவன் கீழ்த்திசையில் எழும் தோற்றம் மூன்றிடங்களில் தற்குறிப்பேற்ற அணியின் வகையாக இவ்வாசிரியரால் கூறப்பெற்றுள்ளது. இவ்வாசிரியர் காலையில் கதிரவன் இயல்பாக எழும் தோற்றத்தை இன்னதற்காக எழுந்தது எனும் தன் குறிப்பை ஏற்றிச் சொல்வதால் இவை தற்குறிப் பேற்றமாக அமைந்தன. இத்தகைய குறிப்புகளை காப்பியங்களில் மிகுதியாகக் காண முடியும். சுந்தரர் மணக்கோலம் காணவும், ஞானசம்பந்தர் சிவிகையில் ஏறும் காட்சியைக் காணவும், கண்ணப்பர் வேட்டையைக் காணவும் விருப்போடு கதிரவன் தோன்றியதாகத் தற்குறிப்பையேற்றிக் கூறுகிறார். திருமணக்கோலம் காணக்,

“காமுறு மணத்தான் போலக்கதிரவன் உதயம் செய்தான்”[226]

என்பனவற்றுள் ஒன்று.

திருஞான சம்பந்தருடன் வந்த கொண்டர்களின் இளைப்பஞ்சிக் கதிரவன்” கடலில் மறைந்தான் என்னும் கதிரவன் மறைவு தற்குறிப்பேற்றமாக வந்துள்ளது. இத்தகைய தற்குறிப்பேற்றங்கள் பிற திருமுறை ஆசிரியர் பாடல்களில் காணப்படவில்லை. சேக்கிழார் பாடல்

இவரின் நூல் காப்பியம் ஆகையால் இவை இடம் பெற்றன. இவை காப்பிய மரபை ஒட்டியன.

தாமரை மலர்களின் அழகில் ஈடுபட்டு தாமரை மலர்ந்த அழகைக் கதிரவன் ஒளியொடு காட்டும் குறிப்பு ஒன்றும் இவர் பாடல்களில் காணப்பெறுகிறது. இது இவரது அழகியல் உணர்வைக் காட்டுகிறது.

3. மதி: இருள் நீக்கும் மதியின் செயல் ஓரிடத்தில் ஞானசம்பந்தருக்கு உவமையாக வந்துள்ளது. முன்னர் கதிரவனொடு ஒப்பிட்டவர். இங்கு மதியின் செயலொடும் ஒப்பிடுகிறார். இருள்போக்கும் மதியின் செயல், அவ்விருள் போக்கும் திருஞானசம்பந்தரின் செயலொடு உவமையாகக் கூறப்பெறுகிறது.

வெண்மணற் பரப்புக்கு நிலவொலியை உவமையாகக் காட்டுவதும் இவ்வகையில் அடங்கும்.

"நீளிருள் நீங்கவந்த கலைச் செழுந்திங்கள் போலும் கவுணியர்"[227] என்ற பாடல் தொடர் அத்தகையன வற்றுள் ஒன்று. மதியொளியின் நிறம் வெண் நரைக்கும் திருநீற்றின் ஒளிக்கும் சம்பந்தர் முறுவலுக்கும் பரவை யாரின் முறுவலுக்கும் புரிநூலுக்கும் ஒப்புமையாக வந்துள்ளன. ஞான சம்பந்தரின் நித்திலக்குடைக்கும் சேரமான் பெருமான் நாயனார் குடைக்கும் உவமையாக முறையே ஈரிடங்களிலும் ஓரிடத்தும் உவமையாகக் கூறப் பெற்றுள்ளது. இவற்றை நிற உவமை என்பதொடு வடிவம் பற்றியும் வந்தன எனலாம். பரவையாரின் முகத்திற்கு ஓரிடத்தும் சங்கிலியாரின் முகத்திற்கு ஈரிடங்களிலும் உவமையாக மதி வந்துள்ளது. இவற்றை ஒளியொடு நிற உவமையோடு வடிவ உவமையாகக் கொள்ளலாம். 'கலைநாட் பெருகும் மதி' பரவையாரின் முகத்திற்கு உவமை.

கடலின் மீதொழும் மதியின் காட்சி ஓரிடத்தில் முத்தின் மணிக் கொடையில் வரும் திருஞான சம்பந்தருக்கு உவமையாகக் காட்டப் பெற்றுள்ளது. இது வடிவத்தொடு இணைந்த நிற உவமைக் காட்சியின் பாற்படும். கண்ணப்பர் பிறப்பு கடலீன்ற மதிக்கு உவமையானது.

களிற்றின் கொம்புக்கும், ஏனத்தின் கொம்புக்கும் மதி உவமையாக வந்தவிடம் இரண்டும் வடிவம் பற்றி எழுந்தன. பரவையார் நுதலுக்கும் பிறைமதி உவமையாக வந்த இரு இடங்களும் இத்தகையனவே.

வளரும் திங்கள் (வளர் பிறைத் திங்கள்) கண்ணப்பரின் கலைபயில் வளர் நிலைக்கும் நாவுக்கரசரின் கலைபயில் நிலைக்கும் ஒப்புமையாகக் காட்டப் பெற்றுள்ளன. இது திங்களின் வளரும் நிலையைக் குறிப்பிடுகின்றது.228

முகில் நுழை மதியும் சுந்தர் துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்துவதற்கு உவமையாக வந்துள்ளது. இது அழகியல் காட்சி.229

மதியின் ஒளியை உவமையாகக் கூறும் செய்திகள் பெரும்பான்மையும் மரபு வழி வந்தன. பிற திருமுறை யாசிரியர்களும் கூறப்பெறுவன. மதியின் வடிவம் உவமை யாக வருவனவும் அத்தகையனவே.

கலைவளர் மதியமும், முகில் நுழை மதியமும் இவரால் மட்டுமே காட்டப்பெறும் உவமைகளாகும், பெரிய புராணம் காப்பியமாக அமைந்தமையால் இத்தகைய உவமைகள் அமைய அவர் நூல் இடம் கொடுத்தது.

4. மேகம் : கருமேகத்தின் கரியநிறம், வெண் மேகத்தின் வெண்மை நிறம், மேகம் தரும் பயன், மேகம் மதியைச் சூழும் செயல் என்பன இவர் பாடலில் உவமை யாக வந்துள்ளன.

கண்ணப்பரின் கரிய தோற்றத்திற்கு ஈரிடங்களிலும், உழத்தியர், மகளிர், கூந்தலுக்கும்; சிவபெருமான் குஞ்சியின் (சடை) நிறத்திற்கும் ஒவ்வோரிடத்தும் சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு நான்கிடங்களிலும், களிற்றின் தோற்றத்திற்கு ஓரிடத்தும், மேகத்தின் கரிய நிறத்தை உவமையாகக் கூறியுள்ளார். சிவபெருமான் சடைக்குப் பிறர் செவ்வானையும், செந்தீயையும் செம்பவளத்தையும் உவமையாகக்கூற, இவர் காளமேகத்தின் கரிய நிறத்தைக் குறிப்பிடுகிறார். இவர் மட்டுமே இவ்வாறு குறிப்பிட்டமை சிவன் தன் உருக்கரந்து பிறிதொரு உருவில் வந்தமைக்காக ஆகும். இவையன்றியும் அழுக்காடையின் நிறத்திற்கு ஓரிடத்தில் கருமேகத்தின் நிறம் உவமை கூறப்பெற்றது புதிய செய்தியாகும். கரிய நிறத்திற்கு இவ்வாறான ஒப்புமை கூறுவது இவர் மட்டுமே.

கரிய மேகம் சூழ்ந்த மதியின் தோற்றத்தையும், வெண் மேகம் சூழ்ந்த மதியின் தோற்றத்தையும் ஈரிடங்களில் உவமை கூறியுள்ளார். அவை முறையே சமணர்கள் சூழ்ந்த ஞானசம்பந்தர் நிலைக்கும் மெய்யன்பர்கள் சூழ்ந்த ஞானசம்பந்தர் நிலைக்கும் ஒப்பாகக் கூறப்பெற்றுள்ளன. சமணர்களின் கரிய நிறத்திற்கு கருமேகமும், மெய்யன்பர்களின் திருநீற்றுத் திருமேனிக்கு வெண்மேகமும் உவமையாக வந்துள்ளன. வெண்மேகம் இன்னுமொருவிடத்தில் மாளிகைக் கொடிகளுக்கு உவமையாக வந்துள்ளது.

இவையாவும் இவருடைய அழகியல் காட்சிகள் எனலாம். மேகஞ்சூழ்ந்த வான் இவரைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. இவையனைத்தும் கட்புலன் காட்சிகளாகும். மேகம் பொழியும் மழையின் விளைவால் பெரும்பயனை உவமையாகக் கூறும் இடங்கள் மூன்றுள்ளன.

திருஞான சம்பந்தரை ஓரிடத்தும், அவரது கையை ஓரிடத்தும், கருமுகிலுக்கு ஒப்பாகக் காட்டுகிறார். மூன்றாவது கழறிற்றறிவாரின் கையை முகிலுக்கு ஒப்புமைப்

படுத்தியதாகும். இவையாவும் மழைதரும் விளைவை ஒப்புமையாகக் கொண்டமைந்தது. இவையன்றியும் வான் என்பதையும் அத்தகைய நிலைக்கு ஒப்புமையாகக்கூறும் உவமையும் உண்டு.

"பைங்கூழ்க்கு வானேயென்ன"230

சண்டேசுவரர் ஆக்களைப் பேணவந்தார் என்பதது. இதுவும் பயன்பட்டாலும் குறியீடாக வந்தமைந்தது. மேகத்தை அதன் விளைவை உவமையாகக் கூறுவது, சங்க இலக்கியங்களிலும் காணப் பெறுகின்றது.

5. மின்னல் : மின்னல் உவமையாக வந்துள்ள இடங்களில் பெரும்பாலும் அவற்றின் ஒளியை உவமையாகக் கூறுவன ஆகும். சிறுபான்மை அதன்கீற்றுப் போன்று தோன்றி மறையும் வடிவமும் வந்துள்ளது.

சிவபெருமான் சடைக்கு மின்னல் ஒளியை ஒப்பாகக் காட்டுதல் பழமையான மரபு. இம்மரபு பக்தி இலக்கிய காலத்தில் மிகையாகப் பயன்படுத்தப்படுகின்றன. சேக்கிழாரும் அத்தகைய உவமையை தம் பாடல்களில் இருபத்தொரு இடங்களில் பயன்படுத்துகிறார். யானை நெற்றியின் மேலணியும், ஓடையெனும் அணிகலன் ஒளிக்கு ஓரிடத்தும், சங்கு விளங்கு வெண்தோட்டின் நிறத்திற்கு ஓரிடத்தும், காலில் அணியும் கிண்கிணி எனும் அணிகலன் ஒலிக்கு ஓரிடத்தும், மாளிகைகளின் நிறத்திற்கு ஓரிடத்தும், மார்பில் அணியும் புரிநூலின் நிறத்திற்கு மூன்றிடத்தும், திருவடியின் நிறத்திற்கு ஓரிடத்தும், மின்னல் ஒளி உவமையாக வந்து உள்ளது. திருஞான சம்பந்தரின் திருமணக்காட்சியில் அவரும், அவர் மனைவியும் அமர்ந்திருந்த காட்சியை "வெள்ளை மேகமோடிசையும் மின்னுக் கொடியென"231 காட்டுகிறார்.

மகளிரின் இடைக்கு மின்னலை உவமையாகக் கூறுத லும் பண்டைய மரபே ஆகும். இவர் மகளிர் இடைக்கும், பரவையார் இடைக்கும், சங்கிலியார் இடைக்கும் பத்திடங்களில் மின்னலை உவமையாகக் கூறியுள்ளார்.

மேலும், பாம்பின் எயிற்றுக்கும் ஓரிடத்தில் மின்னலை உவமையாக்கியுள்ளார்.

தோன்றி மறையும் கீற்றுப் போன்ற அதன் வடிவு இங்கு உவமையாயிற்று.

தோன்றி மறையும் மின்னலின் இயல்பு. ஓரிடத்து சங்கிலியார் கோவிலிலிருந்து உடனே சென்று மறையும் நிலைக்கு உவமையாகக் குறிப்பிடுகிறார்.

இவ்வுவமையை திருமுறையாசிரியர்களில் இவர் மட்டுமே பயன்படுத்துகிறார். மின்னலின் நிறம், வடிவு, தோன்றி மறையும் செயல் ஆகியன உவமையாக வந்தமை இவரின் கூர்ந்த பரந்த கட்புலனுணர்வைக் காட்டுகிறது.

6. வானவில் : திருமுறையாசிரியர்களில் இவர் ஒருவர் மட்டுமே வானவில்லலை உவமையாகக் காட்டுகிறார். திருஞானசம்பந்தர் திருமணக்காட்சியில் மணமகளின் அழகைக் கூறுகையில் இதைக் கூறுகிறார்.

"அளகப் பந்தி தேங்கமழ் சேருந் திருநுதல் விளக்கம் நோக்கில்... புயற்கீழிட்ட வாங்கிய வானவில்லின் வளரொளி வனப்பு[282] என்பதது.

கூந்தலின் கருமையின் கீழ் நெற்றியில் ஆரம் எனும் அணி விளங்குதல் மேகத்தொடு தோன்றும் வானவில்லைப் போன்றுள்ளது என்கிறார். இக்குறிப்பும் இவரது அழகி யல் உணர்வைக் காட்டுகிறது. காப்பிய மாந்தர்களின் அழகுநலம் புனைகின்ற வாய்ப்பு இவருக்கு இருந்ததால், இவர் பாடல்களில் இத்தகைய உவமைகள் காணப் பெறுகின்றன.

7. இடி: இடியின் பேரோசையும் ஒலிக் குறிப்பிற்கு உவமையாக வருதல் பழைய மரபு ஆகும்.

யானையின் பிளிறலுக்கு ஈரிடங்களில் ஏனத்தின் குரலுக்கு ஓரிடத்தும், சங்கு; படகம்; பேரி; தாரை; காளம் தாளம் முதலிய ஒன்று சேர்ந்து முழங்கும் ஒலிக்கு ஓரிடத்தும், வாட்போரின் ஒலிக்கு ஓரிடத்தும், நால்வகைப் படையும் ஒன்று சேர்ந்து போரிடும் ஓசைக்கு ஓரிடத்தும், நாண் எறி ஓசைக்கு ஓரிடத்தும், இடியின் பேரோசை உவமையாக வந்துள்ளது. இவர் இடியென்ற பேரோசைச் சொல்லோடு, மழையெனும் சொல்லாலும் இடியைக் குறிப்பிட்டுள்ளார். இது இவருடைய செவிப்புலன் காட்டுகிறது.

8. மழை: மழை பொழியும் அழகுத் தோற்றமும், மழையின் பயனும் இவர் பாடல்களில் உவமைகளாகவும் உருவகங்களாலும் எடுத்தாளப் பெறுகின்றன. யானையின் மதம் பொழி நிலைக்கு ஓரிடத்தும்; தேவர்கள், மனிதர், மகளிர் முதலானோர் மலர்களைத் தூவுவதற்கு இருபத் தெட்டிடங்களிலும்; மெய்யன்பர்களின் கண்களிலிருந்து விழும் கண்ணீரின் தோற்றத்திற்கு மூன்றிடங்களிலும்; மழையின் தோற்றம் உவமையாகவும், உருவகமாகவும் எடுத்தாளப் பெறுகின்றன. யானையின் மதத்திற்கு மழை ஒப்புக்காட்டப் பெற்ற ஒன்று மட்டும் உவமையைச் சாரும். பிறவெல்லாம் உருவகங்களே ஆகும்.

மழைதரும் பயன் ஈரிடங்களில் உவமையாகப் பயன் படுத்தப் பெற்றுள்ளது. மேகம் உவமையாகப் பயன்பற்றி அமைந்ததை ஒத்ததிது. கழற்றறிவார் கைக்கு ஈரிடங் களில் மழை ஒப்பாகக் கூறப்பட்டுள்ளது. இத்தகையன பிறர் பாடல்களிலும் உள.

### 1. 28. 4 காலவியற்கை

அந்தி, இருள் எனும் இரு பிரிவுகள் மட்டும் காலப் பிரிவில் அணிகளாக வந்துள்ளன.

1. அந்தி : சிவபெருமானின் திருமேனி நிறத்திற்கு அந்திக் காலத்து அழகை (நிறத்தை) ஒப்பிடுதல் பக்தி இலக்கியங்களில் பெரிதும் பின்பற்றப் படுகிறது. இவரும் அத்தகைய உவமையை நான்கிடங்களில் பயன் படுத்துகிறார்.

"அந்திவண்ணர்" என்பது அவற்றுள் ஒன்று.

2. இருள் : சிவபெருமான் மிடற்றின் நிறத்திற்கு நான்கிடங்களிலும், பரவையார் கூந்தலுக்கு ஓரிடத்தும், இருளின் நிறம் உவமையாக வந்துள்ளது.

இவையன்றியும் அமணர்களும், அவர்களின் உருவமும் மூன்றிடங்களில் உவமையாகவும்; ஈரிடங்களில் உருவகமாக வும் வந்துள்ளது. அவர்களின் உருவைக் கரிய இருளின் நிறத்திற்கு ஒப்பிடுவதுதான் இங்கு நோக்கம். அதுவன்றி யும், அவர்கள் எண்ணங்களும் இருளைப்போல மயக்கத்தைத் தருவன என்பது உணர்த்தவும் இத்தகையன வந்து உள்ளன.

மேலும், பொய்ம்மையை வல்லிருளாக மூன்றிடங் களில் உருவகமாகக் காட்டியுள்ளார். இது பழைய மரபை ஒட்டியதே ஆகும். இருளைப் போல மயக்கும் தன்மையையும், பிறவற்றை மறைக்கும் தன்மையும் உடையது பொய்ம்மை என்பதை உணர்த்துவதற்கு இத் தகையனவற்றைப் பயன்படுத்தி உள்ளார்.

### 1. 28. 5. காற்று

பரியின் வேகத்திற்குச் சூறைமாருதத்தை ஓரிடத்தும் களிற்றின் வேகத்திற்குக் காற்றை ஓரிடத்தும், இயற்பகை

நாயனார் வேகத்திற்குக் காற்று ஓரிடத்தும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.

"சூறை மாருதம் ஒத்தெதிர்
ஏறு பாய்பரி"233

என்பது அவற்றுள் ஒன்று. காற்றின் வேகத்தையே இங்கு உவமையாக்கிக் கொள்கிறார்.

## 1. 28. 6 உயிரியற்கை

இயங்கா உயிர்கள்

### 1. 28. 6. 1. மரம்

பனையும், வேயும், வாழையும் இவர் பாடல்களில் உவமைகளாக வந்துள்ளன.

யானையின் துதிக்கைக்குப் பனையை ஈரிடங்களிலும், மகளிர், சங்கிலியார், கமலவதி ஆகியோர் தோள்களுக்கு வேயை மூன்றிடங்களிலும், பூம்பாவையின் தொடைக்கு வாழைத் தண்டை ஓரிடத்தும் உவமையாகக் காட்டியுள்ளார்.

இத்தகையன யாவும் மரபு வழியாகப் பின்பற்றி வருவனவே ஆகும். உருட்சியும், திரட்சியும் ஆகிய மரத்தின் தோற்றமே இங்கு உவமையாயிற்று.

### 2. கொம்பு

கொடி : உமையம்மை, மானக்கஞ்சாறர் மகள் ஆகியோரை ஈரிடத்தும் திருநீலகண்டர் மனைவி பரவையார் ஆகியோரை மூன்றிடங்களிலும், மகளிரை மூன்றிடத்தும், கொல்லிமழவன் பாவையை ஓரிடத்தும், கொடியோடும், கொம்போடும் ஒப்புக்காட்டுகிறார்,

இவையன்றியும் பரவையாரின் இடைக்கு ஈ
களிலும், சங்கிலியாரின் இடைக்கு ஓரிடத்தும் கொ
உவமையாகக் காட்டுகிறார்.

"கொடியேரிடையாள் பரவை"

என்பதவற்றுள் ஒன்று.

மகளிரை பூங்கொம்புக்கும், கொடிக்கும் ம
இடையை உவமையாகக் கூறுவது சங்க இலக்
தொட்டு வருகின்ற மரபினை உடையது.

3. தளிர் : பூம்பாவையை ஈரிடங்களிலும், ஏயர்கோ
கலிக்காமர் மனைவியை ஓரிடத்தும் தளிரொடு ஒ
கிறார். தளிரின் அழகும் இவர்கள் மேனியின் அ
இங்கு ஒப்புக் காட்டப்பெற்றுள்ளன. உமைய
பூம்பாவை, ஏயர்கோன் கலிக்காமர் மனைவி, சு
திருநீலகண்டர் மனைவி ஆகியோரின் கைகளுக்குத் த
ஒப்பாக ஐந்திடங்களில் குறிப்பிட்டுள்ளார். கண்ண
பாதங்களுக்கும் ஓரிடத்தில் தளிரை ஒப்புக் காட்டுகிற

தளிரின் மென்மையும், அழகும், நிறமும்
உவமையாக வந்துள்ளது.

4. அரும்பு : உமையம்மையின் முலைக்கும், திரு
சம்பந்தர் மணம் செயும் மணமகளின் முலைக்கும் அ
ஒப்பாக ஈரிடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. தோ
பற்றி வந்த உவமையாக இதைக் கொள்ளவேண்டும்,

5. மலர் : தாமரை, குவளை, முல்லை, கொ
பூளைப்பூ முதலான மலர்களும் பொதுவாக மல
உவமைகளாகவும், உருவகங்களாகவும் அவர் பாட
காணப்பெறுகின்றன.

சிவபெருமான் திருவடிகட்கு மலரை ஒப்
மரபையொட்டிய ஒன்று. இத்தகையன இவர் பாட
ஐம்பத்தாறு இடங்களில் காணப்பெறுகின்றன.

"மலர்ப் பாதம்"
"மலர்த் தாள்"

என்பன அவற்றுள் சில.

கைகளுக்கு மலரை ஒப்பிடுதலும் பழமரபையே சாரும். இவர் சிவபெருமான் திருக்கைகளுக்கு மூன்றிடங்களிலும், ஞானசம்பந்தர் திருக்கைகளுக்கு எட்டிடங்களிலும், சுந்தரர் கைகளுக்கு ஓரிடத்தும், உமையம்மைக்கு ஓரிடத்தும், தொண்டர்களின் கைகளுக்கு ஓரிடத்தும் மலரை ஒப்பிடுகிறார். பெரும்பாலும் குவிந்த கைகளை இவர் பெரிதும் கூறுகிறார்.

கண்களை மலர்களாக உருவகப்படுத்துவதும் மலரொடு ஒப்பிடுதலும் சங்க இலக்கியந்தொட்டு வருகின்ற மரபு. இவரும் திருஞானசம்பந்தர் கண்களை மலர்களாக ஈரிடங்களில் உருவகப்படுத்துகிறார். சுந்தரர் கண்களுக்கு நான்கிடங்களிலும் மலரை ஒப்பிடுகிறார். "மலர்க்கண்", "கண்மலர்கள்" என்பன அவற்றுள் சில. சிந்தையை மலராக உருவகப்படுத்தும் இடம் ஒன்று உள்ளது.

தாமரை : சிவபெருமான் திருவடிகளுக்கு உவமையாக இவர் முப்பத்தைந்து இடங்களில் குறிப்பிடுகிறார். மனுநீதி, காஞ்சிவாணர், கலைமகள், திருநீலகண்டர் மனைவி திருஞானசம்பந்தர் ஆகியோர் முகத்திற்கு உவமையாக எட்டிடங்களில் தாமரை குறிக்கப் பெற்றுள்ளது. கண்ணுக்கு உவமையாக இது இரண்டு இடங்களில் காணப்பெறுகிறது. இதுவன்றியும் கைகளுக்கு உவமையாகவும் பத்து இடங்களில் குறிக்கப்பெற்றுள்ளது. மேலும், பாண்டிமாதேவி ஓரிடத்தில் தாமரையொடு ஒப்பிடப்பெற்று உள்ளாள்.

காவி : இம்மலர் பரவையார், சங்கிலியார், கடைசியர், அரம்பையர் முதலிய மகளிரின் கண்களுக்கு உவமையாக ஏழிடங்களில் காணப்பெறுகிறது. சில

பெருமான் கண்டத்திற்கு ஆறிடங்களில் இம்மலர் உவமிக்கப்பெற்றுள்ளது. இம்மலர் உவமேயமாகவும் ஓரிடத்துக் காட்டப்பெற்றுள்ளது. பிற—கொன்றை பொன் போல பூத்துள்ள காட்சி ஓரிடத்தும், தாமரை அழலை யொத்துப் பூத்துள்ள காட்சி ஓரிடத்திலும் வந்துள்ளன. மேலும், பிறவிக்கு பூளைப்பூ உவமிக்கப்பெற்றுள்ளது.

6. காய் : கதலிக்குலைகளின் அழகில் ஈடுபட்ட இவர், களிற்றின் துதிக்கையை அதற்கு ஒப்பிடுகிறார். இவ்வொரு குறிப்பு மட்டும் வந்துள்ளது.

7. கனி : கொவ்வைக் கனி மட்டும் உவமையாக மகளிர் வாயின் செம்மைக்கு ஆறிடங்களில் ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது. ஓரிடத்தில் களிறுண்விளங்கனி உவமை யாகியது.

8. விதை : தினை மட்டும், சிறிய அளவுக்காக உவமையாக ஓரிடத்தில் குறிக்கப் பெற்றுள்ளது.

9. பஞ்சு : திருவடிகட்கு ஈரிடங்களிலும் சமணர் ஏடு தீதலுக்கு ஓரிடத்திலும் பஞ்சு உவமையாகியது.

இயங்குயிர்கள் : இயங்குயிர்களில் அன்னம், கிளி, குயில் ஆகிய மூன்று மட்டும் உவமைகளாக வந்துள்ளன. மகளிர் நடைக்கு உவமையாக அன்னம் நான்கிடங்களில் உவமையாகியது. மகளிர் மொழிக்கு ஓரிடத்தில் கிளியும், இரண்டிடங்களில் குயிலும் உவமைகளாயின.

முடிவுகள்

திருஞானசம்பந்தர் பாடல்களில் இயற்கைப் பொருள் கள் உவமை அணிகளாக மிகுதியான இடங்களில் வந்துள்ளன. அவற்றுள்ளும் நிறவுவமைகளே மிகுதியாக உள்ளன. அடுத்த நிலையில் மிகுதியாக உள்ளவை வடிவ உவமைகளே ஆகும். நிறம் பற்றிய உவமைகள் மிகுதி

யாகக் காணப்பெறுவதற்குக் காரணம் அவரது இளமைப் பருவமே.

அவர் காட்டும் இயற்கைப் பொருள்களில் அமைந்த அணிகளை,

அ. இறைவன் இறைவியர் உறுப்பு நலன்களுக்கு வந்தன.

ஆ. இயற்கைப் பொருளுக்கு இயற்கைப் பொருள் உவமையராய் வந்தன,

இ. செயற்கைக்கு இயற்கை உவமையாக வந்தன.

ஈ. உலகியல் காட்ட இயற்கை உவமையாக, உருவக மாக வந்தன.

உ. மகளிர் உறுப்பு நலன்களுக்கு உவமையாக வந்தன.

ஊ. இராவணன், கூற்றம் ஆகியோர்க்கு உவமையாக வந்தன என்று ஆறு வகைப்பாட்டில் அடக்கலாம்.

இவற்றுள் இறைவன் இறைவியர்க்கு உவமையாக வந்தன மிகுதியாக உள்ளன. அவற்றுள் உமையம்மையை மிகுதியாகக் குறிப்பிடுகிறார். ஞானப்பாலைப் பிழிந் தூட்டிய நினைவு அவருக்கு இருந்திருக்கும். அதன் காரணமாக அத்தகையன மிகுதியாக அமைந்தன. இயற்கைக்கு இயற்கை உவமையாக வந்தன யாவும், இவர் இயற்கையின் மீது கொண்ட ஈடுபாட்டை உணர்த்துகிறது.

திருநாவுக்கரசர் பாடல்களில் இயற்கைப் பொருள்கள் உவமைகளாகவும் உருவகங்களாகவும் சம அளவில் வந்துள்ளன. இவர் உலகியல் பற்றி மிகுதியாகக் குறிப்பிடு கிறார். இறைவன், இறைவியர், மகளிர் முதலியோர்க்கும் இயற்கைப் பொருளுக்கும் உலகியல் காட்டவும் இயற்கைப்

பொருள்கள் உவமையாக வந்துள்ளன. இவர் குறிப்பிடு வனவற்றுள் பெரும்பான்மை மரபு வழிப்பட்டனவே.

இவருடைய வயது முதிர்ந்த பருவமும், பக்தி மேம்பாடும், தொண்டு உள்ளமும் உலகியல் அறிவும் முதலான காரணங்களே இவர் திருஞான சம்பந்தரைக் காட்டிலும் மிகையான உருவகங்களையும் உலகியல் நெறி உணர்த்தும் உண்மைகளையும் தந்ததற்குக் கூறலாம். இவர் திருஞானசம்பந்தரைப் போல் உமையம்மைக்கு மிகுதியாக உவமைகளைப் பயன்படுத்தாமல் சிவபெருமானுக்கு மிகுதியாகப் பயன்படுத்துகிறார். தனக்கருளிய சிவபெரு மானையே நினைந்த அவரின் உள்ளம் அதற்குக் காரணமாகும்.

சுந்தரர் தேவாரத்தில் முன்னிருவரைக் காட்டிலும் குறைந்த அளவில் அணிகள் காணப்பெறுகின்றன. இவர் உவமைகளில் பெரும்பான்மை முன்னிருவர் பாடல்களிலும் காணப்பெறுகின்றன. பெரும்பான்மையும் தேவாரமூவர் பாடல்களில் ஒரே வகையான உவமைகளே காணப் பெறுகின்றன. இவரின் இல்லற வாழ்க்கையும் இறைவன் மேற்கொண்டு உரிமையான பக்தியும் இவர் இயற்கைப் பொருள்கள் அணிகளாக வந்தவை குறைவாக இருந்தற்குக் காரணமாகக் கூறலாம்.

மாணிக்கவாசகர் திருநாவுக்கரசரைப் போல உருவகங் களை மிகுதியாகப் பயன்படுத்துகிறார். இவ்விருவரின் உருவகங்களும் பெரும்பான்மையும் ஒரே வகையினவாக உள்ளன. தன்னிலையைப் பற்றிக் கூறுகையில் இவரும் திருநாவுக்கரசரும் மிகுதியாக உவமைகளைப் பயன்படுத்து கின்றனர். இவரின் உவமைகளில் பெரும்பான்மை மரபு வழிபட்டனவே. அழுதழுது அடியடைதலும், கழிந்ததற்கு எண்ணி இரங்குதலும், பெற்றதை எண்ணி மகிழ்தலும் ஆகிய செயல்கள் இவ்விருவருக்கும் பொருந்துவதால்

இவர் பாடல்களில் உவமை ஒரே மாதிரி அமையக் காரண மாயின எனலாம்.

ஒன்பதாம் திருமுறையில் திருமாளிகைத் தேவர் பாடல்களில் குறைந்த அளவில் இயற்கைப் பொருள்கள் உவமைகளாக வந்துதுள்ளன.

சேந்தனார், பூந்துருத்திநம்பி கண்டாரதித்தர், வேணாட்டிகள், திருவாலிய முதனார், புருடோத்த நம்பி, சேதிரராயர் ஆகியோர் பாடல்களில் மிகவும் குறைந்த குறிப்புகளே காணப்பெறுகின்றன. ஒன்பதாம் திருமுறையிலேயே கருவூர்த்தேவர் பாடல்களில் மட்டும் மிகுதியான இடங்களில் இயற்கைப் பொருள்கள் உவமைகளாக வந்துள்ளன. ஆயினும் இவையாவும் தேவார மூவர் அளவுக்குச் சிறப்பாகவும் மிகுதியாகவும் இல்லை. இவர்களின் நோக்கம் இசைப்பாவாக யாத்தல் என்பதால் இத்தகையன மிகுதியாக இடம் பெறவில்லை.

தேவார மூவர்க்கு அடுத்து தேவாரமூவர் அளவிற்குச் சிறப்பாகவும் மிகுதியாகவும் இத்தகையன திருமூலர் பாடல்களில் காணப்பெறுகின்றன. சைவசமய நெறிகளையும், சமுதாய உண்மைகளையும் இவரின் பாடல்களில் இயற்கைப் பொருள்கள் வந்த உவமைகள் உணர்த்துகின்றன. திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், பாடல்களில் உள்ளது போல இவர் பாடல்களிலும் உருவகங்கள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. தாவர இயற்கையும் இவர் பாடல்களில் சமுதாய, சமயக் கருத்துக் களையே காட்டுகின்றன. விலங்கினங்கள், பறவைகள் ஆகியவற்றின் இயக்கங்களே பெரிதும் அணிகளாக வந்துள்ளன. விலங்கினங்கள், பறவைகள் பலபல இடங் களில் இவரால் குறியீட்டுச் சொற்களால் குறிக்கப் பெறுகின்றன. இவர் யாத்த திருமந்திரம் சாத்திர நூலாக விளங்குகின்றமையும், திருமூலர் சித்தர்களில் ஒருவராக இருக்கின்றமையும் அதற்குக் காரணமாகும்.

பதினொன்றாம் திருமுறையில் திருவாலவாயுடை காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர்கே பரணதேவநாயனார், இளம்பெருமானடிகள், அதிகா கள் ஆகிய அறுவரும் மிகவும் குறைவான குறிப்புகளை தந்துள்ளனர். காரைக்காலம்மையார் இம்மை வா வெறுப்பும், மறுமை வாழ்வில் விருப்பும் கொண் அவையே இயற்கைப் பொருள்கள் அணிக அமையாமைக் காரணமாகக் கூறலாம்.

ஐயடிகள் காடவர்கோன் மிகக் குறைந்த கு களைத் தந்தவர். காலத்தை வீணே போக்க இறைவனை வணங்குங்கள் என்று அறிவுரை கூற இவர் நோக்கம் ஆகையால் இவை மிகுதியாக இடம் வில்லை. சேரமான் பெருமாள் நாயனாரை வானிய யும் தாவர இயற்கையும் பெரிதும் கவர்ந்துள் அக்காரணம் பற்றிய அவ்வகை அணிகள் அகப்பாடல் மிகுதியாக இடம்பெற்றன. இவரின் மூன்று நூல் உலாவாகவும் கோவையாகவும் பெரும்பான்மை பொருள் அமைப்பில் அமைந்ததாக இருப்பதால் ப பற்றிய உவமைகள் இவர் பாடல்களில் மிகுதி காணப்படுகின்றன.

நக்கீரதேவநாயனார் பாடல்களில் பெரும்பான்ன நிறம்பற்றிய உவமைகள் வந்துள. விலங்குகளின் இ பெரிதும் காட்டப் பெறுகின்றன- பெரும்பான்ன அவை மரபு வழிப்பட்டனவாகவே உள்ளன. நக்கீர நாயனார் அளவுக்குக் கபிலதேவ நாயனார் பாடல் அணிகள் காணப்படவில்லை. பெரும்பான்மையும் இ குறிப்புகளும் மரபு வழிப்பட்டனவாகவே உள்ளன.

பரணதேவர் பாடல்களிலும் மிகவும் குறை அணிகளே வந்துள்ளன. இவருடைய நோக்கம் இன திருத்தலங்களைக் கூறி வணங்கவேண்டும் என்பது. எ

இவர் பாடல்களில் இயற்கைப் பொருள்கள் அணிகளாக மிகுதியும் வரவில்லை.

பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களில் உவமையும் உருவகமும் வந்துள்ளன. மிகுதியும் பக்தி நிலைகளையும் இறைவனழகு இறைமையுணர்வு ஆகியவற்றையும் காட்டுவனவாக உள்ளன. மகளிர்க் குவமையாக வருவன மரபு வழிப்பட்டனவாக உள்ளன. அதுமட்டுமல்லாமல் இயற்கையோடு இயற்கையை ஒப்பிடும் அழகியல் உணர்வு கொண்ட அணிகள் மிகப் பல உள்ளன.

நம்பியாண்டர் நம்பி பதினொன்றாம் திருமுறையில் மிகுதியான இடங்களில் அணிகளை இயற்கைப் பொருள்களை பயன்படுத்தியவருள் ஒருவர். பெரும்பான்மை சிவபெருமானுக்கும் இறையுணர்வுக்கும் அணிகள் வந்துள்ளன. இயங்காவுயிர்களாகிய தாவர வகைமை பெரிதும் இவர் பாடல்களில் உவமையாக வந்துள்ளன.

பன்னிரண்டாம் திருமுறையில் தேவாரமூவர் அளவுக்குச் சிறப்பாகவும் மிகுதியாகவும் இயற்கைப் பொருள்கள் உவமைகளாக வந்துள்ளன. பெரிய புராணம் நாயன்மார்களின் வாழ்க்கை வரலாற்றைக் குறிப்பதால் அரசர்க்கும் அடியார்க்கும், மகளிர்க்கும் உவமையாக இயற்கைப் பொருள்கள் மிகுதியாக வருகின்றன. உருவகங்களும் இவர் பாடல்களில் மிகுதியாக வந்துள்ளன. காப்பியம் ஆகையால் பிற திருமுறையாசிரியர் பாடல்களில் இயற்கை உவமைகள் உள்ளன. மகளிர்க்கும் யானை முதலிய விலங்கினங்களுக்கும் பலவகை மலர்களுக்கும் மரபு வழிபட்ட உவமைகள்பல வந்துள்ளன.

## குறிப்புகள்

1. கா. சுப்பிரமணிய பிள்ளை, "திருஞானசம்பந்தர் தேவாரம் இயற்கைப் பேரருளழகு" பக். 150
2. துரை சீனிச்சாமி, இலக்கியத்தில் இயற்கை பக். 27.
3. Encyclopedia Americana, page. 775.
4. கதிர். மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம் பக். 9.
5. வ. சுப. மாணிக்கம், தமிழ்க் காதல் பக். 189.
6. ந. மனோகரர். தமிழில் அறிவியல் கருத்துகள், பக். 109.
7. இல.செ. கந்தசாமி, திருக்குறளில் வேளாண்மை, பக். 45.
8. அ.மா. பரிமணம், இயற்கை நாட்டியம், பக். 36.
9. Braj Bihari Chaupcy. Treatment of Nature in the Rig Veda page 183.
10. கதிர், மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம், பக். 2.
11. தனிநாயக அடிகளார், "சங்க இலக்கியத்தின் சிறப்பியல்பு," தமிழ்த்தூது, பக். 4.
12. க. செல்லப்பன், மலர்நீட்டம், பக். 2.
13. ப. குணசேகர், அண்ணதாசனும் இயற்கையும், பக். 34.
14. கதிர் மகாதேவன், மேலது, பக். 11.
15. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை, பக். 9.
16. க. செல்லப்பன், மேலது, பக். 1.
17. அ. அ. மணவாளன், "சங்க காலம்", தமிழிலக்கியக் கொள்கை, பக். 37.

18. மு. வரதராசன், சங்க இலக்கியத்தில் இயற்கை, பக். 12, மேலும் வ. சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், பக். 193.
19. தனிநாயக அடிகளார், மேலது, பக். 45.
20. வ. சுப. மாணிக்கம், மேலது, பக். 12.
21. அ. இராகவன், தமிழர் பண்பாட்டில் தாமரை, பக். 20.
22. துரை. சீனிச்சாமி, இலக்கியத்தில் இயற்கை பக். 53.
23. க. வெள்ளைவாரணன், "தெய்வ இசைப்பனுவல்கள்", உலகத்தமிழ். பக். 50. மேலும் பன்னிரு திருமுறைவரலாறு, முதற்பகுதி, பக். 31.
24. திரு. வி. கலியாண சுந்தரனார், தமிழ்நாடும் நம்மாழ்வாரும், பக். 29.
25. Vasudeva, S. Agarvala, Evolution of Hindu Temple page. 11.
26. M. A. Dorai Rangaswamy, Religion and Philosophy of Tevaram, Book I, page 5.
27. மேற்கோள், ம. சா. அறிவுடை நம்பி, திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், பக். 156.
28. Bechan Dube, Geographical concepts in Ancient India, page. 101.
29. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள், பக். 13.
29. " " பக் 39.
31. " " பக் 13,
32. அ. மு. பரமசிவானந்தம், எல்லோரும் வாழ வேண்டும். பக் 64.
33. க. வெள்ளைவாரணன், "சிலம்பில் சைவம்", சிலப்பதிகாரச் சிந்தனைகள்" பக். 18.

34. Surender Mohan Bhardwaj, Hindu places of pilgrimage in India, page. 33, 86.
35. Vasudeva S. Agarvala, Ibid, page, 11.
36. சி. சத்தியமூர்த்தி, "நால்வர் பாடல்களில் ஆறு," இலக்கியத்தில் ஆறு, பக். 77.
37. S. M. Ali, The Geography of puranas, page. 15.
38. சி. பாலசுப்பிரமணியன், "சீறாப்புராணத்தில் இயற்கை வருணனைகள்," சிந்தைக்கினிய சீறா. பக். 79.
39. Vasudeva, S. Agarvala, Ibid, page-11.
40. சி. சத்தியமூர்த்தி, மேலது, பக். 77.
41. Surender Mohan Bhardwaj Ibid, page. 3.
42. Vasudeva. S. Agarvala, Ibid, page. 11.
43. திரு. வி. கலியாணசுந்தரனார், திருவாய் மொழி, பக். 117-118.
44. பி. சி. கணேசன், அருளியலும் அறிவியலும், பக். 17.
45. கி. நாச்சி முத்து, இடப்பெயராய்வு, பக். 165.
46. க. த. திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, பக். 62.
47. சிட்டி, தி. ஞானசிராமன், நடந்தாய்; வாழி காவேரி, பக். 131.
48. 1-77-1; 2-41-8.
49. 1-79-9.
50. 1-77-3.
51. 3-56-11.
52. 3-66-10
53. 1-10-9.
54. 1-67-5; 1-57-4.
55. 1-26-3
56. 2-39-9; 3-107-1; 1-19-2; 1-50-3.

57. 1-17-11
58. 1-22-2.
59. 2.48-2; 1-15-3
60. 2-59-4
61. 1-46-6; 2-88-5
62. 3-2-5
63. 3-12-3
64. 3-90-4
65. 1-102-9; 1-15-1
66. 1-42-9.
67. 3-123-4; 3-75-2
68. 2-109-6; 2-63-5; 3-69-9.
69. 3-2-6.
70. 1.102-8; 2-58-1.
71. 3-100-2
72. 1-73-1; 1-11-1
72. அ- 2-114-7
73. 1-23-5; 2-106-8.
74. 1-45-3; 2-83-10.
75. 3-88-3-
76. 1-19-3
77. 3-123-2; 2-94-8.
78. 3-92-4.
79. 3-113.2; 1-110-5.
80. 1-1081; 2-99-1; 2-78-5.
81. 3-55-2; 3-83-5; 1-14-6.
82. 3-37-7.
83. 1-71-7; 1-123-4.
84. 1-68-2; 1-66-8.
85. 1-59-2; 1-123-3
86. 3-46-1

87. 6-18-9: 4-2-4
88. 5-30-7; 6-3-2
89. 6-46-4; 5-43-8; 6-27-1
90. 4-32-7; 4-62-8.
91. 4-10-6.
92. 6-60-10
93. 6-23-5.
94. 5-27-3
95. 4-95-8; 6-40-7; 5-27-3;
96. 6-10-7; 4—21—8;
97. 4—71—6.
98. 6—18—9; 6—80—9; 5—3—2.
99. 5—63—3; 4—12—20
100. 4—82—10; 4—70—6; 4—44—5.
101. 4—63—2; 4—26—2
102. 6—30—8: 6—76—3
103. 5—2—1: 5—8—3
104. 6—29—1; 6—56—3.
105. 6—76—6,
106. 4—15—2
107. 5—100—5
108. 4—31—7
109. 4—5—7
110. 5—91—4
111. 6. 46. 2; 6—83—9
112. 6—51—4; 5—87—6; 5—94—3; 5—90—1,
113. 5—93—10; 6—55—5
114. 6—39—8; 6—65—10
115. 6—87—6
116. 6—63—5; 6—63—10
117. 4—11—3
118. 4—24—9; 4—107—1

119. 4—76—1; 5—47—6.
120. 6—10—1; 5—5—9.
121. 5-55-5.
122. 7-64-5; 7-93-4; 7-4-3
123. 7-67-8; 7-3-3
124. 7-3-4.
125. 7-38-8
126. 7-60-3.
127. 7-99-1
128. 7-11-6; 7-41-4; 7-24-1
129. 7-16-2
130. 7-43-2
131. 7-64-8; 7-40-9; 7-89-9.
132. 7-4-3;
133. 7-72-1
134. 7-84-9; 7-95-9
135. 7-95-3.
136. 7-35-6
137. 7-49-3
138. 7-3-7; 7-42-3.
139. 7-91-2; 7-17-5.
140. 8-9-7; 8-33-3.
141. 8-4 அடி 35; 8-10-9; 8-35-2
142. 8-3 அடி 160.
143. 8-2-78;
144. 8-22-7
145. 8-3-95
146. 8-4-96; 8-6-16; 8-50-1.
147. 8-2 அடி 6.
148. கோவை 305; 99.
149. 8-4 அடி. 65; 8-6-3; 8-5-96
150. 8-5-89; 8-42-5.

151. 8-37-7; 8-37-6
152. 8-6-20
153. கோவை 83
154. 8-3 அடி 115.
155. 8-24-1
156. கோவை 49; 170
157. 8-7-13
158. கோவை 384
159. 8-9-2
160. 8-20–7; 8-4-97; 108.
161. 8-6–34
162. 8-25-5
163. 8–5-36
164. 8-5-46
165. 8-4–144 (அடி); 8–5–13; 8-34-2.
166. 8-4-37 (அடி); 8-6.32-
167. 8-6-9; 8-6-25.
168. 8-5-87
169. 8-6–26
170. கோவை 343; 8-20-8
171. 9–3-1 முதல் 12; 9-1–6
172. 9-4-5
173. 9-6-7
174. 9-11-1.
175. 9-10-10; 9-17-6.
176. 9-9-7.
177. 9-12-1
178. 9-21-1
179. திருமந். 2805
180. " 2258
181. " 1992
181அ. " 1649

182. திருமந். 106
183. ” 569
184. ” 248
185. ” 2542
186. ” 2719
187. ” 1591
188. ” 2765—1139
189. ” 47
190. ” 571
191. ” 47, 107
192. ” 2869
193. ” 1093
194. ” 1615
195. ” 1513
196. 11-1-1
197. 11-1-1
198. 11-4-64
199. 11-4-68
200. 11-4-22
201. 11-2-6
202. 11-5-5; 11-5-8.
203. 11-8-100
204. 11-8-118
205. 11-8-155
206. 11-8-150
207. 11-8-178
208. 11-8-114
209. 11-7-5.
210. 11-18 (அடி) 30
211. 11-22-19
212. 11-23-18
213. [redacted] 11-26-24

214. 11-26-28
215. 11-26-28
216. 11-28-21
217. 11-26-28
218. 11-29-90
219. 11-28-7
220. 11-27-4; 11-30-9
221. 11-34-25
222. 11-34-49
223. 11-36-6
224. 11-38-1
225. 12 நாலு. 372
226. 12 திரு. 13
227. 12 ஞான. 751
228. 12 கண். 42
229. 12 பாயி. 16
230. 12 கண். 24
231. 12 ஞான. 1237
232. 12 ஞான. 1096
233. 12 புகழ 22



## நூலாசிரியரைப் பற்றி...

1. "என் வாழ்வில் பெற்ற ஆய்வு மாணவர் ஒரு சிலர். அவருள் டாக்டர். இரா. இலட்சாராமன் அன்பால் தலைசிறந்தவர் ஆவார். கோவலனையும் கண்ணகியையும் 'என் மக்கள்' என்று கவுந்தியடிகள் அன்று சொன்னதற்குப் பொருளை இவர் வழியாக இவர் ஆசிரியர் இன்றும் துய்த்துக் கொண்டிருக்கிறார்."

—டாக்டர் பொன். சௌரிராசன்
எம்.ஏ.,பிஎச்.டி.,
மேனாள் பேராசிரியர் & துறைத் தலைவர்
தமிழ்த்துறை, திருவேங்கடவன் பல்கலைக்கழகம்,
திருப்பதி, ஆந்திர மாநிலம்.

2. "படிக்கும் ஆற்றலில் எழுத்தெண்ணிப் படித்தல் என்பதும் உண்டு. திருமுறைகளை எழுத்தெண்ணிப் படித்துப் படித்து ஆராய்ந்துள்ளார் ஆசிரியர்."

—பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்
மேனாள் முதல்வர்,
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள்
தமிழ்க் கல்லூரி, மயிலம்.

3. "முனைவர் இலட்சாராமன் அவர்கள் சிறந்த தமிழ்ப் புலவர்; தேர்ந்த நல்லாசிரியர்; கற்பதிலும் கற்பிப்பதிலும் ஆழ்ந்து நிற்பவர். இவரது கல்விப் பயிற்சியும் சீரிய பண்புகளும் என்னைப் பல்லாண்டுகளுக்கு முன்பே கவர்ந்தன."

—டாக்டர் டி. பி. சித்தலிங்கய்யா
இயக்குநர்
தொலைதூரக் கல்வி இயக்குநரகம்
புதுவைப் பல்கலைக் கழகம்
புதுவை—605 014.

"கடைவாச லைக்கட்டி கானல எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயில் கொக்குபோல் வந்தித் திருப்பார்க்கு
உடையாமல் ஊழி இருக்கலு மாமே"

—திருமூலர் திருமந்திரம்